அன்பு மலர் உ





# அருட்சுடர் வள்ளலார்

[அருட்சோதி வள்ளற்பெருமான் திருவரலாறும், அருட்பா விளக்கமும், உபதேசங்களும் அடங்கியது]



சுவாமி சுத்தானந்த பாரதியார்





## அன்பு நிலயம்

இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

உரிமை பதிப்புற்றது] 1940 [விலை அணு பன்னிரண்டு

புளூ அட்டை : அணு 14
கலிக்கா : ரூ. 1/-

4-3

## பதிப்புரை

அருட்சுடர் வள்ளலார் (ஸ்ரீ இராமலிங்க விஜயம்) இரண்டாம் பதிப்பை அருட் பெருமான் மலரடியில் வைத்து வணங்குகிறோம். இராமலிங்க வள்ளலார் நவயுகத்து நபி. நமது நாட்டின் அருட்சுடர். சுத்த சமரச சன்மார்க்கத்தை விளக்கி, எல்லா உயிர்களும் ஓர் அருட் குலமாக வாழும்படி செய்யவே வள்ளற் பெருமான் அவதரித்தார். அவர் பாடிய அருட்பா சர்வாத்ம சமரச வேதமாம். இதன் உண்மை நாளுக்கு நாள் நன்கு விளங்குகிறது.

இந்த அருள் வேதத்தின் பொருளும் பெருமையும், அதைப் பாடிய ஜீவகாருண்ய மூர்த்தியான அருட் சோதி வள்ளலார் பெருமையும் தமிழருக்கு நன்கு விளங்கவே இந்நூல் சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்களால் எழுதப்பெற்றது. அருட்பாவை ஆதாரமாகக் கொண்டே வள்ளலார் வரலாற்றை ஆசிரியர் எழுதியுள்ளார். அருட்பாவின் திருவுள்ளம் என்றே இந்நூலைக் கூறலாம். இப் பதிப்பில் பல திருத்தங்கள் செய்யப் பெற்றுள்ளன. "அருட்பா விளக்கம்" சேர்க்கப் பெற்றுள்ளது.

இவ்வரிய நூலை ஆர்வமுடன் அச்சிட்டுதவிய ஈப்போ அன்பர் ப. அ. கருப்பஞ் செட்டியார் அவர்களுக்கு எமது நன்றி. இவர் நல்ல தமிழறிஞர், சன்மார்க்கர், ஈகையாளர், அருட்பா நேயர். அன்பர் வாழ்க!

முதற் பதிப்பைப் போற்றி எம்மை ஊக்கிய தமிழன்பருக்கு நன்றி; தோன்றாத் துணையாய் எம்மை வழிநடத்தும் அருட்சோதி அப்பனுக்கு வணக்கம், வணக்கம்!

விக்கிரம ஞு }
ஆடி மீ கவ }

அன்பு நிலயத்தார்

# அருட்பெருஞ்சோதி !
# தனிப்பெருங்கருணை !!



“நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்துநெகிழ்ந் தன்பே
நிறைந்துநிறைந் தூற்றெழுங்கண் ணீரதனா லுடம்பு
நனைந்துநனைந் “தருளமுதே! நன்னிதியே! ஞான
நடத்தரசே! என்னுரிமை நாயகனே” யென்று
வனைந்துவனைந் தேத்துதுநாம் வம்மினுல கியலீர்!
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்!
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்
பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருண மிதுவே!” [றேன்

சாதியிலே மதங்களிலே, சமயநெறி களிலே,
சாத்திரச்சந் தடிகளிலே, கோத்திரச்சண் டையிலே,
ஆதியிலே யபிமானித் தலைகின்ற வுலகீர்!
அலைந்தலைந்து வீணேநீ ரழிதலழ கலவே!
நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே ஞான
நிருத்தமிடுந் தனித்தலைவர் ஒருத்தர்அவர் தாமே
வீதியிலே யருட்சோதி விளையாடல் புரிய
மேவுகின்ற தருணமிது கூவுகின்றே னுமையே!



ஸ்ரீ:

# நூன்முகம்

உலகம் உணரும் ஞானனந்த வாரிதியாய் இன்று புதுச்சேரியிலே தவம்பூண்டிருக்கும் அரவிந்தகோஷ் மகாமுனிவரது ஆசிரமத்திலே மோன நெறியில் யோகம்புரியும் சுத்தானந்த பாரதியாரையும் அப்பெரியாரது தமிழ்ப் பணியையும் அவர் தமக்கெனப் படைத்துக்கொண்டுள்ள அன்பூற்றெடுக்கும் அருள் தமிழ் நடையையும் தமிழுலகம் நன்குணரும். இனிமையும் எளிமையும் ஆழமும் அகலமும் அன்பின் செறிவும் பொருந்திய அந்நடையிலே பாரதியார் சமீபகாலத்திலே இயற்றித் தமிழராவார் உள்ளுருகி இன்புறக் கற்றுமெய்ப்பயன் பெறுமாறு வெளியிட்ட நூல்கள் மிகப்பலவாம். தமிழ்நாட்டு யோகியாகிய இப்பெரியார் தமது யோகத்தினிடையிலே அருட் செல்வத்தையன்றி வேறொரு பொருளைக் கருதுவாராயின் அது தமிழ்ச் செல்வமே. இராமலிங்கப் பிள்ளையார் பாட்டுக்கள் பல இப் பெரியார்க்கு அவரது உண்மையுருவை விளக்கின. வால்மீகர்க்கும் துளசிதாசருக்கும் கம்பநாடர்க்கும் முன்னின்று தனது சரித்திராமிருத சாரத்தை நடித்துக் காட்டிய இராமபிரான் போன்றே, பாரதியார் மனக் கண்ணின் முன்பு இராமலிங்க வள்ளலார் திருவிளையாடல்களின் உண்மைகள் பல தோன்றி நிலைபெற்று இச் சிறுபுத்தகத்தின் வாயிலாக வெளிவந்துள்ளன.

இராமலிங்க வள்ளலாரது திருச்சரிதம் புதுயுகத்துப் புண்ணிய புராணமே. இதனை ஆத்மானுபவத்தோடு கலந்து எழுதியுதவிய தமிழ்நாட்டு யோகி சுத்தானந்த பாரதியாருக்குத் தமிழுலகம் மிகவும் கடப்பாடுடையது.

அரசர் கல்லூரி,
புதுக்கோட்டை.

**நா. கனகராஜையர், B. O. L.**

அருட்பெருஞ்சோதி! தனிப்பெருங்கருணை!

# அருட்பிரகாசமாலை



திருப்பொதுவில் ஞானநடம் புரிகின்ற
தெய்வசிகா மணியின் சேயை,
இருட்குலத்தைப் பெருக்குகின்ற மடமையிடர்
மாற்றவந்த இரவி தன்னைக்
கருக்கணக்கில் லாதவனைக் காலனறு
காதகனல் மேனி யானை,
அருட்சமயத் தந்தையனை, அன்பருக்குத்
தாயானை யடைந்து வாழ்வாம்! க.

முருகென்னும் பொருள்விளங்கு முத்திளமை
யெழில்குலுங்கு முகத்தி னானைத்
தருணமழை போலடியார் தாகத்தைத்
தணிக்கின்ற தயைமிக் கானைக்
கருணைவிரி மனத்தானை, யெவ்வுயிருந்
தன்னுயிர்போற் கருது வானை,
குருமணியென் றுலகமெலாங் கும்பிடத்தக்
கோனைமனங் குறித்து வாழ்வாம்! உ.

எத்தனையோ தத்துவங்கள்! அத்தனைக்கும்
இசைவாகி யவற்றின் மேலாய்,
ஒத்துலகில் எல்லாரும் ஒருகுலமாய்
அருட்பொதுவிற் செழிப்புற் றோங்கச்
சுத்தசிவ சன்மார்க்க சங்கத்தை
முறைவகுத்த சோதி தன்னை,
சித்தெல்லாம் வல்லவனைத் திருஞான
தேசிகனைச் சிந்தை செய்வாம். ௩

ஊனுருவி, யுயிருருவி, யுள்ளுருவிப்
பாய்ந்தின்ப வூற்றெ டுக்கும்
தேனருவி யாகிவளர் தெய்வீகத்
திருவருட்பா செழித்த வூற்றை,
மானவர்க்குப் புதுவழியும் புதுயுகமும்
புதுவாழ்வும் வழங்கி னானை,
வானரசைக் கொணர்ந்தானைத் துரியவள
நாட்டரசை வழுத்தி நிற்பாம். ௪

பித்துலகர் பிதற்றுகின்ற மதவாதச்
சூதுகளைப் பிறகிட் டோட்டிச்
சுத்தான்ம வொருப்பாட்டின் உரிமைநெறி
முதன்முதலிற் றுலக்கி னானைச்
செத்தாரை யெழுப்புகின்ற ஞானசஞ்
சீவியினை, அமர வாழ்வின்
வித்தகனைத் தமிழ்வேத மகரிஷியை
விளம்பியுளம் பொங்கு வோமால்! ௫

தினைத்துணையும் பேதமின்றிச் சிவகா
ருண்யவழி சேர்ந்து வாழ,
மனத்திருளை மாற்றியறி வானந்தத்
துரியமலை வளநாடேறி,
நினைத்திடவும் முடியாத நிலைக்குநம்மை
யழைத்தானை, நேரிலோர்நாள்
அனைத்துலகும் அறிவானைத் தமிழரினும்
அறியானை, யணிந்து வாழ்வாம். ௬

பலமதங்கள் ஒன்றெனவே வடக்கினிலு
மேற்கினிலும் பகருமுன்பே,
தலமுயருந் தமிழகத்தில் அருளான்மச்
சமரசத்தை நாட்டி ஞானி,
நலமுயருங் குருமணியை நவயுகத்து
நபிமணியை இன்ப மோங்கி
உலகுயருந் தவமணியை, உண்மையறி
வொளிமணியைப்போற்று வோமால்! ௭

மருட்சமய வாதுகளும், மாமாலச்
சடங்குகளும், மண்ணைக் கௌவ
இருட்சாதி வேற்றுமைகள் இடர்செய்யும்
பிரிவினைகள் இரிந்து தேய, [செய்
பொருட் செறிந்த மணிவாக்கும், பொதுநலஞ்
புண்ணியமும் பூண்டெழுந்த
அருட்சோதி ராமலிங்கப் பெருமானின்
அடிமலர்கள் முடியில் வைப்பாம்!

இராமலிங்க ஜயந்தி
29-9-1935. } சுவாமி சுத்தானந்த பாரதியார்.

# தமிழ்நாட்டின்
# அருட்சுடர்

## க. சிற்சபை அப்பன்

சிதம்பரத்தை நினைத்தால் உள்ளம் சிலிர்க்கிறது. தத்துவவடிவான அந்த சிற்பச்செல்வம் எதிரே நிற்கிறது. அதிற் பரவெளி தோன்றுகிறது; சிற்சபை விளங்குகிறது. அங்கே ஞானநடம் புரியும் நடராஜப் பெருமான் திருவுரு நமது உள்ளத்தில் நடம்புரிகிறது. அருவும், உருவும், அருவுருவுமான மூன்று தன்மையிலும் இறைவனை அங்கே நினைக்கிறோம், துதிக்கிறோம், காண்கிறோம். பொதுநடத் தந்தையின் முன்னிலையில் நின்றால்....ஆ, எத்தனை இன்பச்சிந்தனைகள் உள்ளத்தில் வெள்ளம்போலப் பொங்குகின்றன! நமது தமிழும், நம் தமிழ்ப் பெரியார் பெருமையும், நமது தமிழ்மறையின் சிறப்பும் நம்முன் கதிரோங்கி விளங்குகின்றன. பதஞ்சலி, வியாக்கிரபாதர், திருவுடை அந்தணர், உபமன்யு, வியாசர், சுகர், சௌனகர், சூதர் முதலிய முனிவர் கூட்டம், நம்மைச்சுற்றி நிற்பதுபோ லுணர்கிறோம். திருமூலர், திருநீலகண்டர், நந்தனார், சேக்கிழார் முதலிய தெய்வப்புலவரின் அன்புக் கனலில் மூழ்குவதுபோல் உணர்கிறோம். ஞானசம்பந்தரும், அப்பரும், சுந்தரரும் பாடிய தேவாரத் திருமறைகள் நம்மைச்சுற்றி ஒலிக்கும் போது....ஆ, அந்த இன்பத்தைச் சொல்ல வாயுரையுண்டோ! பொன்னம்பலக் கிழவராக வந்து செங்

தமிழ்த் திருவாசகத்தை ஆர்வமுடன் எழுதிய அருளப் பனை நினைக்கிறோம். தமிழ்ப் பாசுரத்தில் அவனுக் கிருக்கும் ஆர்வந்தான் என்னே! அத்தகைய ஆர்வம் இன்று நம் தமிழரைப் பற்றாதா என்று வேண்டு கிறோம். பொன்னம்பலப் படியில் சிவபிரானே வைத்த திருவாசகத்திற்கு "இதுதான் பொருள்" என்று சோதியாய் அவனுள்ளே மறைந்த மாணிக்க வாசகரின் பதியன்பை எண்ணி நமது உள்ளம் கரை கிறது!

> வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
> ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
> கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
> வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே!

என்று நம்மை யறியாமற் பாடுகிறோம்.

சிதம்பர ரகசியத்தை நன்றாக அறிவோமானால், நமது உடலமே திருக்கோயிலாகும்; உள்ளமே சிற் சபையாகும்; இறைவனே அங்கே திருவடி தூக்கி நடமாடுவான்; அவனது துரியானந்தத் தாண்ட வத்தை அருள்விழியால் உணர்வோம்; ஆறுகளெல் லாம் கடலையே நோக்குமாறுபோல, உலகிலுள்ள ஆன் மாக்களெல்லாம், சமயங்களெல்லாம் ஒரே அருளிறை வனை நோக்கிச் செல்லக் காண்போம். சாதிசமய வேறுபாடுகளெல்லாம் மாந்தர் மதிமயக்கம், இறை வன் ஒருவன், உயிர்கள் அவனது திருமேனி என்று காண்போம். பொதுநடத் தந்தையாகிய எம்பெரு மான் சுத்தசமரச சன்மார்க்க நித்திய வடிவாகக் காட்சியளிக்கிறான். உலகெலாம் ஓதி உணர்ந்து வழி படத்தக்க ஒருவன் எம் அருளப்பன். நம் செந்

தமிழ்ச் சிற்பிகள் அப்பனுக்கு எவ்வளவு அழகான வடிவமைத்திருக்கின்றனர்! அஃதோர் ஓவியக்காவியமே! அதைக் கண்டதும்,

பேதமுற மெய்ப்போத வடிவ மாகிப்
பெருங்கருணை நிறம்பழுத்துச் சாந்தம் பொங்கிச்
சீதமிருந் தருள்கனிந்து கனிந்து மாறச்
சின்மயமாய் நின்மலமே மணந்து, நீங்கா
ஆதரவோ டியல்மௌனச் சுவை மேற் கொண்டு
ஆனந்த ரசமொழுகி யன்பா லென்றும்
சேதமுற தறிஞருளந் தித்தித் தோங்குஞ்
செழும்புனிதக் கொழுங்கனியே தேவ தேவே!

என்று, நமது ஆர்வம் வாய்விட்டு அலறுகின்றது! அம்பலத்தரசே! அருமருந்தே! ஆனந்த விண்ணே! சற்குரு மணியே! ஆணவமாகிய முயலகனை மிதித்து நசுக்காய்! மான்போல் துள்ளும் மனத்தை யடக்காய்! துரியந்தன்னில் தூக்கிய திருவடியால் என்னைக் காவாய்! மனதின் கனவொழிந்து துரியங்கடந்த ஞானானந்த மருளாய்! ஐயனே, என் அப்பனே! நீயே யனைத்தும்! ஐந்தொழிலும் நின் ஆடலே! நினது டமரகநாதம், சப்த ப்ரம்மம், உலகின் காரணம்; நீ ஓங்காரத்தால் உலகைப் படைத்தாய்; ஞானக் கனலை இடக்கரந் தாங்கினை; அக்கனலில் எனது மடமை, பொய்மை, அகந்தை, ஐயம், அச்சம் எல்லாம் அழிக! நின் நித்திய, உபசாந்தக் கரங்களால் என்னை ஆசீர்வதிப்பாய்! அஞ்சலிக்கரத்தால் அச்சந் தீராய்! என் அன்பிற் கலந்தொளிரும் அருளமுதே!" நினது கிரியா சக்தியான கங்கை பாய்ந்து என் வாழ்வைப் பேரின்பச் சோலையாக்குக! சிவானந்தமாகிய சந்தி

ரன் என் உள்ளத்தில் உதயமாகி, எனது இருளை விழுங்குக! தலைவனே, எனது அகந்தைப் புலியைக் கிழித்து, அதன் உரியை நீ யணி! எனது மமதை யானையை யுரித்துப் போர்வை யணி! பாச வெறிகளும், வீரியத் தினைவுகளும் எரிந்து சாம்பலான என் யாக்கைத் - தில்லை - வனத்தில் எனது இதயச் சிற்சபையில் சச்சிதானந்தத் திருநடம் புரிவாயாக! அப்பனே!

பொங்குபல சமயமெனும் நதிக ளெல்லாம்
 புகுந்துகலந் திடநிறைவாய்ப் பொங்கி யோங்கும்
கங்குகரை காணாத கடலே! எங்குங்
 கண்ணுகக் காண்கின்ற கதியே! அன்பர்
தங்கநிழல் பரப்பி, மயற் சோடை யெல்லாந்
 தணிக்கின்ற தருவே, பூந்தடமே, ஞானச்
செங்குமுத மலரவரு மதியே, எல்லாஞ்
 செய்யவல்ல கடவுளே தேவ தேவே!

என்று அடியார் மனமுருகும் அத்திருச் சந்நிதியில் இன்றொரு புதுமை!

---

## உ. குழந்தை நகைத்தது

அன்பர் குழாம் தேவார திருவாசகம் முழங்குகின்றனர் :

அரைசே பொன்னம் பலத்தாடும்
அழதே! யென்றுன் னருள்நோக்கி,
இரைதேர் கொக்கொத் திரவுபகல்
ஏசற் றிருந்தே வேசற்றேன் ;
கரைசே ரடியார் களிசிறப்பக்
காட்சி கொடுத்துன் னடியேன்பாற்
பிரைசேர் பாலில் நெய்போலப்
பேசா திருந்தால் ஏசாரோ !

என்று முறையிடும் அன்பரிடையே ஒரு மெய்யன்பர் உள்ளுருகி நிற்கிறார். உடலரும்பி விதிர்விதிர்த்து, கண்ணீர் ததும்பி, உள்ளம் வெதும்பி அம்பலவாணனை, அடியார்க் கெளியனை, ஆனந்தத் தேனை, அருட்சுடர் வடிவை, ஐந்தொழிற்கரசை எண்ணி யெண்ணித் தன்னைமறந்து, அதோ நிற்கும் அன்பரே நம் இராமைய பிள்ளை. அவர் கையில் அமுதக்கனி யொன்று மின்னுகிறது ! பொற்றளிர் மேனி ! கருணை வடிவம் ! அருள்மண மலரிற் கனிந்த அற்புதக் கற்பகக் கனியாகிய அச்சேயின் அழகு, எழில், முல்லைபோன்ற முறுவல், செஞ்சுடர் முகம், பிஞ்சிளந் திரு, காந்த மலர் விழி ஆகிய இவை நம் கண்ணையுங் கருத்தையுங் கவர்கின்றன. இராமைய பிள்ளை தம் மனைவி சின்னம்மையாருடனும், சபாபதி, பரசுராமன், சுந்தரம்மாள், உண்ணாமுலை ஆகிய நான்கு மக்களுடனும் இன்று நடராஜ தரிசனத்திற்கு வந்திருக்கிறார். அவர் கரத்தில் விளங்கும் அன்புப் புதல்வனே சிவனருளாற் சின்

னம்மைக்கு வாய்ந்து, உலகுய்ய வந்த நம் இராம லிங்கப் பெருமான். பெரியார் அப்பைய தீட்சிதர் நடராஜப் பெருமானுக்கு அருச்சனை செய்து கற்பூரங் காட்டுகிறார். "ஹரஹர மஹாதேவ! சிற்சபேசா! சிவ சிதம்பரம்!" என்று அன்பர் போற்றி செய்கின்ற னர். அந்த ஆனந்தக் காட்சிக்கிடையே, அப்பொன் னம்பலத்தில் மிளிரும் மாணிக்கம்போன்ற நம் இராம லிங்கம் என்ன செய்கிறான்? சிவகாமி மணாளன், கனகசபேசன், ஆனந்த நடன சிகாமணி யான இறைவனைத் தனது காந்த விழியால் இமையாது குறித்து அவன் அருள்முகத் தின்முன் ஆடும் கற்பூரச்சுடரைக் கண்டு அரு ளானந்தம் பொங்கி நகை கொப்புளிக்கிறான்! தனது உடலப்பன் கரத்திலிருந்துகொண்டு, தனது உயிரப்பனுடன் உள்ளுறவு பேணுகிறான்! அந் நாட்டம் அருள்ஞானசம்பந்தக் குறிப்பேயன்றோ!

தந்தையைக் கண்டேனுன்; சாகா வரம்பெற்றேன்;
சிந்தை களித்தேனென் றுந்தீபற;
சித்தெல்லாம் வல்லேனென் றுந்தீபற!

என்று தன் ஆன்மத் தந்தையுடன் ஞான வுறவாடி, அறிவுத் தேனுண்டு களிபொங்குகிறானே நம் அருட் சேய்!

அன்பருளக் கோயிலிலே அமர்ந்தருளும் பதியே,
அம்பலத்தி லாடுகின்ற ஆனந்த நிதியே!
வன்பருளத் தேமறைந்து வழங்குமொளி மணியே,
மறைமுடியா கமமுடியின் வயங்குகின்ற மதியே!
என்பருவங் குறியாம லென்னைவலிந் தாட்கொண்(டு)
இன்பநிலை தனையளித்த என்னறிவுக் கறிவே!

முன்பருவம் பின்பருவங் கண்டருளிச் செய்யு
முறைமைநின தருணெறிக்கு மொழிதலறிந்திலனே.

அந்தோவீ ததிசயமீ ததிசயமேன் புகல்வேன்—
அறிவறியாச் சிறியேனை அறிவறியச் செய்தே,
இந்தோங்கு சடைமணிநின் அடிமுடியுங் காட்டி,
இதுகாட்டி யதுகாட்டி யென்னிலையுங் காட்டிச்
சந்தோட சித்தர்கடந் தனிச்சூதுங் காட்டி,
சாகாத நிலைகாட்டிச் சகசநிலை காட்டி,
வந்தோடு நிகர் மனம்போய்க் கரைந்தவிடங் காட்டி
மகிழ்வித்தாய் நின்னருளின் வண்மையெவர்க்குளதே!

என்று மழலைப் பருவத்திற்றானே தனது தனிக் கருணைத் தந்தையை உள்ளெண்ணி உருகுகின்றானே! அந்த ஞானசம்பந்தக் களிப்பால் அருணகை பூத்தானே! கற்பூர தீபாராதனை செய்யும் அப்பைய தீட்சிதருக்கே அத்திருவருட்குறிப்பு குறிப்பாயது; அவர் வியந்தார்; “இக்குழந்தை அம்பலவாணரின் அருட்குழந்தையே” என்று போற்றி வாழ்த்தினார்; பிள்ளையவர்களைக் குடும்பத்துடன் தமது மனைக்கு அழைத்துச் சென்று இருத்தி அருத்தி விடைகொடுத்தனுப்பினார்.

—

## ௨. மாசற வாழ்ந்தார்

இத்திருவருட் சேய் அவதரித்தபோதே உலகன்னை உளஞ் சிலிர்த்துப் புதிய முறுவல் பூத்தாள். இச்சேயின் பிறப்பும் அற்புதம்! சிதம்பரத்திற் கருகேயுள்ள மருதூர் செல்வோம்.

அங்கே இராமையபிள்ளை கல்விச்செல்வர்; கருணைச் செல்வர்; சிவனை மறவாத் திருவருட் செல்வர்; நல்லறம் போற்றும் இல்லறச்செல்வர்; அவர் சிதம்பர நினைப்புடன் மருதூரில் வாழ்வாங்கு வாழ்ந்து வந்தார். அவர் ஐந்து மனைவியரை இழந்து, சின்னம்மையை ஆருவது மனைவியாக மணந்தார். பொன்னேரிச் சின்னம்மை, கணவனுக்கேற்ற துணைவி. இருவரும் அன்பும் அறமும் அரனடி நேயமும் தூயவொழுக்கமும் தொண்டர் பணியும் பூண்டு, வந்ததைக் கொண்டு சிந்தையினுவந்து, மனையறந் தாங்கி மாசற வாழ்ந்துவந்தார்கள். கருணீக குலதிலகரான இராமையபிள்ளை கிராமக்கணக்கர்; தமிழாசிரியர். இரண்டு தொழில்களிலும் கிடைத்த வருவாயைக் கொண்டு அவர் எளிய வாழ்வு வாழ்ந்துவந்தார். சின்னம்மை நல்ல குணமணி; நாணுடுத்த நல்லாள்; கற்பும், பொற்பும், கடவுளன்பும், கணவன் பணியில் கருத்தும் கவனமும், அடியார் நேயமும் கொண்ட திருமதி; உயிர்க்கருணை, அடக்கம், இன்சொல், இவை கமழும் நிறைமலர்க் கொம்பன்னாள்.

இத்தகைய நற்குணச் செல்வியுடன் இராமையபிள்ளை காத்த மங்கல மனையறத்திற்கு இன்பக்கனிகளாக நான்கு செல்வர் தோன்றினர்: சபாபதி, பரசு

ராமன் என்னும் புதல்வர்; சுந்தரம்மாள், உண்ணு முலை யென்னும் புதல்வியர். இவர் மனைவாழ்வு தழைத்து வருநாளில் ஒரு சம்பவம் நடந்தது.

---

## ௪. சிவயோகியார்

நண்பகல். இராமைய பிள்ளை அலுவலாக வெளியே சென்றிருந்தார். செல்விருந்தோம்பி வரு விருந்து பார்த்திருக்கும் சின்னம்மையார், திடீரென முதிர்ந்த சிவயோகியாரொருவரைத் தம் மனைமுன் கண்டார். தூய வெண்ணீற்றுத் திருமேனி; தலையிலுங் கழுத்திலும் அக்கம்; இடையிற் புலியுரி; கையில்யோக தண்டம்; நாவில் ஐந்தெழுத்து; பழுத்தவுள்ளம் முகமலரில் விளங்குகிறது! அச் சிவயோகியாரைச் சின்னம்மையார் வணங்கி வரவேற்று, இன்சொற் கூறி, மலரடி கழுவி, நன்மணை யிருத்தி, நாண்மலர் தூவிப் பணிந்து பின்வருமாறு போற்றினார்:—"பரமனுருவாய் எழுந்த பெரியோய், என்ன மாதவஞ் செய்ததிச் சிறுகுடில்! தங்கள் புண்ணிய வரவால் இது புனிதமுற்றது! ஏழ்பிறப்பும் எம்மரபு உய்ந்தது! அடியேமை யாட்கொள்ள அருள் கொண்டுற்ற அரனே, யான் அன்பிற் படைக்கும் அருஞ்சுவை வழிபாட்டை ஏற்றருள்க!" பிறகு தலைவாழையிலை பரப்பி, அறுசுவை யுண்டி அன்போடளித்தார். யோகியார் அமுதருந்தினார்; அம்மையாரின் அன்பும், அடியார் நேயமும், சிவப்பற்றும், அருங்குணப் பெருந்தகையுங் கண்டு மகிழ்ந்து, புகழ்ந்து, வாழ்த்தித் திருநீறளித்தார். "முகமலர்ந்து விருந்தோம்பும் அமுத சுரபியே! நின் புண்ணிய வாழ்வும், புனிதச் செயலும், அளவற்ற அன்பும், அரனடி நேயமும், அடியார் வணக்கமும் என் மன மகிழ்வைத் தூண்டின. இத் திருநீறே யான் தரும் கைம்மாறு! இதைப் பூசி யுட்கொள்வாயாக! அதன்

பயனுகவொரு கடவுட் புதல்வன் சுத்த சமரச சன்மார்க்கத் தந்தையாகத் தோன்றி, உலகில் அருளாடல்புரிவான்" என்று ஆசீர்வதித்து மறைந்தார் சிவயோகியார். அம்மையார் வணக்கமுடன் திருநீற்றை யேற்றுச் சிவசிந்தையுடன் அணிந்து உட்கொண்டு, தன் கொழுநன் வந்ததும் நிகழ்ந்ததை யுரைத்தார். பிள்ளையவர்களும் திருவருட் செயலை வியந்து, இன்பவெள்ளத் திற்ருேய்ந்தார். சின்னம்மை வயிற்றில் அருட்சோதி புகுந்தது.

---

## ரு. இராமலிங்கம் பிறந்தான்

பத்துமாதம் அன்னை வயிற்றிற் கோயில்கொண்ட பொன்னம்பலக் குழந்தை உலகொளியைக் காணப் போகிற தருணம்—கலி 4925, சுபானு ஹூ, தட்சிணாயனம், மாரிகாலம், புரட்டாசி மீ, 21-உ ஞாயிற்றுக் கிழமை (5-10-1823), உதயாதி 29¾ நாழிகை, மீன லக்னம். சித்திரை நட்சத்திரம் உச்சியினின்று புன்னகை பூத்தது. உலகை இடர்ப்படுத்தி வேற்றுமைக் கந்தலாக்கிய இருட்சாதி மதங்கள் தலைசுழன்றன. மனிதனின் ஆத்ம சுதந்தரத்தை அடிமைப்படுத்திய சாத்திரக் குப்பைகளும்; கோத்திரப் பொய்களும், கலைக்கற்பனைகளும், விலையொழுக்கங்களும், அகங்கறுத்து முகமினுக்கும் போலியாசாரங்களும் ஆடிக் காற்றில் தூசிபோலப் பறந்து தவித்தன; நிலமகள் சுதந்தரப் புன்னகை புரிந்தாள். உலகெலாம் ஓர் இன்பச் சிலிர்ப்பெடுத்தது. பாரததேவி புதுயுக வாயிலில் அருட் செங்கோல் ஏந்தி நின்றனள். அக்காலமே தயானந்தர், பரமஹம்ஸர்போன்ற அருளாளர் எழுந்து விளங்கினர். அப்போதே நமது அருந்தமிழ் செய்த பெருந்தவப் பயனாக அருள்வழி காட்டி மனிதமரபையே உய்விக்க, வள்ளற் பெருமான் திருவவதரித்தார். ஈன்றபொழுதே சான்றோனைக் கண்ட தாயுந் தந்தையும் மகிழ்ந்தனர்; அடியார்க்கமுதிட்டனர்; திருவிழாக் கொழித்தனர். பெரியோர்கள் இவ்வரும் புதல்வனை வாழ்த்தினர்; குருவருள் கொடுத்த திருவருள் மைந்தனுக்கு இறைவனைப் போற்றி, "இராமலிங்கம்" என்னும் இன்பப் பேரைச் சூட்டினர். இராமலிங்கத்தின் இராசிச் சக்கரம் அடியில்வருமாறு:—

# திருவருட் பிரகாசர் ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| ல | | சனி | குரு |
| | இராசி | | அங் கேது |
| ரா | | | |
| | | புதன் சந் | சுக் சூரி |

இந்த ஜாதகத்தை ஓர் அன்பர் கணித்து அடியில் வருமாறு பலன் குறித்துள்ளார் :—

உதயம் மீனலக்னம் ; நாலில் குரு ; எட்டாவது வீட்டில் புதனும் சந்திரனும் ; செவ்வாய், துலாத்தில்; சுக்ரனும் சூரியனும் ஏழாமிடத்தில். இந்த ஜாதகமுடையோன் சிரஞ்சீவி ; இவன் உயிர் போவதில்லை ; உலகனைத்தும் வள்ளலாய் வாழுவான் ; தைரியவான்; கனதனங் கருதான், சுழுத்தி நாட்டமுடையான் ; உலகுயிரின்பால் பேரிரக்கங்கொண்டவன் ; பத்தாவது ஆண்டில் ஒன்றிற் காதலனாவான் ; கற்பமும், உலகத்தைத் திருத்தும் குணமும் சக்தியாலுணர்வான். முப்பதாம் ஆண்டில் பிறப்பிறப்பற்ற நிலையடைவான். 40-ம் ஆண்டிற் கைவல்ய ஞானம் பெறுவான்; ஞானசித்தியால் 50-ல் பொன்னுடலாகிப் பொலிவான். இவன் ஞானவுடலெடுத்த பெரியோன் ; மந்திரம், யோகம், வைத்தியம், வாதம், நூல் நுணுக்கம்— சிந்தையில் எண்ணியவுடனே எய்துவான்.

இவ்வாறு கணிகள் ஐயனின் நாளையுங் கோளையுங் குறித்துத் "தெய்வப் புதல்வன் திருவவதரித்தான்" என்றனர். மருதூர் முழுதும் இக்குழந்தையின் பேச்சே! என்? அன்று முதல் ஊர் செழித்தது; பயிர் செழித்தது; இன்பஞ் செழித்தது; மக்கள் உள்ளஞ் செழித்தது; ஒற்றுமை செழித்தது. இக் குழந்தையின் பெருமையே செழுந்திரு விளைத்த தென மகிழ்ந்து ஊராரெல்லாரும் பேரன்புற்று இராம லிங்கத்தைப் பாராட்டிச் சீராட்டி வந்தனர்.

—

## ௩. தமிழ் காத்தது

உலக வாழ்வு இன்பதுன்பமென்னும் மேடுபள்ளங்கள் மேவியது. குலவிளக்கான அருள் மைந்தனின் இன்பம் நிறைந்த அம் மங்கல மனைவாழ்வில் மங்குல் படர்ந்தது! இராமைய பிள்ளை சிவனடி சேர்ந்தார்; குடும்பம் இடருற்றது. வந்த விதியை நொந்தென்? சிவன் செயலென்று மனதாறிச் சின்னம்மையார் மக்களுடன் தமது பிறப்பிடமான பொன்னேரியில் தம் அன்னையின் காப்பிற் சின்னாளிருந்தார். பிறகு குடும்பம் மூத்தமகன் சபாபதியுடன் சென்னையிற் குடியேறியது. அங்குச் சபாபதி, அரிய தமிழ் வாணரான காஞ்சி சபாபதி முதலியாரிடம் முறையாக முத்தமிழ் பயின்று தமிழாசிரியராகவும், சிவபுராண விரிவுரையாளராகவும் தொழில் நடத்தி, வந்ததைக் கொண்டு குடும்பத்தைத் தாங்கிவந்தார். பெரிய புராணப்பிரசங்கத்தில் அவர் பெயர்பெற்றோங்கிப் பல செல்வரின் ஆதரவையடைந்தார். அவரது குடும்பத்தைத் தமிழ் காத்தது.

---

## எ. கடவுள் கற்பித்தார்

நம் பெருமானுக்கு ஐந்தாண்டானது; இறைவனருளால் முற்றறிவுடன் பிறந்த இயற்கை ஞான வள்ளலுக்கு, வீட்டிலுள்ளோர் கற்றறிவு புகட்டத் தொடங்கினர். கல்வி தொடங்கியதும், தமையனார் சபாபதி பிள்ளையே தம் இளவலுக்குக் கண்ணுங் கருத்துமாகத் தமிழ்மொழி பயிற்றினர். தம்பியைத் தக்க புலவனாக்க மிக்க ஆவல்கொண்டு, முறையாக நிகண்டு, சதகம், அந்தாதி, நன்னூல் முதலிய நூல்களைக் கற்பிக்கலானார். ஆனால் நமது அருளறிவாளன் இப் புத்தகப் படிப்பிற் கருத்தூன்றுவதில்லை. இது கண்ட அண்ணல் தம்மிட மின்றேல், தம் ஆசிரியர் சபாபதி முதலியாரிடமாவது ஒழுங்காகப் படிப்பானென் றெண்ணி ஏற்பாடு செய்தார். அங்கும் மேற்படியே. மனம் வேறுபட்டிருந்தார் நம் இயற்புலவர். "படிப்பில் கவனமில்லை; குறிப்பின்றிச் சுற்று கிறானே; இவன் எப்படி முன்னேறப் போகிறான்?" என்று அண்ணல் வருந்தினர். நம் பிள்ளையாரின் உள்ளே வளரும் அருட்புலவன் அவர்களுடைய புற விழிகளுக்குப் புலப்படவில்லை. நம் பிள்ளையார் செய்ததென்ன? தாமே தமது சத்திய விண்ணப்பத்தில் விளக்குகிறார்:

"இயற்கை யுண்மைக் கடவுளே! அறிவார் அறியும் வண்ணங்களெல்லாமுடைய பேரருட் சோதிப் பெருந்தகைக் கடவுளே! குமாரப் பருவத்திற்றானே, உலகிற் சிறுவர்களுடன் கூடிச் சிறு விளையாட்டியற்றல், சிற்றுண்டி விழைதல், அதிசயம் பார்த்தல்,

அசங்கியம் பேசல், ஆவலித்தழுதல், சிறு சண்டை செய்தல், சிறு குறும்பியற்றல், தன்வசத்துழலல், தாய்வயிற் சலித்தல் முதலிய குற்றங்களில் என்னைச் சிறிதுஞ் செலுத்தாமல், ஒருசிறிது அறிவு விளங்கப் புரிந்து, இடந் தனித்திருத்தல், இச்சையின்றி நுகர்தல், ஜபதபஞ் செய்தல், தெய்வம் பரவல், பிறவுயிர்க்கிரங்கல், பெருங்குணம் பற்றல், பாடிப் பணிதல், பத்தி செய்திருத்தல் முதலிய நற்செய்கைகளில், என்னைச் செலுத்திய தேவரீரது பேரருட் பெருங் கருணைத் திறத்தை என்னென்று கருதி, என்னென்று உரைப்பேன்! எல்லாமானவராயும் ஒன்றுமல்லாதவராயும், எல்லா அண்ட சராசரங்களின் அகத்தும் புறத்தும் நிறைந்து விளங்குகின்ற தனித் தலைமைக் கடவுளே! குமாரப் பருவத்தில், என்னைக் கல்வியிற் பயிற்றும் ஆசிரியரை யின்றியே, என்றிறத்திற் பயின்றறிதற் கருமையாகிய கல்விப் பயிற்சியை எனது உள்ளகத்தே யிருந்து பயிற்றுவித் தருளினீர். இடம்பத்தையும் ஆரவாரத்தையும், பிரயாசையையும், பெருமறைப்பையும், போதுபோக்கையும் உண்டுபண்ணுகிற ஆரிய முதலிய பாஷைகளில் எனக்கு ஆசை செல்லவொட்டாது, பயிலுதற்கும், அறிதற்கும், மிகவும் இலேசுடையதாய், பாடுதற்கும், துதித்தற்கும் மிகவும் இனிமையுடையதாய், சாகாக் கல்வியை யிலேசில் அறிவிப்பதாய்த் திருவருள் வலத்தாற் கிடைத்த தென்மொழி ஒன்றனிடத்தே மனம் பற்றச்செய்து, அத் தென்மொழியாற் பலவகைத் தோத்திரப் பாட்டுகளைப் பாடுவித்தருளினீர். அச்சிறு பருவத்திற்றானே ஜாதியா

சாரம், ஆசிரம ஆசாரம் என்னும் பொய் யுலகாசாரங் களைப் பொய்யென் றறிவித்து, அவைகளை அனுட்டி யாமல் தடைசெய்வித்து, அப்பருவம் ஏறுந்தோறும், என தறிவை விளக்கஞ் செய்து என்னை மேனிலையில் ஏற்றி ஏற்றி நிலைக்க வைத்தருளினீர்."

---

## அ. கந்தகோட்டத்தில்

இதுதான் நமது பெருமானின் பிள்ளைப் பருவக் கதை. தமது ஒன்பதாவது வயதிலேயே அவர் அகத்தியர் முதலான முனிவர் பாடல்களை ஓதாமலே பாடும் வளம் பெற்றிருந்தார். முறையாகப் பாடம் படிக்கவில்லையென்று வீட்டார் குறைசொல்லுகையில் நம் இளம்பிரான் புரிந்துவந்த தென்னே! அவர்கள் குறை சொல்லுகிறார்களென்று முணுமுணுத்தாரா? அவமதித்தாரா? தளர்ந்தாரா? இல்லை. உள்ளே ஆண்டவன் தூண்டிப் பொலிவித்த அருளறிவில் உறுதிகொண்டார். மற்றவர்களைப் போலக் கற்று, மற்றவர்போல வாழ்வை வயிற்றிற் கிரையாக்கவோ அவர் பிறந்தார்! அருளால் ஆருயிர் மக்களுக்கு அருள்நெறி விளக்கித் தமது இனிய அருட் பாலூற்றை யாழுங் குழலும் அமுதுங் கைக்கும்படியான தமிழிசையுடன் சுத்த சமரச சன்மார்க்க நதியாகப் பாய்ச்சி, உலகில் ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமையை நாட்டவன்றோ அவர் அவதரித்தார்! ஆதலின் அவர் இயல்பிலேயே தமது வாழ்வின் அருட்பணியில் கருத்தை நாட்டினார். செந்தமிழ்த் தெய்வமும், தகப்பன்சாமியும், குகனுமான முருகனை வழிபடு கடவுளாகக்கொண்டு, அன்பாலுருகி இன்பப் பாமாலை தொடுத்து மனமார அணிவித்து வந்தார். மாலைதோறும் கந்தப்பெருமான் கோயிலில் பரவசம் பொங்கித் ததும்பும் பாமாலை புனைந்து வழிபடும் நம் குமரனைக் காணலாம். நம் அருட்பெருஞ் செல்வர் முருகனைப் பலவகையால் மனமுருகி

வழுத்திவந்த அருமையை ஐந்தாம் திருமுறையிற் காணலாம். கலியுக வரதனுன முருகப் பெருமானிடம் நம் இளங்குமரன் உருகி வேண்டியதென்ன ?

"தேசிக சிகாரத்னமே! நின்பதம் எனது உளத் தோங்கின் திருவும், நற்செயலும், திறனும், இன்பமும் ஓங்கும். வள்ளலே, உன் அன்பர் கூட்டத்தில் என்னைச் சேர்! என் தந்தையே, தாயே, என் அறிவே, என் இன்பமே! காமம், வெகுளி, லோபம், மோகம், மதம், ஆங்காரம், மச்சரம் முதலிய தீயர் என்னை அணுகா தருள்! நிராசை, சாந்தம், உதாரம், சுத்த மனம், அலைவற்ற சிவஞானம் இவற்றை அளித்தருள்!"

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
　　உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
　　உறவுகல வாமை வேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும்; பொய்மை
　　பேசா திருக்க வேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டுமத மானபேய்
　　பிடியா திருக்க வேண்டும்
மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டும்; உனை
　　மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும்; நோயற்ற
　　வாழ்வினன் வாழ வேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
　　தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
　　சண்முகத் தெய்வமணியே!

"நான் ஒருவரிடம் ஈயெனக் கேட்காது, கேட்டவர்க்கு இல்லையென்று சொல்லாதிருக்க வேண்டும். பிறர் பொருளை நயக்கக்கூடாது; பிறரைத் தீங்கு சொல்லாத் தெளிவும், உன் புகழ் பேசுவோர் உறவும் தருவாய்! அப்பனே, நின் சீர் பேசும்வாய் தெள்ளமுத முண்டுவந்த திருவாய்; நின்பதங் கருதும் நெஞ்சே சுகரூபமானது. கந்தவேளே! என் உளமும் வசமில்லை; வினையும் விடவில்லை; உன் துணையின்றி உற்ற துணையில்லை; இளையன், இவனுக்கு அருளவேண்டுமென்று உன்பால் இசைப்போருமில்லை; ஏழையேனுக்கு நீ அருள் புரிந்தால் எதிர்நின்று தடுப்போருமில்லை; இரப்போர்க்கு நீ இல்லையென்பதுமில்லை; உன் அருள் குறைவதுமில்லை; நீ வன்மனத்தவனுமில்லை; என் உயிர்க்குயிரே! எத்திக்குந் திக்கும் இன்பமே, ஆனந்த போகமே, யோகமே, ஏகமே, முத்தி முதலே, மெய்ஞ்ஞான மூர்த்தியே! உன் அடியலாற் பிறரை நாடா விரதமே கொண்டேன். நின்னடி நம்பினோர் அவலப்படுவரோ?"

வன்பெருநெ ருப்பினைப் புன்புழுப் பற்றுமோ?
வானையொரு மான்தாவுமோ?
வலியுள்ள புலியையோர் எலிசீறு மோ?பெரிய
மலையையோர் ஈச்சிறகினால்
துன்புற அசைக்குமோ? வச்சிரத் தூணொரு
துரும்பினாற் றுண்டமாமோ?
சூரியனை யிருள்வந்து சூழுமோ? காற்றின் மழை
தோயுமோ? இல்லை யதுபோல்,
அன்புடைய நின்னடியர் பொன்னடியை யுன்னுமவர்
அடிமலர் முடிக்கணிந்தோர்க்

கவலமுறு மோகாமம் வெதுளியுறு மோமனத்
　　தற்பமும் விகற்பமுறுமோ!
தன்புகழ்செய் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
　　தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
　　சண்முகத் தெய்வமணியே!

---

## ௯. மிஞ்சி விடுவான்

இவ்வாறு முருகனை வழுத்தி வழிபட்டு வந்த நமது அன்புப் பெருமான் உட்கனிவை யாரே காண் பார்? கற்குமுன் கவிபொழியும் இக்காள மேகத் தைக் கண்டார் சபாபதி பண்டிதர்; "குட்டுதற்குப் பிள்ளைப் பாண்டியனில்லை; குறடுகொண்டு காதை வெட்டுதற்கு வில்லியில்லை; இந்த வயதில் கற்குமுன் கவி பாடுவதாவது!" என்று கனன்றார்; எம்பிரானின் இனிய அருள் வாக்கினின் றரும்பும் தெய்வ மலர்களை அவர் கண்ணாரக் கண்டாரெனினும், அதன் நறு மணத்தை இன்புற நுகராது..........."எடுக்குமுன் இப்படிக் கவி தொடுப்போன், மேலும் இலக்கண இலக்கியம் தேர்ந்தால் நம்மை மிஞ்சிவிடுவான்" என்று பாடஞ் சொல்வதையே நிறுத்திவிட்டார். பண்டிதனறிவனோ பழுத்தநல் லருளை! அவர் பாடம் நம் இயற்கைப் புலவருக்கு வேண்டியதுமில்லை; அதைக் கற்காததால் நம் கடவுட் பிள்ளையின் அரு ளூற்றுத் தடைப்படப் போவதுமில்லை. தேனும் பாலும் அமுதுங் கனிரசமுந் தெவிட்ட முருகன் நமது திருமக னுள்ளிருந்து அருட்கவி யமுதூற்றைப் பெருக்குகின் றான்! ஞானச்சுடர் தூண்டுகின்றான்! அதுவே கல்வி, சாகாக் கலை; இவ்வருளின்ப விருந்தை யுண்ட வனுக்கு ஏட்டுக் கல்வி எம்மாத்திரம்!

---

## ௯௦. சோறு போடாதே

எம்பெருமானின் அருட்பெருமையை அண்ணல் சபாபதி பிள்ளையும் அறிய முடிந்திலர். "ஐயோ, தம்பி வீணாகிறானே; படிப்புமில்லை; பயனுமில்லை; குடி கெட்டது!" என்று கவன்றார். தம்பி தனக்கிசையாது மனப்போக்கு வேறாகி எதிலோ சித்தம்வைத் தாழ்ந் திருப்பதை அறியாது முனிந்தார், குறை கூறினார்; படித்துரைத்தார்; இடித்துரைத்தார்; ஒன்றும் பலிக்காது அலுத்து வெறுத்து முடிவில் தம் மனைவியை அழைத்து, "இராமலிங்கம் படியான்; என் சொற் படியான்; வீண்போது போக்கித் திரிகின்றான்; ஆதலால் அவனுக்கு வீட்டில் சோறு போடாதே, வேட்டி கொடுக்காதே, இருக்க இடந்தராதே" என்று சட்டஞ் செய்தார். அண்ணியார் கற்பிற் சிறந்த வாசுகி; கணவன் சொல்லைத் தடுக்காதிருப்பினும், எம்பிரான்மீது மிகவும் அன்புடையவர்; ஆதலால் பிள்ளையை அனாதரவாய் விட்டுவிட மனங் கொள்ளா ராகிக் கணவனுக்குத் தெரியாமல் அவரை ஊட்டி வந்தார். தம் அண்ணன் வீட்டிலில்லாத வேளை அல்லது அயர்ந்திருக்கும் சமயம் இராமலிங்கப் பெருமான் புழைக்கடைவழியாக வருவார்; அப்போது அண்ணியார் தாயினும் பரிவுடன் மனங் குழைந்து, ஊணருத்தி, உடையளித்து, மருந்தினும் இனிய திருந்துமொழி கூறிவந்தார். இப்படிப் பன்னாட்கள் கழிந்தும் பையன் தன்வழியே பற்றி நின்றான்.

---

## கக. அண்ணியின் கண்ணீர்

இவ்வாறிருக்கையில் தாயார் திவசம் வந்தது. அதை வழக்கம்போல் சபாபதி பிள்ளை பலவகைச் சிறப்புகளுடன் நடத்தினர். உற்ருர், உறவினர், மற்ருேர்களுக்கு வேண்டிய நல்விருந் தருத்தினர். விருந்தினர் எல்லாரும் உண்டு மகிழ்ந்து பரிமள களபம் பூசி இன்புற்றிருந்தனர். சபாபதி பிள்ளையும் தம்பியை நினைந்து 'உடனிருந் துண்பதற்கில்லையே' யென்று வருந்தினர். அண்ணியார் விருந்தினரை முக மலர்ந்து உபசரித்துக் காரியம் முடிந்தபின், மைத்துனச் சிறுவனை யெண்ணி வாட்டமுற்றவராய் உணவு கொள் ளாமல் சோர்ந்திருந்தார். சபாபதியும் கண்ணயர்ந் தார். மணி நான்கானது. நம் பெருமானர் வீட்டின் பின்புறம் மெல்லப் புகுந்தார். அண்ணியார் ஆவ லோடு பிள்ளைப் பெருமானை ஏற்று, அலர்ந்த சோற்றை ஊட்டினர். அதையும் பொறுமையுடன் உண்ணும் எம் பிரானை நோக்கி அண்ணியார், "அந்தோ எத்தனையோ பேர் இன்ப விருந்தருந்தி மகிழ்ந்தனர். இன்று வீட் டிற்குரிய நம்பி இவ்வாறு கள்ளத்தனமாக வந்து பதனழிந்த சோற்றை யுண்ணல் விதியோ!" எனக் கருணையங் கண்ணீர் ததும்ப, அண்ணன் வந்துவிடு வாரோ என்னும் அச்சத்தோடுண்ணும் பிள்ளையை நோக்கினர். அண்ணியார் அன்புக் கண்ணீரைக் கண்டு எம்பிரான் தாமும் விழி சோர்ந்து, "அண்ணி யன்னையே! என் அலமருகின்றீர்?" என மீண்டும் மீண்டும் வினவினர். "தம்பீ! எத்தனை நாள் இப்படிக் காணுமல் வந்து வந்து உண்டு செல்வது? அண்ணர்

சொற்படி கல்வி கற்ருல் இவ்வளவு இடர் இல்லையே. எனக்குப் பின் உன்னை யார் இவ்வளவு பரிவுடன் பேணுவர்? எனக்காகவாவது நீ கல்வியிற் கருத்தூன்ற வேண்டும்" என்ருர். அன்பு மொழிகள் ஐயனை இணக்கின. "அன்னையே! தங்கள் மனங்கசிய யான் பொறேன். தங்கள் விருப்பப்படியே கல்வி கற்கிறேன். நாளையே மேல் மாடியில் ஒரு தனியறை அலகிட்டுத் தருக! அதில் யான் கல்வி பயில்கிறேன்," என்ருர் இயற்புலவர்.

அங்ஙனமே கொடுக்கப்பட்டது. அங்குக் கல்வி கற்ருரா? இல்லை. பின்னே? முன்போலத்தான்! என்ன? ஒரு நிலைக்கண்ணுடி வாங்கிச் சுவரில் மாட்டினர்; நறும்புகை போட்டார்; மலர் சூட்டினர்; கதவை யடைத்துக்கொண்டு தம்முள்ளே உள்ளபடியுள்ள அறிவு நூலை, முருகன் உள்நின்று உணர்த்த, ஓதலானர். கண்ணுடியையே கண் நாடிப் பார்த்திருந்தார்; அதில் தனிகை முருகன் இனிய வடிவு தோன்றியது; அதையே உபாசிக்கலானர். கந்தப் பெருமான் அருளால் எல்லாக் கலையறிவும் வளர்பிறை போல உள்ளே வளர்ந்தது. புறத்தே யுள்ளவர்களுக்கெல்லாம் 'பையன் வீடு தங்கி நாளெல்லாம் படிக்கிருன்' என்ற மகிழ்வு. ஆனல் எந்நூல் கற்கிருன் என்பது மட்டும் எவருமறியார். தன்னூல் கற்கின் எந்நூல் வேண்டும்?

---

## கஉ. முருக உபாசனை

சிவ சண்முக சிவஞான தேசிக முருகனை நமது வள்ளல் உருகிப் பணிந்து குறையிரந்து வழிபட்ட பாக்கள் கல் நெஞ்சையும் உருக்கும். அவற்றின் கருத்தை இங்கு வடித்தெடுப்பாம் :—

“அன்னே! எனைத் தந்த அப்பா! குமரா! பரம குருவே, குகா! உன்னையே நினைந்தேங்கி அலறுகின்றேன்! கலாப மயில்மேல் வரும் அழகிய மாமணியே! வேற்கரனே! மலர் முகனே! உன் வீரக்கழலிற் பணிகிறேன். புவிநடைச் சேற்றில் விழுந்து தியங்கும் என்னைக் கரையேற்றிய உனக்கே விழைவுகொண்டோலமிடுகின்றேன். துன்பக் கடலில் மூழ்கி, எடுத்து விடுவாரின்றி நெஞ்சங் கலங்குகின்றேன். என்னப்பா, கேளாதுபோ விருக்கின்றனையே! நவை மனம் மாய்ந்து, நின் அன்பர் அவை யணுகி, ஆனந்த வாரியில் ஆட வேண்டினேன். நின் தொழும்பர் திருப்பத மல்லால் சிற்றடியேன் இம்மண்ணிலே ஊரும், தனமும், உறவும், புகழும், மடவார் போகமும் வேண்டிலேன்! நின் கால் பிடித்தேன்! கருணை செய்வாய்!

ஊனை யுடையே பொருளேயேன்
றுருகி மனது தடுமாறி
வீணை துயரத் தழுந்துகின்றேன்
வேறோர் துணைநின் னடியன்றிக்
காணேன்; அழுதே பெருங்கருணைக்
கடலே கனியே கரும்பேநற்

சேனோர் தணிகை மலைமருந்தே
தேனே ஞானச் செழுஞ்சுடரே !

பெருந் துயரால் வாடி யிளைத்தேன் எந்தாய்! அருட்கடலே! செல்வமே, கரும்பே, தேனே, செம் பாகே, கண்ணே, கற்பகமே, என் குல தெய்வமே! வேற்கை யரசே, மறைப் பொருளே, சாந்த குணக் குன்றே, பன்னிரு கண்ணு! மனங் கலங்கும் இவ் வேழைச் சேயைக் கண் பாராயோ! நாளும் உன் னருள் வழி பார்த்து இளைக்கின்றேன்.

பண்ணேறு மொழியடியார் பரவி வாழ்த்தும்
பாதமல ரழகினையிப் பாவி பார்க்கிற்
கண்ணேறு படுமென்றோ கனவி லேனுங்
காட்டடென்றுக் காட்டுகிலாய் ; கருணை யீதோ?
விண்ணேறு மிமுதலோர்க் கரிய ஞான
விளக்கேயென் கண்ணேமெய் வீட்டின் வித்தே,
தண்ணேறு பொழிற்றணிகை மணியே, ஜீவ
சாட்சி யாய் நிறைந்தருளுஞ் சகச வாழ்வே !

வாவென்பா ரின்றியுன தன்ப ரென்னை
வஞ்சகனென் றேமறுத்து வன்க ணுநீ
போவென்பா ராகிலெங்கு போவே னந்தோ!
பொய்யனென் றுணையின்றிப் புலம்புகின்றேன்
கோவென்பார்க் கருள்தருமக் குன்றே, யொன்றே,
குணங்குறியற் றிடவருளுங் குருவே, வாழ்க்கை
தாவென்பார் புகழ்தணிகை மணியே, ஜீவ
சாட்சியாய் நிறைந்தருளுஞ் சகச வாழ்வே!

தாயறியாச் சூலுண்டோ! நீ யென் குறை அறி யாயோ? பாவி மகனையும் அன்னை தள்ளுவளோ?

வேறு கதியுண்டோ? வித்திலாது விளையும் வானின் பமே! பொய்யர் நெஞ்சில் நீ புகுவதில்லை! நான் பொய்யனேன்! நின் திருவருள் முன் அஞ்சி நிற்கின்றேன். பாலுடன் நீரென நின்னடிக் கலப்பில் வாழ அருள்! சின்மய வடிவமே!

உள்ள நெக்குவிட் டுருகு மன்பர்தந்
நள்ள கத்தினில் நடிக்குஞ் சோதியே!
தள்ள ருந்திறற் றணிகை யானந்த
வெள்ள மேமனம் விள்ளச் செய்வையே!

தற் பராபரமே! சற்குண மலையே! சரவண பவனே! வல்லிருட் பவந்தீர் மருந்தே! செஞ்சொற் சுவையே! மெய்ஞ்ஞானச் செல்வப் பெருக்கே! தெள்ளமுதே! சேவற்கொடியோய்! சிந்தாமணியே! எய்தற்கரிய அருட்சுடரே! எல்லாம் வல்ல இறையோனே! ஞானச் செழுமணியே! அழியாப் பொருளே! என்னுயிரே! பரஞ் சுடரே! சுயஞ் சுடரே!

என்செய் கேனினுந் திருவருள் காண்கிலேன்
எடுக்கருந் துயருண்டேன்
கன்செய் பேய்மனக் கடையனே னென்னினுங்
காப்பதுன் கடனன்றே?
பொன்செய் குன்றமே பூரண ஞானமே
புராதனப் பொருள் வைப்பே!
மன்செய் மாணிக்க விளக்கமே தணிகைவாழ்
வள்ளலே மயிலோனே!

பாவியேன் தனியே உழல்கின்றேன்! நின் சேவடியைக் கண்ணாரக்கண்டு மனங் களிப்புறேனோ;

எனதென்பதை விடுத்து இவ்வக மாயத்தை வெல்லேனே; உடல் புளக முறேனே! மூட முழு நெஞ்சே, பொன்னால் மண்ணால் பூவையரால் என் உயர்வைக் கெடுக்கின்றாய்! சவலை மனமே, நீ சாகாயோ? இல்லதை நினைத்துப் பித்தர்போல் ஏங்கி நிற்கின்றாய்! என் குல தெய்வம், என் சற்குரு குகனருளே நல்லதென் றறியாது, நன்றி மறந்தாய்; நின் செயல் எனக்குத் திடுக்கிடுகின்றது! திருந்தாய் நெஞ்சே, குகனடி பொருந்தாய்! உமையா ளருட் பாலனே, சிற்சுகவாரியே! வெளிப் பூச்சில் மயக்கிக் கண்வலை வீசி என் மனத்தை விலைகொள்ளும் காம வலையிற் சிக்கிக் காசம், மேகம், சூலை முதலிய கடும் பிணிக்காளாய் வருந்தாது, நின் நேசமே கொண்டு வாழ அருள்! மின்னார் போகத்தில் மயங்கி வெயிற் புழுப்போல் வாடாது பரம யோகியர், நல்லடியார் கூட்டத்திருக்க அருள்!

செய்கோள் தணிகை நாடேனே
சேவ்வேள் புகழைப் பாடேனே
கைகள் கூப்பி ஆடேனே
கருணைக் கடலி வீடேனே
மெய்கோள் புளக மூடேனே
மெய்யன் பர்பால் கூடேனே
பொய்கோள் உலகோ டூடேனே
புவிமீ திருதாள் மாடேனே!

சிவயோகருள்ளம் திகழ்கின்ற ஞான நிறைவே! அவநாள் கழிக்க அறிவேன் அல்லாது, உன் அடி

பேணி நிற்க அறியேன்! புவிச் சுமையா யிருக்கின்றேன்! ஏன் பிறந்தேன்? கரும்பு வெறுத்து, வேம்பருந்துங் காக்கை யன்னேன். இரும்பு போன்று கனியாத வன்னெஞ்சக் கள்வனேன்; அரும்பாய நகை மடவார்க்கு ஆளாய், வாளா அலைகின்றேன்; அறிவறியேன்; உன் செம்பாத மலர் ஏத்தேன்! இலவு காத்த கிளி போன்றேன். சொல்லி லடங்காத் துயரியற்றுந் துகள் சேர் சனனப் பெருவேரைக் கல்வி யெறிந்து, நின்னுருவைக் கண்களாரக் கண்டு கட்டித் தழுவேனோ! சைவக்கனியே, தற்பரமே! கருணைச் செங்கரும்பே! மெய்ஞ்ஞான வெளியே! பாழ் வினையேன் துன்பமெல்லாம் நீயறிவாய். என் குறையை வேறெவர்பால் இயம்புகேன்? படுகாட்டிற் பலனுதவாப் பனையே போன்றேன்! என்னையே யான் சிரிக்கின்றேன்; தாய்ப்பா லுண்ணாது நாய்ப்பா லுண்டேன்! பாலை நடுவே கருங்கல் போன்றேன்; பொன்னைப் பொருளா யிரந்தேன் - நின்னைப் பொருளென் றுணராத நீசனேன்; போதானந்தப் பரசிவத்திற் போந்த பொருளே! கொடியாரிடம் குறை யிரந்தேன்; நின்னன்றித் துணைகாணேன்; முறையோ, முறையோ! பழுதையைப் பாம்பென மயங்கினேன். பொன் பெண் பிணிக்கும் வன் பிணிக்கோ என்னைப் பெற்று வளர்த்தாய்! இவ்வேழைக் கிரங்காயோ!

மனமே இரவும் பகலும் மயிலேறிய முருகனைத் துதி செய்! தேறு மனமுந் தேறும்; துயர் மாறும்;

மாருப்பிணி மாயும்; துயிலேறிய சோர்வு கெடும்; இடர் போம்; மையலார் மயக்கம் போம்; இருள் மிடி நீங்கும்! மறைக்குளே மறைந்து, அம் மறைக் கரிதாகிய வள்ளலை உள்ளத்தே உன்னுய்! வேறு மாய நினைப்பின் மீளாய்! மாதர் புணர்ப்பாங் கான் வழி நடவாதே! முருகன் கழல்வழி நட! உலக மயக்கற, மெய்ம்மை யுணர்!

சிவத் தருவில் அருள் பழுத்த செங்கனியே! 'எவையும் நாடாதே, என்னடி நிழலிரு!' என்று நீ ஏழைக் குரைக்கு நாள் என்றோ? அருவுருவாகுஞ் சிவபிரானளித்த அமுதே! நீயருள் செய்யாயேல் துன்புற்று மெலிவேன். என்னுயிரே, என் பேறே, என் பொருளே, குருவே அன்பருக் கெளிவரு மரசே, முத்திக்கு வித்தே, சுத்தனே! பத்தி வலைப்படுவார் இடர்க் கடல் விடுத்தேற எத்தனை நாட் செல்லுமோ! ஓம் சிவசண்முகா சரணம்!"

இவ்வாறு உருகி அழுதலறித் தவிக்கும் அன்ப னுக்கு ஆறுமுகப் பெருமான் கருணை மலர்ந்து குரு வடிவாகத் தோன்றி, ஞானசக்தியும் சாகாக் கலையும் அருளினர். முருகனைக் கண்ட பரமானந்தத்தில் நம் வள்ளற் பெருமான் உள்ள முருகும் உருக்கம் என்னே!

"சிவனர் மகனர், குகனர் என் முன் வந்தார்! புது வாழ்வு தந்தார்! தொழுவார், அழுவார், விழுவார், எழுவார், துதியாநிற்பவர் நிற்க, புழுவுட லோம்பும்

என்முன் வந்தருளினுரே! பொன்னே விரும்பும் புல்லர்பாற் போகேன்! நின் பதமே போற்றும் வண்ணம் சின்னமளித்து அருட் குருவாய் என்னே முன்னே சிறுகாலே ஆண்டுகொண்ட தேவ தேவே!

கல்வியெலாங் கற்பித்தாய் நின்பால் நேயங்
காணவைத்தா யிவ்வுலகங் கான லென்றே
ஒல்லும்வகை யறிவித்தா யுள்ளே நின்றேன்
உடையானே நின்னருளு முதவு கின்றய்!
இல்லையெனப் பிறர்பாற்சென் றிரவா வண்ணம்
ஏற்றமளித் தாய்இரக்க மென்னே யென்னே!
செல்வவருட் குருவாகி நாயி னேனைச்
சிறுகாலே யாட்கொண்ட தேவ தேவே!

எந்தை நீ யிருக்க இனி என்ன குறை! உலகிற் பிறரை ஒரு காசுக்கும் மதியாது, நின்னடியே மதிக்கின்றேன். அல்லும் பகலும் நின்னேயே துதிக்கின்றேன்.

விண்ணுறு சுடரே யென்னுள்
விளங்கிய விளக்கே போற்றி!
கண்ணுறு மணியே யென்னேக்
கலந்தநற் களிப்பே போற்றி!
பண்ணுறு பயனே யென்னேப்
பணிவித்த மணியே போற்றி!
எண்ணுறு மடியார் தங்கட்
கினியதெள் ளமுதே போற்றி!

---

## கரு. சுப்பிரமணிய விளக்கம்

கந்த ரனுபூதி பெற்ற எம்பெருமான் சுப்பிர மணிய தத்துவத்தை அடியில் வருமாறு விளக்கு கிறார் :—

சுப்பிரமணியம் என்பதென்ன? நமது புருவ மத்தியில் ஆறுபட்டையாய் உருட்சியுள்ள ஒரு மணி பிரகாசம் பொருந்தி யிருக்கிறது. இந்த ஜோதி மணியைச் சண்முகமென்று பெரியோர் சொல்லுவார்கள். இதன்றி நமது மூலாதாரத்திற்கு மேல் மூன்றிடந் தாண்டி அனுகதமாகிய இருதய ஸ்தானத்தில், இடப் புறத்தில், ஆறு தலையுடைய ஒரு நாடி யிருக்கின்றது. இதைச் சுப்பிரமணிய மென்பார்கள். உன்மனிக்கப் பால் சாந்த நிறைவாயுள்ள, ஆறுதலான சுத்தான்ம அறிவான உள்ளமே சுப்பிரமணியம்; ஆறு சோதி, ஆறறிவு ஆறு தலை யுடையதா யிருப்பதால் ஆறுமுகம். தோன்றும் அறிவு, தோற்றுவிக்கும் அறிவு இரண்டாலாகிய விஷய நிர்விஷய உணர்வே இரண்டு கால். ஆறுதாரங்களிலுள்ள பிரகாச அப்பிரகாசமான பன்னிரண்டும் கைகள். அருட் சக்தியே வேல்; ஆன்ம விளக்கம் நாதம், மணி; கீர்த்தி கொடி; சரசிஜம் தயவு; குக்குடம் மாற்சரியமில்லா நிறைவு. பராகம் என்பது பாச நீக்கம்; தண்டம் வைராக்கியம்; பாணம் அன்பு; அபயம் சமாதான உணர்வு; மூலப் பிரகிருதியே மயில்; சர்வ தத்துவ கண்டனம் கடப்ப மாலை. அசுத்த அகங்காரமே சூரபத்மா; அடங்கி யிருக்குமிடமே படைவீடு. அலைவில்லாத உணர்ச் சிக்கு முதற் காரணமாயுள்ள துரியநிலையே மலை. சுத்த விவேக தத்துவ அனுஷ்டாதாவே சுப்பிரமணியம்.

---

## கச. ஆளுடைய பிள்ளையார் அன்பு

திருவருட் பிள்ளையார் காமம் வெகுளி மயக்க மற்று, முருகனை வழிபடு கடவுளாகக் கொண்டு குறையிரந்து, ஆத்ம சுத்தியும் ஞானமும் முற்றிய துடன் ஆளுடைய பிள்ளையாரைக் குருவாகக் கொண்டு மேம்பா டடைந்தார்.

நம் அருளுடைப் பிள்ளையார், அன்பு கொண் டுருகிய அடியார் நேயம் நான்காவது திருமுறையிற் காணப்படும். ஆளுடைய பிள்ளையார் மாலை முழுதும் அறிவுச் சுடர்மாலையே. "என்னுயிர்த் துணையே! காழி ஞான சம்பந்தச் செல்வமே! சுத்த சற் குருவே! மூன்று வயதினில் சிவையின் ஞானப்பாலுண்டு அருள் பெற்ற மணியே! உலகியல் ஓர் அணுவும் அறி யாச் சிறு பருவத்தில் எனக்குள்ளிருந்து அருணெறி யில் ஏற விடுத்து, அளவற்ற உணர்ச்சி யளித்தனை. உயிரனுபவ முற்றால் அருளனுபவ முறும்; அதில் சுத்த சிவானுபவமாகும்; தத்துவ நிலையேறிப் பர நாதத் தலத்தில், தன்மயமாக நானற்றிருத்தலே உயி ரனுபவம்; பரநாத வெளியின் மேல் தன்மயனாகிப் பரம்பரத் துட்புறமாகி, மோனமாயிருத்தலே அரு ளனுபவம். உள்ளதாய் விளங்கும் ஒரு பெரு வெளி மேல், எனது, நான், தான் என்று சொல்ல முடியாது தானதுவாக, விள்ள வொணாத அப்பாலுக் கப்பாலான வெறு வெளியே சிவானுபவம், என்றருளினை. கற்ப காலம் முயன்றாலும் எய்தற்கரிய திறனெலாம் ஒரு பகலில் எனக்கு அறிவித் தருளினை. சிவயோக நிலை யருளும் மலையே! உனது செயல் எனது செயல், உன

துடைமை யெனதுடைமை. 'உணர்' என உணர்த்தும் நிறைவே! உன்னலற வுன்னு நிலை யின்னதென என் னுள்ளுணர உணர்த்தி, உன்னிலேயும் என்னிலேயும் அன்னியமில்லை யென்ற பொருளே! எல்லா மறைக ளும் ஒரு பொருளின் முடிபென, என்னகம் தெளி வித்த தெருளே! நீ ஐம்பூத மாகியில்லை; தத்துவாதீத அறிவு; ஆறு அத்துவாவையுங் கடந்தது அதீத நிலை; அது நீ. அன்பே சிவம். துவித நிலை நின்ற பின்பே அத்துவித நிலை அடைந்திட முடியும்; சச்சிதானந் தமே அந்நிலை. அதை அடைந்தால் அட்டசித்திகளும் உனக்கு ஏவல் செய்யும். அவற்றை நீ அவாவாதே! அண்டமெல்லாம் பரிபூரணத்தின் விலாசமே. இரவு பகலற்றவிடம் சகல கேவல நிலை. கண்டனவெல் லாம் மனமாயையே. யான் பிறர் என்ற பேதம் விடுத்து என்னோடிரு!

இலதுபரி பூரண விலாசமல தில்லை; யண்ட
மெங்கணுமே னச்சொல் பதியே!
இரவுபக லற்றவிட மதுசகல கேவலம்
இரண்டினடு வென்ற பரமே.
இச்சைமன மாயைநீ கண்டவை யெலாம்வெளி
யிருந்துகா ணென்ற தவமே!
யான்பிற ரெனும் பேத நடைவிடுத் தென்னோ
டிருந்தியென வுரைசெய் யரசே!
என்களைக ணேயெனது கண்ணே யெனிருகண்
இலங்குமணி யேயெ னுயிரே
என்னுயிர்த் துணையேயெ னறிவே யெனறிவு
டிருந்தசிவ மேயெ னன்பே!
என்றெய்வ மேயெனது தந்தையே யெனையீன்
றெடுத்ததா யேயெ னுறவே!

என் செல்வமே யெனது வாழ்வே யெனின்பமே
என்னருட் குரு வடிவமே!

என்று தம் குரு சம்பந்தவள்ளலை அருள்வள்ளல் போற்றி அவரிடம் தாம் உள்ளே பெற்ற மிகப் பெரிய உபதேசத்தையும் தெளிவாக விளக்கி அதையே தமது வாழ்வின் நிறைவேற்ற மாக்குகிறார்.

---

## கரு. திருவாசகத்தேன்

மூன்ருவது, நம் வள்ளற்பெருமான் உயிர் போலப் போற்றிநின்ற நூல் திருவாசகம். ஆளுடையடிகள், மணிவாசகரின் திருவாசகத் தேனைப் பருகிப் பருகி,

வான் கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான் கலந்து பாடுங்கால், நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன் கலந்து, பால்கலந்து, செழுங்கனித்தீஞ் சுவைகலந்து
ஊன் கலந்து வுயிர்கலந்து உவட்டாம லினிப்பதுவே!

என்று பரவசப் படுவார்.

பாரோடு விண்ணுய்ப் பரந்தஎம் பரனே,
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்!
சீரோடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே!
ஆரோடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ அருளிலை யானல்
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்,
வருகவென் றருள்புரி வாயே!

என்ற பாசுரத்தைப் பாடியும், பாடக்கேட்டும் வேசற்று மூர்ச்சித்து விழுவார். சாத்திரத்திற்குத் திருமந்திரம், தோத்திரத்திற்குத் திருவாசகம் என்பார்.

இவ்வாறு, ஓதாது, ஓதரு மூதறிவெல்லாம் உணர்த்திய ஆண்டவன் தன் அருட்செல்வனின் தெய்வப் புலமையை எவ்வாறு விளக்கினனென இனிக் காண்போம்.

---

## ௧௯. நம் இராமலிங்கமா !

சபாபதி பிள்ளையின் புராணப் பிரசங்கம் சென்னையில் பிரசித்தம். அவருக்குக் கையேடு வாசிப்பது அவரது நெருங்கிய உறவான ஒரு கைம்பெண்மணி; இன்னிசையும், சொற்றெளிவும், நல்ல கல்விப் பயிற்சியும், நினைப்புத் திறனும் வாய்ந்தவள்; தேவாரத் திருப் பாசுரங்களைத் தனது யாழ்க்குரலால் இனிமையாகப் பாடுவாள். பொருத்தமான மேற்கோள்களை இடையிடையே புராண விரிவுரையாளருக்கு எடுத்துக் கொடுப்பாள். அவ் வம்மைக்குத் தனி மறைவு கட்டிச் செப்பேடு படிக்கச் சொல்லி வந்தார் சபாபதி பிள்ளை. யாழுக்கு மேளம்போன்று சபாபதி பிள்ளையின் புராண விரிவுரை நிறைவுற அவ்வம்மை துணையின்றியமையாததாம். மேலும் இருவர் வருவாயும் ஒரே குடும்பத்திற்கானது.

ஒருநாள் அவ்வம்மை உடல்நலமின்றிச் செப்பேடு படிக்க இயலாது போகவே, சபாபதி பிள்ளை புராணத்தை நிறுத்திவைக்க மனமின்றி வருந்தினர். அதை உணர்ந்தாள் கற்புடை யில்லாள். “தம்பி! அண்ணல் வருந்துகிறார். நீ ஏடு படித்தால் விரிவுரை நடைபெறுமே, படிக்கிறாயா?” என்றாள். “அதற்கென்ன, ஆகட்டும்” என்றார் அருட்கனி வாயர். சபாபதி பிள்ளையோ ‘தம்பி எப்படிப் படிப்பானோ’ என்று ஐயுற்றுத் தீராப்பொறியாகச் சம்மதித்தார்.

புராணம் தொடங்கியது. கடவுள் வணக்கம் முடிந்தது. வீணைத் தந்திபோல இழையும் தமது இனிய குரலுடன் படிக்கத் தொடங்கினர் ஞானசம்

பந்தரின் அருளிற் பழுத்த தேன்மொழிப் புலவர். முத்தும் மணியும் அள்ளித் தெளித்ததுபோலச் சொற்கள் மிளிர்ந்தன! படிக்குந் தெளிவு கவியிலுள்ளதைக் குரலால் ஓவியம் எழுதுவதுபோ லிருந்தது. செய்யுட்களைப் பதம் பதமாகப் பிரித்து, மணி மணியாக, இடனறிந்து அணிபெறக் கொடுக்கிறார். குரலுடன் சொல்லுருக்கமும் சபையின் மனத்தை அள்ளுகிறது! சபாபதியாரால் தம் காதுகளை நம்பமுடியவில்லை. "நம் இராமலிங்கமா இப்படிப் படிக்கிறான்!" என்று மனமெல்லாம் மகிழ்வானார். சபையோர் "இவர் விரிவுரைக்கு அவர் வாசிப்பே தகும்! இதற்கு அது மிஞ்சியது. இது வரம் பெற்ற வாக்கு!" என்று பலவாறு புகழ்ந்தனர். அன்று புராண விரிவுரையில் அருட்சுவை பொங்கும் புதியதோர் இன்பமும் காணப்பெற்றது. பொழுது சென்றதே தெரியாது நெடுநேரம் கதை நிகழ்த்திச் சபாபதியார் வீடு சென்று மனைவியிடம் மகிழ்வு கூறினார். அம்மையார் முகமலர்ந்து 'கடவுள் கண்ணைத் திறந்தார்' என்று உள்ளுவகையடைந்தார். இன்னும் இராமலிங்கம் அண்ணனுக்கெதிரே வருவதில்லை. இன்னுந் தீவிரமாகத் தமது தனியறையில் உபாசனை தொடங்கினார் எம்பிரான்.

———

## கஎ. தெய்வப் பிறப்பு

இப்போது சபாபதியார் முத்தியாலுப்பேட்டையில் சனிக்கிழமைதோறும் செல்வரொருவர் வீட்டில் பெரிய புராணப் பிரசங்கம் செய்துவந்தார். ஒரு நாள் அவர் பித்தக்காய்ச்சலாற் படுத்த படுக்கையோ டிருந்தார். அன்று புராணத்தை நிறுத்திவைக்க மனமில்லை. மனைவியிடம் தம்பியை அழைக்கச் சொல்லி, "இராமலிங்கம், நீ இரண்டொரு பாடல் படித்து வா!" என்றார். சென்றார் இராமலிங்கம்.

விளக்குகள் பகலிட்டன. நடராஜர் படம் வெகு அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. முன்னே, காய் கனி கடலை கற்கண்டு தட்டுத் தட்டாக வைக்கப்பட்டிருந்தன. அனைவரும் உற்சாகமாகப் புராணிகரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். வந்தார் எம்பிரான். அண்ணல் உடல்நலமின்மையை அறிவித்தார். சபையோர் இராமலிங்கரையே பிரசங்கஞ் செய்யும்படி வற்புறுத்தினர். திருவருட்டுணையை நம்பிப் பிள்ளையார் இசைந்தார். அன்று சொல்ல வேண்டிய பொருளென்ன? தம் அருட் குருவான ஞான சம்பந்தப் பெருமானின் சரிதமன்றோ! தொடங்கும் போதே அருட்பால் ஒழுகியது! உள்ளிருந்து ஏதோ ஒரு கடவுளருள் அமுத வெள்ளமாகக் கொட்டுகிறது! அதை அள்ளியள்ளிச் செவிமன விருந்திடுகின்றனர் அவையோர்! ஒன்பது மணிக்கு முடிவுறும் விரிவுரை 10, 11, 12 மணிக்கு இரண்டு வரிகளின் பொருள் விரிவைக் கண்டது. சபை இமை கொட்டவில்லை. குரல் கண்ணன் குழலோ, கலைமகள் யாழோ! வசந்தச் சோலையின் அணியழகைக் கோடி குயில்

கள் குரலொன்றி வர்ணிப்பதுபோல, கடவுள்மணங் கமழும் சேக்கிழார் வாக்கை, பாலரு வாயரின் பைந் தமிழ்ப் புகழை, அருட்பா லருவி யூறிவரும் கடவுட் புலவரின் கனிந்த மொழிகள் அணியணியாக எடுத் தோதியபோது சபையின் உள்ளம் அன்பு பூத்தது, அருள் பழுத்தது, இன்பரசம் பெருகியது. அச்சொல் லினிமை யூனையும், உயிரையும் உள்ளத்தையுங் கவர்ந்து காலத்தையும் விழுங்கியது. எங்கும்அதே பேச்சு. செட்டியாரும் இனி எம்பிரானே புராணம் சொல்ல வேண்டுமென்றார். சபையோரும் அவ்வாறே மன் ருடினர்; சபாபதி பிள்ளையை வேண்டினர். இருவர் பொருளீட்டினுல் குடும்பத்திற்கு நலமென்று அவர் இசைந்தார். இராமலிங்கர் புராணமாரி பொழிந்து வருகிறார். "படிப்பில் கருத்திலாது திரிந்த இவன் எப்படிப் பிரசங்கம் செய்வான்!" என்று வியப்பும் ஐயமுமுற்று ஒருநாள் மறைவாயிருந்து தம்பியார் பிரசங்கத்தைக் கேட்டார் சபாபதியார்! செவியை நம்ப முடியவில்லை. "இது தம்பி தானே! ஆம்! இல்லை, இவர் தெய்வப் பிறப்பு! தணிகாசலப் பெருமான் அருள் வடிவு!" என்று பேருவகை விம்மி வியந்து போற்றி மனை சேர்ந்து இல்லாளிடம் "தம்பி தணிகைக்குமரனே! இராமலிங்கத்தின் அருட்புலமை அறியாது, அந்தோ, என்னபிழை செய்தேன்! உடை யுணவும் மறுத்தேனே! என்ன பேதமை! இராமலிங் கம் ஓதாதுணர்ந்த கடவுட் புலவன்! என்ன அருள் வாக்கு! பொருள் நிறைவு! இன்றே அவனுடைய தெய்வத்தன்மை யறிந்தேன். என் பிழைகளும் ஐயுற வும் என்னையே சுடுகின்றன!" என்று பலவாறு புகழ்ந்து வருந்தித் தம்பியிடம் பயபக்தியுடன் நடந்து

கொண்டார். அம்மையாரும் எம்பிரானிடம் அன்பும் வணக்கமும் செலுத்தினர். ஆனல் நம்பிரான் இவ் விசையை எதும் பாராட்டினரா? தாம் உள்ளவிடம் உள்ளபடி இயல் நிலையிலேயே இருந்தார். புராணங் கேட்கும் செல்வர் உதவும் பணத்தை வரும் வழியில் கண்டவிடம் வீசி யெறிந்தார். பணப்பற்று சிறிது மில்லாத இப்பக்குவக் கனியின் செயலைக் கண்ட செல்வர், இவர் கையில் பணந்தராது வீட்டிற்கே நேராக அனுப்பிவந்தனர். இப்போது நம்பிரானுக் குப் பதினறுண்டுகள் நிரம்பின.

—

## கஅ. திருவொற்றியூர் வழிபாடு

இதன் பின் வள்ளலார் தமது அருட்பா வெள்ளத்தால் ஒற்றியூர்ப் பெருமானுக்கு உள்ளங் குளிர இன்ப நீராட்டுவதைக் காண்கின்றோம். ஒற்றி யூரை யெண்ணுங்கால் திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர், பட்டினத்தடிகள் முதலிய பெரியோர் தெய் விகக் கட்சி நம்முன் விளங்குகின்றது. தேனினும் இனிய பதிகங்களைச் செவி மடுக்கின்றது. ஏலேல சிங்கனுக்கு மணிகளளித்த தியாகமூர்த்தியைத் தம் கண்மணி போலப் போற்றி, நம் பொன்மணிப் பாவ லர் பாடிய பதிகங்கள் பலப்பல. மனிதனின் இளம் பருவத்தைப்பற்றி அலைக்கும் மனப் பிணிகள் பல; அப்பிணிகளைத் தீர்த்து அடியார் கூட்டத்தில் தம் மைச் சேர்க்க அல்லும் பகலும் நம் பெருமான் திருப்பாமலர்களை அள்ளித் தூவினர். அம்மலர்மணச் சோலையிற் சிறிது உலாவுவாம்.

இங்கிதமாலை, எழுத்தறியும் பெருமான் மாலை முதலிய மாலைகளும் எண்ணிறந்த விண்ணப்பங்களும், முறையீடுகளும், இரங்கற் பாக்களும், பதிகங்களும், புலம்பல்களும், கிளவிகளும், மலை மலையாகக் குவிந்து கிடக்கும் அப்பாமலர்க் குவியலில் எத்தனைதான் இச் சிறுநூற்செல்வி தன் கொண்டையில் அணிய முடி யும்! அவ்வாடாத் தெய்வ நாண்மலர்க் கும்பலுக் கருகே சிறிதுலாவி அதன் நறு மணத்தை நுகருவதே இவள் செய்யத்தக்கது!

அழுதபிள் ளைக்கே பாலுண வளிப்பாள்
அன்னை யென்பர்கள்; அழவலி யில்லாக்

கோழது நேர்சிறு குழவிக்குங் கொடுப்பாள்
துற்ற மன்றது மற்றவள் செயலே,
தொழுது நின்னடி துதிக்கின்றோர்க் கெனவே
துட்ட னேனுக்குஞ் சூழ்ந்தருள் செயலாந்
செழுது மாதவி மலர்திலசை மணக்கத்
திகழ மொற்றியூர்த் தியாகமா மணியே.

தியாகப் பெருமானே! வானை நோக்கி வழி நடப்பான்போல ஊனை நோக்கி உன்னருள் வழியிடை நடந்தேன்; வாயிலாதவன் வழக்குரைப்பது போல நின்னருள் பெறவிழைந்தேன்; வித்தின்றி விளைப்பவன் போல நின்னன்புப் பித்தின்றி முத்தி விழைந்தேன்; கலமிலாது கடல் கடப்பவன்போல் நின்னடிக் கமலத்தை வழுத்தாது அருள் பெற விழைந்தேன்; பொங்கும் வெள்ளத்திற் பொன் புதைப்பவன் போல், எனது புலை நெஞ்சை உன் பூவடி சேர்த்தேன்; ஓட நினைத்து உறங்குவான் போல உன்னருட் கடலில் ஆட நினைத்து, மங்கையர் மையலில் அழுந்துகின்றேன்; முதலின்றி ஊதியம் பெறுவான் போல, உன்பத மேத்தாது அருள் பெற விழைந்தேன்; கல்லையுந்தி நதி கடப்பவன் போலக் காம முந்திய நெஞ்சத்தால் பவக்கடல் கடக்க நினைந்தேன்; நெய்யினால் நெருப்பவிப்பவன்போலத் துன்பப் பொய்யினால் பவம் போக்கிட நினைத்தேன்; நீர் சொரிந்து விளக்கெரிப்பதுபோல, நின் நேசம் வேண்டிப் பார் சொரியும் பவநெறி செல்கின்றேன். இப்புலையனுக்கும் உன்னருள் கூடுமோ! இப்பாவியேனைக் கூவியருளாய்! கரும்பின் கட்டியே, தேனே! கன்மக் குரங்கனேன், எட்டியேன் வாதமே புரிவேன்; கொடும்புலியனைய வஞ்ச மனத்தினேன்; மண்ணிலே மயங்கும் மனத்தினை

மீட்டு உன் மலரடி வழுத்த எண்ணிலேன். என்னை என் செய்தால் தீரும்? பண்ணிசையே, பாலிற் சுவையே! நாணமிலா நாயினேன், வீணனென்று நீயுங் கைவிடில் என் செய்வேன்? உன்னை நம்பி னேன்; நாயினேன் பிழை குறியேல்! காமனைக் காய்ந்தோய்! என் குறை தவிர்க்கிலையோ? சிந்தை நொந்து தியங்குகின்ற நாயேனை, வினை தொலைத்து உன்னடிக் காளாக்க லாகாதோ? மாறாத வன் பிணி யால் மாழாந்து நெஞ்சயர்ந்தேன்; மின்னார் இச்சை யால் வெம்புகின்றேன்; காயப் பித்து, ஆணவம், பொய், அழுக்காறு, சினம், வஞ்சம், கொலை முதலாம் பாவங்களுக்கு ஆளாக்கித் துயரக் கடலுள் வீழ்த் துங் கொடிய மனத்தின் துன்பச் சுமையை யெடுத் தருளாயோ! இப்பொய்யடியேன் நெஞ்சின் ஓட்ட கலச் செய்து தூக்கமிலா ஆனந்தத் தூக்கமருள்வாய்! வஞ்சமிலார் நெஞ்சகத்தில் மருவும் மாமணியே! நினை நினையாது, மாதிற்கும் வாதிற்கும் நாளைக் கழிக்கின் றேன்.

பெருங்கருணைக் கடலேயென் குருவே முக்கட்
பெருமானே நினைப்புகழேன் பேயே னந்தோ,
கருங்கன்மனக் குரங்காட்டி வாளா நாளைக்
கழிக்கின்றேன்; பயனறியாக் கடையனேனை
ஒருங்குருள உடல்பதைப்ப உறுங்குன் றேற்றி
உருட்டுகினும், உயிர் நடுங்க வுள்ள மேங்க
ஒருங்கழுவி லேற்றுகினு மன்றி யின்னும்
என்செயினும் போதாதே யெந்தா யெந்தாய்!

பேதை நெஞ்சினேன் செய்பிழையெல்லாம் பேசி னால் பெரும் பிணக்கு! இப்புலைய நெஞ்சினாற் பொருந்

திடும் அல்லனுக் கெல்லை யில்லை. ஆயினும் உனது கோயிலை அடுத்தேன்; என் நெஞ்சக் கருங்கல்லைக் கரைத்துக் கருணை யீதல் உன் கடன்!

வெறி பிடிக்கினு மகன்றனைப் பெற்றோர்
விடுத்திடார்; அந்த வெறியது தீரும்
நெறி பிடித்துநின் றுய்வர்; என்னரசே!
நீயும் அப்படி நீசனேன் றனக்குப்
பொறி பிடித்தநற் போதக மருளிப்
புன்மை யாவையும் போக்கிடல் வேண்டும்,
செறி பிடித்தவான் பொழிலொற்றி யமுதே
தில்லை யோங்கிய சிவானந்தத் தேனே!

காமப் புலையா! என்னை நரகக் குழியில் அழுத்தி மடிக்க வஞ்சனை செய்கிறாய்; கபடப் பாவியே! காம வேட்டுவனே! கோபக் கொலைஞனே! தயை யற்ற லோபமே! மூடரிற் சிறந்த மோகமே! மதமத்தனே! ஆணவப் பயலே! அகங்காரக் கடையனே! நீவிர் தூர நின்மின்! எதிர்நின்றால் ஒற்றியூர்ச் சிவனருளால் உம்மை வெட்டுவேன்!

வகையிலார்க் கருளும் மாணிக்க மணியே! நின்னருள் பெறாத என் சிறுமை யெண்ணித் திகைக்கின்றேன். வினைப்புல வேடர் என்னை வெல்லுகின்றனர்; மெலிகின்றேன்; வீண்காலங் கழிக்கின்றேன். சிறியருட் சிறியேன் என்செய்வேன்? தத்து மத்திடைத் தயிரெனத் தளர்ந்தேன்; உன்னருளின்றி உய்திற மில்லை. என்னெஞ்சுளிருந்தே என்றுயர் அறிந்திலையோ! மாயைபற்றி நோயும் மூப்புங்கொண்டு உலகம் படும்பாட்டை நோக்கி, என்னுள்ளம் உருகுகின்றது. கோடி கோடி குணப்பழுதுடையேன்;

என்றும் நின் கருணை யின்றேல் அடியனுவதெப்படி?

எந்தையே யென்பவர்தம் இன்னமுதே யென்னுரிமைத்
தந்தையே தாயே தமரேயென் சற்குருவே
சிந்தையே யோங்குந் திருவோற்றி யையாவென்
நிந்தையே நீங்க நிழலளித்தா லாகாதோ!

இந்த வஞ்சநெஞ்சினை வசப்படுத்த நின்னருள் வேண்டும். நின்னருட் சுகமே உண்மை என்று உணர்த்தியும் இப்பெண்மை நெஞ்சகம் வெண்மை கொண்டு உலகப் பித்திலே தொத்தி நிற்கின்றது. தீது செய்தேன், செய்கிறேன், செய்வேன். எனினும் இறைவனே என்னை ஆள்வது உன்னியல் பன்றோ? பொல்லேன், நல்லாரைக் காண நாணுகின்றேன். எனினும் எல்லாம் வல்லாய், எல்லாம் அறிந்த உனக்கு இன்னும் சொல்வதென்னே!" என்று குறையிரந்து முறையிடுவார் ஒருகால்.

"உன்னருட் டிருப்பெயரை யான் மறவேன். திக்கு மாறினும், எழுகடல் புவி மீது செல்லினும், விண்ணொளிக் கணங்கள் வீழினும், மழையின்றி உலகில் உணவு வறண்டாலும், புவியேழும் மாறினும், அண்டம் வீழினும், பெற்ற தாயை மகன் மறந்தாலும், பிள்ளையைத் தாய் மறந்தாலும், உடலை உயிர் மறந்தாலும், உயிரை உடல் மறந்தாலும், கற்ற நெஞ்சங் கலை மறந்தாலும், கண்ணினின்று இமைப்பு மறந்தாலும், நமச்சிவாயனே! நின்னை மறவேன். கடல் அலையை மறக்கினும், உலகோர் பசி மறந்தாலும், புதைத்தவர் பொன் மறந்தாலும், நடப்பவர் வழி மறந்தாலும், வறுமை வரினும், வாழ்வு வரினும், பன்னுளிருப்பினும், இன்றே இறக்கினும், வான்கதி நேரி

னும், நரகம் வரினும், காமன் கணை வரினும், கால பாசம் வரினும், பூவின் மன்னவன் சீறினும் பொரு ளல்ல; நின்னை மறவேன். ஓடுங் கதிரவன் பின்னே நாட்கள் ஓடுகின்றன. எனினும், மார்க்கண்டேயர் மாண்பறிந்து வருந்துத லொழிந்தேன். என்னைப் பொறுக்கினும், வெறுக்கினும், ஒறுக்கினும், மறுக்கி னும் நீயே துணை" என்று வீரவுறுதியுடன் சிவபிரான் மலரடி பற்றுவார்.

சழக்கி நுந்ததென் னிடத்திலா யினுநீர்
  தந்தை யாதலிற் சார்ந்தநன் னெறியிற்
பழக்கி வைப்பது தேவரீர்க் குரிய
  பண்பன் றே? எனைப் பரிந்திலீ ரானல்,
வழக்கி னுப்பதிங் குமக்குமேன் றனக்கும்
  வகுத்துக் கூறுதன் மாபுமற் றன்றல்;
புழைக்கை மாவுரி யீரொற்றி யுடையீர்
  பொய்ய னென்னில்யான் போம்வழி யேதுவோ?

மழையின் வண்மையை மாற்றித் தடுப்பா ருண்டோ? பிறவிக் கண்ணில்லான் கைக்கோலைப் பிடுங்கி வீசுதல் பெரியவர்க்கு அறமோ? உம்மேல் வைத்த அன்பைச் சஞ்சல வாழ்வில் ஆழ்த்துதல் அழகோ? ஒழுக்க மில்லேனெனினும் நினது சமூகம் நிற்கின் புண்ணியக் கனி பழுக்கும் குணதரு ஆவேன். ஆண்டவ! நின் கருணைக் கடலில் ஒரு சிறு திவலை என் மேல் தெறித்தால் உய்வேன். என் அப் பனே! தெரியாமையாற் செய்த பிழைகளைப் போக்கி அருளிலையேல், 'பேரிசை கொண்ட பிள்ளாய்! அரன் உனக்குச் சாதித்த தென்ன?' என்று தாயும் பரிகாசம் செய்வள். அருட் கற்பகமே! என் நோன்பு

வீணென்று உலகோர் கைதட்டி வெண்ணகை செய்வர். மனது என் வசமாக, நினது வசம் நானாக வந்து அருள்செய்வாய்! ஊன்முகப் பார்வை விட்டு உள்முகப் பார்வை பெற்றோர் பெறுஞ் செல்வமே! மையலென்னும் முரட்டுப் பேயாற் பிடியுண்டு அடியுண்ட பிஞ்சுபோன்றேன். நானொரு வஞ்சக நெஞ்சன்; நீயுமா? சுந்தரருக்கு ஓலை காட்டியதுபோல் காட்டுதல் வேண்டா; தொண்டன் என்று ஏற்றாற் போதும். ஆயிரம் பணி புரிவேன். அணுவும் கூலி வேண்டேன்; கொடுக்கினுங் கொள்ளேன். அருளைத் தந்து அடிமை கொள்வீர்! நம்பு மென்னை! வெம்புறச் செயினும், உம் சித்த மல்லது செய்வ தொன்றில்லை. தியாக ராஜன் எனப் பெயரெடுத்தீர்; உம்மை அடைந்தால் ஒரு வார்த்தையுஞ் சொல்லீர்! இரப்பவர்க்கு ஒன்றும் ஈகிலீரானால் யாதுக்கைய நீர் அப்பெயரெடுத்தீர்?

வெள்ளி மாமலை வீடென வுடையீர்
விளங்கும் பொன்மலை வில்லெனக் கொண்டீர்
வள்ளி யீரென நும்மைவந் தடைந்தால்,
வாய்தி றந்தொரு வார்த்தையுஞ் சொல்லீர்
எள்ளி லெண்ணெய்போல் எங்கணு நின்றீர்
ஏழை யேன்துறை யேனறி யீரோ?
ஒள்ளி யீருமை யன்றியொன் றறியேன்
ஒங்கு சீரொற்றி யூருடை யீரே!

கற்ற நற்றவர்க்கே அருள்வீரேல் கடையனேன் எந்தக் கடைத்தலை செல்வேன்? இன்று வந்து என்னை அடிமை கொள்ளாவிடில் பழி நுமதே.

ஐய ரேயும தடிய னுனகில்
   அடிகள் நீரென தாண்டவ ராகிற்
பொய்ய னேனுளத் தவலமும் பயமும்
   புன்க ணுந்தவிர்த் தருளுதல் வேண்டும் ;
தைய லோர்புற நின்றுக ளிப்பச்
   சச்சி தானந்தத் தனிநடம் புரியும்
மெய்யரே மிது துய்யரே தரும
   விடையரே யென்றன் விழியமர்ந் தவரே!

என்று கோடி வகையாக முறையிட்டு முறையிட்டுத் தோன்ருத் துணை வலியால் மனப்பேயை வென்ருர் எம்பிரான் ; ஒற்றிப் பற்றே யன்றி மற்றைப் பற்றற் ருர்.

---

## ௧௪. குரு தரிசனம்

இராமலிங்கர் இங்ஙனம் சிவபெருமானை அல்லும் பகலும் நினைந்து கனிந்துருகிச் சித்தந் தெளிந்து சிவமாகிவரும் நாட்களில் ஒருநாள் தேரடித் தெரு வழியே கோவிலுக்குச் சென்றுகொண்டிருந்தார். ஆங்கொரு திண்ணையில் அவதூதர் ஒருவர் அமர்ந்து, அங்குப் போவோர் வருவோரின் மன விகாரங்களுக் கேற்ப "இதோ கழுதை, அதோ மாடு, அதோ பன்றி போகிறது!" என்று கூறிவந்தார். நம்பிரான் அவ் வழியே செல்லும் போதோ "இதோ உத்தம மனிதன் போகிறான்" என்று மகிழ்ந்தார். எம்பிரானார் அவரிடம் சிறிது உரையாடினார்; அன்றிரவே அவதூதர் அவ்விடம்விட்டுச் சென்றார்.

மற்றொரு நாள் வள்ளலார் சிவதரிசனஞ் செய்து வரும்போது, முன்செய் தவமும் அன்று குவிந்த அன்பும் உருவெடுத்தாற் போன்று ஒரு பழுத்த சிவ யோகியைத் தரிசித்தார். சிவபெருமானே அருள் வல்ல பத்தால் அன்பனுக்காக ஆங்கு அவ்வண்ணம் மானும், மழுவும், நெற்றி விழியும், பிறையும், நதியுங் கரந்து அவ் வாறு தோன்றினார் போலும்! அந்தத் தவராஜர் காலடியில் வீழ்ந்து,

கருணைநெடுங் கடலென்கோ! கல்லாலின்
அடியமர்ந்த கடவு ளென்கோ!
அருணகிரிக் கருள்புரிந்த ஆறுமுகக்
குருவென்கோ! அமுத மென்கோ!

மருவாலிய வருபிறவி மருந்தேன்கோ!
அடியேன்கண் மணியேன் கோ! மெய்த்
தெருணிறைந்த, சிவதருவே நின்றனையீண்
டெவ்வாறு சிந்திக் கேனே!

என்று இறைஞ்சிக் குறையிரந்து போற்றி செய்ய, அருட் குருநாதன் கடைக்கணித்து ஞான திட்சை செய்து, சிவஞானம் போதித்து அன்பறிவிற் பழுத்த பக்குவக்கனியைப் பார்த்து, "பரமன் உவப்பது பாட்டு; நாடோறும் பரமன் மீது அருட்பா பாடி வருக! எதற்கும் அஞ்சேல்!" என அபய மீந்து மறைந்தார்.

---

## ௨௦. ஆட்கொண்டான்

இஃது எவ்வாறிருப்பினும், வள்ளலார் ஆண்டவன் தம்மை ஆண்டுகொண்ட நேர்த்தியை நான்காவது திருமுறையில் அருட்பாக்களாக அள்ளித் தெளித்துள்ளார். அவற்றைக் கூறி அருட்சோதிக் குருவின் குறிப்பை முடிப்பாம்:—

"என்னை யாட்கொண்ட நித்திய பரிபூரண சுத்த சிவமே! அம்பலத்தரசே! சோதி நடராஜ மணியே! என் விருப்பமெலாம் நின்னருள் விருப்பமே. என்னை வலிந்தாட் கொண்ட மணியே! அறியாத சிறியேனை அறிவோங்கச் செய்தாய்; என் பருவ மறியாமல் இன்ப நிலை தந்தருளினை. ஒன்று மறியாத இளம்பருவத்தே என்னுளத் தமர்ந்து, யான் மயங்குந் தோறும் அன்னையெனப் பரிந்தருளி, அப்பனெனத் தெளிவித்து அறிவுறுத்தினை.

பாடும்வகை அணுத்துணையும் பரிந்தறியாச் சிறிய
 பருவத்தே யணிந்தணிந்து பாடும்வகை புரிந்து,
நாடும்வகை யுடையோர்கள் நன்குமதித் திடவே
 நல்லறிவு சிறிதளித்துப் புல்லறிவு போக்கி
நீடும்வகை சன்மார்க்க சுத்தசிவ நெறியில்
 நிறுத்தினையச் சிறியேனை நின்னருளென் னென்பேன்!
கூடும்வகை யுடையரெல்லாங் குறிப்பெதிர்பார்க் கின்றார்;
 குற்றமெலாங் குணமாகக் கொண்டகுணக் குன்றே!

"என் உளத்தே எல்லா மறிவித்து மன்னுகின்ற மெய்யறிவின்பப் பொருளே! நின்னருளால் நான்

கற்றதும், கேட்டதும், கண்டதும், கொண்டதும் நின்னிடத்தே. நான் மேலேற முடியாது இளைக்கின்ற பருவத்தில், ஒரு வீரிய சக்தியைக் கைகொடுத்து மேலேற்றச் செய்தாய்; அடியார் உள்ளமெனும் பொதுவில் நடமாடும் பொருளே! நான் கேட்கின்றவையெல்லாம் ஒருங்கே யுணர்ந்து அளிக்கின்றாய்!

அஞ்சாதே யென்மகனே அநுக்கிரகம் புரிந்தாம்;
ஆடுகநீ வேண்டியவா றுடுக விவ்வுலகில்;
செஞ்சாலி வயலோங்கு தில்லைமன்றி லாடுந்
திருநடங்கல் டன்புருவாய்ச் சித்தசுத்த னாகி,
எஞ்சாத நெடுங்காலம் இன்பவெள்ளந் திளைத்தே
இனிதுமிக வாழியவேன் றெனக்கருளிச் செய்தாய்;
துஞ்சாதி யந்தமிலாச் சுத்தநடத் தரசே
துரியநடு வேயிருந்த சுயஞ்சோதி மணியே!

ஊனந்தங்கிய மாயை யுடலிலிருந்தும் ஊனமில்லா திருக்கின்ற உள வருளினாய்; இறைவா! நினதருளாலே என்னைக் கண்டுகொண்டேன். என்னுள் உன்னைக் கண்டேன்; பின் இருவரும் ஒன்றாக உறைவது கண்டு அதிசயித்தேன். எனக்குப் புத்தி சித்தி அறிவு அளித்து அழியாப் புனித நிலையிலிருக்கப் புரிந்த பொருளே! நீ நான் எனும் போதமும் நீக்கித் தனித்த சுகாதீதமும் தந்தருள்! தீய சமய நெறி விடுத்து உண்மைத் திருவருட் பொது நெறி சேர்த்தாய். அன்னிய மில்லாத சுத்தாத்வைத நிலை யமர்ந்த பரம்பொருளே, அப்பா! நின் திருவருட் பேரமுதத்தின் அருமை யறிந்தேன். இப்பாரில் என்னை வலிய அழைத்துக் கரத்தில் "பெருங் கருணையின்பம் இனிதளித்தனை."

---

## உக. ஒன்று கொடுத்தனை

திருவருட் சோதியார், தாம் பெற்ற குருவருட் பேற்றைப் பின்னும் அருளிச் செய்கிறார் :—

"திருவுருக் கொண்டு சிறியேன் முன் எழுந் தருளி, திருநீற்றுப் பையவிழ்த்து நீறு தந்தனை; அம் பலத்தே நடம்புரியும் என் குருமணியே! என் வடிவந் தழைப்ப ஒரு பொன்வடிவந் தரித்தே, என்முன் நடந்து கருணை ததும்ப என்னை நோக்கி யிளநகை செய்தருளித் திருநீ றளித்தனை; என் கையில் ஒரு அருள் மணப்பூ தந்தனை."

இன்னுந் தெளிவாக அருட்பிரகாச மாலையில் தம தனுபவத்தை அருளுகிறார் :—

"பொது நடஞ்செய் யரசே! அன்றொரு நாள் இரவில் அடியேன் உற்றவிடந் தேடிவந்து, கதவு திறப்பித்து, என்னை வரவழைத்து, நான் மறுத்தும், 'மகனே வருந்தாதே; இதனை வாங்கிக்கொள்!' என்று என் கையில் ஒன்று கொடுத்தனை. அன்று அதனை அறியாது உழன்றேன். இன்று என்னகத்தே புகுந்தருளி அதனைத் தெரிவித்து இன்புறச் செய்தனை. அன்பர் மனக்கோயிலில் அமர்ந்தருளும் மலரடி வருந்த நடந்து, என் மனைக்கதவு திறப்பித்து, ஒன் றைக் கையிலீந்து "மகனே! நீ என் தொழும்பன், நீ பண்பொடு வாழ்க, மகிழ்ந்துறைக, மயக்கமுறேல், ஒன்றும் அஞ்சேல்!" என்று போதாந்தத்தில் விளங் கும் திருமேனி காட்டித் தேமாவின் பழம் பிழிந்து

வடித்து நறுந்தேனும் நெய்யுங் கலந்த தெனத் திரு வார்த்தை அருளினை.

பிரணவத்தின் அடிமுடியி னடுவினுநின் றேங்கும்
பெருங்கருணைத் திருவடிகள் பெயர்ந்துவருந் திடவே,
கரணமுற்று நடந்தடியே னிருக்குமிடந் தேடிக்
கதவுதிறப் பித்தருளிக் கடையேனை யழைத்துச்
சரணமுற்று வருந்தியவென் மகனேயிங் கிதனைத்
தாங்குகவென் றென்றெனது தடங்கைதனிற் கொடுத்து
மரணமற்று வாழ்கவெனத் திருவார்த்தை யளித்தாய்
மன்றுடையாய் நின்னருளின் வண்மையெவர்க் குளதே!

வேதாந்தம் சித்தாந்தம் இரண்டும் விளங்க, ஒருமையிலே இருமை யென வுருக்காட்டி, நாதவிந்து நிலைக்கரசாய், அருளுருவாய் ஐந்தொழிலும் நடத்தித் தற்போதந் தோன்றாத தலந்தனிலே தோன்றும் சிற் போதத் திருமணி மன்றிலே எம்மதத்தில் எவ்வெவர்க் கும் இசைந்த அனுபவமே! உள்ளுருகுந் தருணத்தே ஒளி காட்டி விளங்கும் செழுமணியே! என்னுருவம் எனக் குணர்த்தினை; நான் தனித்த இடத்துத் தோன் றுந் துணையே, தனியா விடத்துத் தோன்றாத் துணையே! அருள் விளங்கும் உள்ளத்தில் அதுவாய் விளங்கிப் பிரயோக அனுபவத்தே அகம்புறந் தோன் றாத பரஞ்சோதியே என்னறிவை யுண்டு என்னுடன் கூடி, என்னின்ப மெனக் கருளி, யென்னையுந் தானாக் கித் தன்னறிவாய் விளங்கினை."

இதுவே வள்ளலார் எளிதிற் பெற்ற பேறு. தம் முள்ளே அருட்கதவு திறந்து, இதய மணி மண்ட பத்தில் சோதி நடம்புரியும் சற்குரு மணியால் அரு

ளைப் பெற்று என்றுந் தாம் அதுவாயிருக்கும் தன் மயச் சின்மய வுணர்வான சாகாக் கலையைப் பெற்ற வள்ளலார் வாழ்வு அன்றுமுதல் ஒரு பெரிய மாறுத லடைந்தது. தம்மை முற்றும் உள்ளத்திலுள்ள அருளாசானுக்கே அவர் அர்ப்பணஞ்செய்தார்.

என்னுயிரும் என்னுடலும் என்பொருளும் யானே
இசைந்துகொடுத் திடவாங்கி யிட்டதன்பின் மகிழ்ந்தே,
தன்னுயிருந் தன்னுடலுந் தன்பொருளு மெனக்கே
தந்துகலந் தெனைப்புணர்ந்த தனித்தபெருஞ் சுடரே!
மன்னுயிருக் குயிராகி யின்பமுமாய் நிறைந்த
மணியேயென் கண்ணேயென் வாழ்முதலே மருந்தே!
மின்னியபொன் மணிமன்றில் விளங்குநடத் தரசே
மெய்யுமணிந் தருள்வோயென் பொய்யுமணிந் தருளே!

என்ற பாட்டில் தம்மைக் கடவுளுணர்வில் இரண்டறக் கலப்பித்துத் தம்மை அவனுள் வைத்து அவனைத் தம்முள் வைத்து, அவனே தாமாக மாறும் நிலை தெளிவாகிறது. இத் தெய்விக மாறுதலே (Transformation) சாகா வாழ்வு. பூரணப் பொன்னொளிர் மாறுதலுக்கு அருட்பெருஞ்சோதி உதயமாவதே (Spiritual Light) இனி அடுத்த அனுபவம். அதனிடையே நிகழ்ந்த கதையைச் சுருக்கிக் கூறுவாம்.

---

## ௨௨. பசி தீர்த்த தாய்

இங்கிலேயில் வள்ளற் பெருமானுக்கு இயல்பாகவே அற்புத சித்திகள் உண்டாயின. அம்மையப்பன் தன் அருள்மணிப் பிள்ளேயின் முழுப் பொறுப்பும் ஏற்றுக் கொண்டான். அருட்பா நாண் மலர் களேச் சுத்த சிவனுக்கு அர்ச்சிப்பதே இன்பத் தொழிலாகக் கொண்ட நம் பெருமான் சிவபிரானே ஆடிப் பாடி வணங்கி ஆனந்த பரவசங்கொண்டு ஒற்றிக் கோயில் யாக மண்டபத்தில் சிவக் கலப்பி லிருக்கும் போது பசிப்பிணி வாட்டியது. அவர் அதைப் பாராட்டாது மெய்ம்மறந்து சுகானுபவத்தில் துரியத்துயில் கொண்டிருந்தார். மைந்தன் பசிக்கத் தந்தை பொறுப்பனே? நள்ளிரவில் குருக்கள்வடிவுடன் வந்து எழுப்பி அருளன்னம் ஈந்து பசியாற்றினன் உலகத் தந்தை. மற்ருெரு நாள் திருவொற்றியூர் சென்று வீட்டிற்கு அகாலத்தில் வந்தார்; வீடு உள்ளே தாளிட்டிருந்தது; திண்ணேயில் பசியுடன் படுத் துறங்கினர் வள்ளலார். அருளன்னே வடிவுடை நாயகி, அவர் தம் தமக்கையார் உருக்கொண்டுவந்து, அருட் பிள்ளேயை யெழுப்பி, உண வீந்து சென்ருள். உண்டதும் வள்ளலார் மெய்ம்மறந்து படுத்திருக்கை யில், கதவைத் திறந்து தமக்கையார் வந்து, தம்பியாரை எழுப்பி உண்ண அழைத்தார். "இப்போது தானே உணவளித்தீர்!" என்ருர் வள்ளல். "நான் இப்போது தானே கதவு திறந்து வந்தேன்; முன்னே வர வில்லேயே! என்ன வியப்பு!" என்ருர் தமக்கையார்.

பின்னர் அருளன்னையின் திருவிளையாட்டை அறிந்து இருவரும் மகிழ்ந்தனர்.

“ அன்றொரு நாள் நம்பசிகண் டந்தோ தரியாது
நன்றிரவிற் சோறளித்த நற்றாய் காண் ”

நான்பசித்த போதெல்லாந் தான்பசித்த தாகி
நல்லுணவு கொடுத்தென்னைச் செல்வமுற வளர்த்தே
ஊன்பசித்த இளைப்பொன்றுந் தோற்றாத வகையே
ஒள்ளியதெள் ளமுதெனக்கிங் குவந்தளித்த வொளியே !

என்று தம் ஆன்மத் தந்தைதாய் தரும் அருளமுதை வியக்கின்றார் வள்ளற் பெருமான்.

---

## உ௩. வியத்தகு செயல்கள்

இக்காலத்தில் நிகழ்ந்த அற்புதங்கள் பல. சதா சகஜ நிஷ்டை கூடித் திருவொற்றியூருக்குச் சென்று வந்துகொண்டிருந்தார் வள்ளலார். ஒரு நாள் அங்குப் பட்டினத்தடிகளின் ஆலயத்தொண்டு புரிந்துவந்த முதிர்ந்த அம்மையாரொருவர் 'அற்புதம் ஒன்று காட்டி யருள்க!' எனவே, அவள் கையில் ஒரு பிடி மணலை வாரிக் கொடுத்து மூடிக்கொள்ளச் சொல்லிச் சென்று விட்டார். அவ்வம்மையார் கையைத் திறந்ததும் அம் மணல் சிறுசிறு சிவலிங்கங்களாகத் தோன்றியது. ஒரு நாள், வியாசர்பாடியில் பிரசங்கம் புரிந்து இரவு நெடுநேரத்திற்குப் பின் நண்பர் பலருடன் வந்து கொண்டிருக்கும்போது ஒரு பெரிய பாம்பு சீறி வந்தது; அனைவரும் அஞ்சியோடினர். அடிகள் மட்டும் அப்படியே நிற்கவே, பாம்பு அடிகளின் காலிற் சுற்றிக்கொண்டு சற்றிருந்து உத்தரவிட்டதும் சென்று விட்டது. மற்றொரு நாள் இரு நண்பருடன் திருவொற்றியூர் செல்லும் வழியே மோகினிப் பிசாசு வந்து வழி மறித்தது. "பிச்" என்றார், ஐயர். உடனே ஓடி மறைந்தது. மற்றொரு நாள் மாணவர் பலருடன் ஒற்றியூர் செல்லுமிடையே பெரு மழை வரவே அனைவரையும் சட்டென்று ஒரு குறுக்கு வழியில் இட்டுச் சென்றார். உடனே எல்லாரும் ஒற்றியூர் கண்டனர். இத்தகைய நிகழ்ச்சிகள் பல.

---

## உச. மனுமுறை கண்ட வாசகம்

அல்லும் பகலும் ஆண்டவன்மேல் அருட்பா பொழிந்து, பல அரிய விஷயங்களைக் குறித்துச் சொற் பொழிவு நிகழ்த்தி, சதா கடவுளின்ப வுணர்வில் கரை கடந்து நிற்கும் நம் பெருமானைச் சுற்றிக் கடவுட் காந்தம் வீசத் தொடங்கியது. அக்காந்தம் மாந்தர் மனத்தை இழுத்துத் தனதாக்கியது. அருட்பா கேட் கக் கூடுவோர், அன்புக் காந்தத்தின் வசப்பட்டு ஆடிப்பாடிப் பரவசமாகக் கூடுவோர், இலக்கியங் கற்றுத் தெளியக் கூடுவோர், புதிய நூல்களை ஆக்க வேண்டி வருவோர், பழைய நூல்களைப் பார்வையிட வேண்டுவோர்—இத்தகைய அன்பர்கள் அடிகளை எப்போதுஞ் சூழ்ந்திருந்தனர். இசைபெற்ற புலவர் சபாபதி முதலியாரின் வேண்டுகோட்படி அடிகளார் "மனுமுறை கண்ட வாசகம்" என்னும் மிகவும் அரிய உரை நூலைச் செய்துகொடுத்தார். அதன் நடைச் சிறப்பும், பொருட் சிறப்பும் தமிழுக்கே ஒரு சிறப்பு. அந்நூலை அனைவரும் போற்றி வரவேற்றனர். அது இன்றும் கலாசாலைகளிலும், பொதுவிலும் அனைவரா லும் படிக்கப்பட்டு வருவதால் அதன் அருமை பெரு மையை அன்பர் அறிவர். இளவரசன் வீதிவிடங்கன் ஊர்ந்து சென்ற தேர்க்காலிற் பட்டு இளங்கன்று ஒன்று இறந்ததைக் கேட்ட மனுநீதிச் சோழன் வருந்தும் உருக்கத்தைக் காண்மின்கள் :—

"நல்லோர் மனத்தை நடுங்கச் செய்தேனோ, தானங் கொடுப்போரைத் தடுத்து நின்றேனோ, கலந்த

சிநேகிதரைக் கலகஞ் செய்தேனோ, மனமொத்த நட்புக்கு வஞ்சகஞ் செய்தேனோ, குடிவரி உயர்த்திக் கொள்ளை கொண்டேனோ, ஏழைகள் வயிறு எரியச் செய்தேனோ, தருமம் பாராது தண்டஞ் செய்தேனோ, களவு செய்வோர்க்கு உளவு சொன்னேனோ! பொருளை இச்சித்துப் பொய்சொன்னேனோ, வேலையிட்டுக் கூலி குறைத்தேனோ, பசித்தோர் முகத்தைப் பாராதிருந்தேனோ, கோள் சொல்லிக் குடும்பங் கலைத்தேனோ, கல்லும் நெல்லுங் கலந்து விற்றேனோ, அன்புடையவர்க்குத் துன்பு செய்தேனோ, தவஞ் செய்வோரைத் தாழ்வு சொன்னேனோ, சுத்த ஞானிகளைத் தூஷணை செய்தேனோ, தெய்வம் இகழ்ந்து செருக்கடைந்தேனோ!" என்னும் அரிய வாசகங்கள் என்றும் புதிய நீதி மலர்களன்றோ?

---

## உரு. ஒழிவிலொடுக்கம்

கொன்னூர் ஐயாசாமி முதலியாரவர்களின் வேண்டுகோட்படி 1854-ஆம் ஆண்டு வள்ளலார் தொண்ட மண்டல சதகத்தைப் பார்வையிட்டுப் பதிப்பித்தார். அதற்கொரு அரிய நூற்பெயரிலக்கணம் எழுதி அப்பதம் தொண்டை மண்டலமல்ல, தொண்டமண்டலம் என்று தொல்காப்பிய மேற்கோள்கள் பலவற்றைக்கொண்டு நிறுவினார். அந்நூலிற்குக் காஞ்சி சபாபதி முதலியார், அஷ்டாவதானம் சபாபதி முதலியார் போன்றோர் சாற்று கவி யீந்து போற்றினர். இதன் பின் ஒழிவிலொடுக்கம் என்னும் அருமைமிக்க சிவாத்துவித நூலைப் பார்வையிட்டு,

"வள்ளல் குருராயன் வாதுவென்ற சம்பந்தன்" எனவரூஉம் முதற் செய்யுளுக்கு அரிய விரிவுரையெழுதி, ஏனைய வெண்பா மணிகளுக்கும் குறிப்புரையெழுதி யருளினார். அடிகள் பதிப்பே இன்றும் விளங்குகிறது. இவ்வரிய நூல் ஒவ்வொருவரும் பன்முறை யோதி உணரத்தக்கது. அதனின்று இரண்டொரு மணிகளை இங்குத் தெளிப்பாம்.

நாயேறி வீழ்ந்தேன்? நடாத்துகிலேன்? ஞானிக்குப்
பேயாஞ் சகம்பழித்தேன்? பேணுகிலேன்? — தோயார்
பெருமை சிறுமையிலை ; பின்னுமுன்னு மில்லை ;
வரைவற்று வேண்டியசெய் வார்.

மன்னுதி சத்தாதி வாக்கு மனமாதி
கன்னுதி நாதாந்தங் கண்டகன்ற — உன்மை
தனையனுவேன் றேயுணர்த்துஞ் சார்பினையுங் கண்ட
உனையறிவேன் றுள்ளே யுணர்.

என்னுணை யென்னுணை யென்னுணை யேகமிரன்
டென்னுமற் சும்மா இருவென்று—சொன்னன்
திருஞான சம்பந்தன் சீர்காழி நாடன்
அருளாளன் ஞானவிநோ தன்.

என வரூஉம் அரும் பெரும் ஆத்ம ஞான மணிப் பெட்டகமே ஒழிவிலொடுக்கமெனும் ஒப்பற்ற நூல்.

---

## உ௯. நமது பிள்ளை

இப்போது (1849) இரு மொழிப் புலவர் ஒருவர் வருகிறார்—தொழுவூர் வேலாயுத முதலியார், சென்னை மாகாணக் கல்லூரித் தமிழ்ப் பண்டிதர், ஆரியம் தமிழ் இரண்டிலும் வல்லவர். காடு முரடான பண்டித நடையில் காரிகை பேரிகை முழங்கும் நூறு சிலேடைப் பாட்டுகளைத் தாமே பாடிப் "பழஞ் சுவடிகளிற் கிடைத்தன ; சங்கப் புலவர் வாக்கு" என்று நம் அருட் புலவரிடம் நீட்டுகிறார். "இவை சங்கப் புலவர் சாற்றியதல்ல. அவர்கள் பாட்டில் இவ்வளவு குற்றங்கள் இரா. பொருளிலக்கணந் தேறாக் கற்றுக் குட்டி பாடியவை இவை" என்றார் உள்ளுணரும் அருட் புலவர். முதலியார் முகம் சுண்டி, செருக்கற்று ஓதாதுணர்ந்த ஒளிமணிப் புலவரான வள்ளலார் அடியில் உதிர்கனிபோல வீழ்ந்து தம்மை மன்னித்து ஆட்கொள்ள வேண்டுமென்றார். நம் பெருமானோ கருணையகங் கனிந்து, "நீ நமக்குப் புதியவனல்லன். மிகப் பழையவனே ; நம் பிள்ளை நமக்கே கிடைத்தனை" என்று ஏற்றருளி அவருக்குக் குமரவேள் உபாசனையை உரைத்தருளினார். அன்று முதல் முதலியார் கல்வியறிவு வளர்பிறையானது. அவரே தலைமாணாக்கர். அவரே வள்ளலாருடன் இருந்து பணியாற்றி அருட்பாக்களையும் முதன்முதல் வெளியிட்டார். அடிகளுக்கு அடியார் அளவிலர். எனினும் அவர்களில் வீராசாமி முதலியார், பொன்னேரி சுந்தரம் பிள்ளை, ஸ்ரீநிவாச வரதாசாரியார், ஞானசுந்தரமையர், பண்டார ஆறுமுக ஐயா முதலியோர் பெயர்

கள் முன்னிற்கின்றன. இப்போது ஐயர் மிகவும் அரிய அருட்பாக்கள் பாடியளித்தார். முதல் திருமுறையில் அடங்கிய சிவநேச வெண்பா, நெஞ்சறிவுறுத்தல், மகாதேவ மாலை, இங்கித மாலை முதலிய அரிய தேன்மலர்க்கொத்துகள் வள்ளற் பெருமானின் அருள்வனத்திற் பூத்தன.

---

## உஎ. ஆண்டவனை வேண்டும்!

வள்ளலார் நாவில் ஊறும் அமுதக்கங்கை, ஆண்டவன் திருவடிக்கு மஞ்சன மாட்டுவதைத் தவிர வேறெந்த நரர் மீதும் ஒரு சிறு துமியும் தெறிப்பதில்லை. அதனாலன்றோ, அந்த மஞ்சன ஆற்றை இன்று ஒரு தெய்விக மோகத்துடன் தமிழர் அள்ளிப் பருகி ஆவியின் வேட்கை தணிகின்றனர்!

கந்தசாமி முதலியார் என்றொருவர் தமது வறுமை நீங்கச் சில செல்வருக்குச் சீட்டுக் கொடுக்கும்படி வள்ளற் பெருமானை வேண்டினார்.

"எட்டாலுங் கேளய லென்பாரை
நான்சிரித் தென்னைவெட்டிப்
போட்டாலும் வேறிடங் கேளேன்; என்
றனை புறம்விடுத்துக்
கேட்டாலும் என்னை உடையா
னிடஞ்சென்று கேட்பனென்றே
நீட்டாலும் வாயுரைப் பாட்டாலுஞ்
சொல்லி நிறுத்துவனே!"

என்று அருளி "ஆண்டவனையே வேண்டும்! உமது வறுமை கதிர்முன் பனியாகும். மாந்தரை வேண்டற்க!" என்றார் பொற்சபை அரசனின் செல்வப் புதல்வர்.

மற்றொருகால், தம் உறவினரும் மாணவருமான புராணிகர் சுந்தரம் பிள்ளை வறுமை தீர்த்தருள வேண்டிய போதும்,

திருவோங்கு பொற்சபையுஞ் சிற்சபையும்
நம்பெருமான் செய்யா நின்ற
உருவோங்கும் ஆனந்தத் தாண்டவமும்
கண்டினிதாங் குறைக ; யானும்
தருவோங்கு தில்லைநகர்க் கோரிருபா
ஞள்வரைக்குட் சார்கின் றேன்;நம்
இருவோங்கள் குறையும்இறைக் குரைத்தகற்றிக்
கோளலாம் ; நீ யினையேல் ஐயா !

என்று அருளினர்.



## உஅ. என் இச்சை

சிற்சபைத் தந்தை யன்றோ தனது அருட்சோதி விளக்கத்திற்காக இச் செல்வனை அருமையான ஞானப் பாலூட்டி வளர்த்து வருகிறான்! இறைவன் எத்தகை அருள் வழியில் தன் மைந்தனைச் செலுத்தி வந்தா னென்பது வள்ளலார் வாக்கினின்றே நமக்குக் கிடைத்துள்ளது. அருட் திருமுறை பிள்ளைச் சிறு விண்ணப்பம், பிள்ளைப் பெரு விண்ணப்பம் இரண் டையும் நோக்குவாம். அதுவே அருளாளர் சென்னை வாழ்வின் கண்ணாடி! அதுவே அருட்சமய சாரம்! சுத்த சன்மார்க்க தீபம்!—

அம்மை யப்பனே, என்னை அடித்தது போதும்; தந்தை அடித்தால் தாய் அணைப்பாள்; தாய் தந்தை இருவரும் நீயே; என்னை அணைத்தருள்! எனையீன்ற வள்ளலே! பெற்ற பிள்ளையின் குணங்களைப் பெற்ற வர் அறிவர்; நீ என் குற்றங்களை அறிவை; உன்னி டம் யான் பிறர் போல ஊண், பூண், உடை, உடைமை, பொய்யுடையார் விரும்பும் புணர்ச்சி, வானின்பம், எதுவும் விரும்பவில்லை; என்னை அணைந்து என்னுடன் விளையாடவே விரும்பினேன். நீ விழைவிக்க விழைந் தேன்; பிறர்மீது கருணையால் கைபிழையாமை கருது கின்றேன். பிறர் நையப் பிழை செய்தேன். எனக்கு அறிவு வந்தது முதல் நீ இட்ட பணியே பணித்தவாறு உன்னிசையாற் புரிந்து வருகிறேன். நான் நீ தந்த மடவாருடன் பொருந்திய புணர்ப்பும் உன் புணர்ப்பே யன்றி என்னதல்லவே. எனக்கு அதில் ஒரு சிறிதும்

சம்மதமில்லை; இன்னும் மடந்தையர் முயக்கில் எய்துவித்தால் அதுவும் நின் இச்சையே; சிறு பருவத்திலேயே நான் ஊண் வெறுத்ததை நீ யறிவாய். நான் உனது திருவருளமுதமே விழைந்தேன். இன் சுவையுணவை நின் சுவை யுணவென்றே உண்கின்றேன் தற் சுதந்தரம் எனக்கதிலில்லை. பணத்திலே சிறிதும் ஆசை கொள்கிலேன்; சிறு பருவம் முதல் பிறர் கொடுத்த பணத்தை அவர்மீது எறிவேன்; கிணற்றிலும், குளத்திலும், மேட்டிலும் எறிவதை நீ அறிவாய். நீ எனக்குக் கொடுக்கும் பொருளையே பிறருக்குக் கொடுக்கின்றேன். இவ்வுடலாசை எள்ளளவும் பற்றிலேன். உடம்பு தடித்திட நினைத்திலேன். சிற்றின்ப சுக போகங்களை அருவருக்கின்றேன். இவ்வுலகத்தில் ராஜ போகமும் விரும்பேன்; அவ்வுலகத்தில் இந்திர போகமும் விரும்பேன். முத்தி பெறவும் எனக்கிச்சையில்லை.

இறக்கவு மாசை யில்லையிப் படிநான்
இருக்கவு மாசையின் றினிநான்
பிறக்கவு மாசை யிலை; யுல கெல்லாம்
பெரியவன் பெரியவ னெனவே
சிறக்கவு மாசை யிலை; விசித் திரங்கள்
செய்யவு மாசையொன் றில்லை;
துறக்கவு மாசை யிலை; துய ரடைந்து
தூங்கவு மாசையொன் றிலையே!

சற்சபைக் குரியார் தம்மொடுங் கூடித்
தனித்தபே ரன்புமெய் யறிவும்,
நற்சபைக் குரிய வொழுக்கமும், அழியா
நல்லமெய் வாழ்க்கையும் பெற்றே

சிற்சபை நடமும் பொற்சபை நடமுந்
தினந்தோறும் பாடிநின் றடித்
தெற்சபை யுலகத் துயிர்க்கெலா மின்பஞ்
செய்வதேன் விச்சையா மெந்தாய்!

உன்னைக் கலந்து ஊழி தோறூழியும் பிரியாத ஒருமையுற்று, உன்னையே பாடி, பிறர்க் கினிதாற்றி, எவ்வுயிர்த்திரளும் என்னுயிரென்றெண்ணி, எவ்வுயிர்க் குறும் அச்சமும் இடையூறும் நீக்கி, சிற்சபைக் காளாக்கி, வேதாகமக் கலைகளை இயல் பெறப் புதுக்கி, தங்கம் போன்ற நல்லோர் கூடிய ஞான சமரச சுத்த சன்மார்க்க சபை கண்டு, சங்கஞ் சார்ந்து ஒரு கோயில் கண்டு, அச்சங்கத்தில் அடியேன் உன்னைப் பாடி யாடவும் இச்சை; கருணையே வடிவாகிப் பிறர் துயர் அச்சந் தவிர்த்து, புலை கொலையற்ற நெறியில் உலகை உய்விக்க இச்சை. மண்ணுலகத்தில் உயிர் வருத்தத்தைக் கண்டும் கேட்டும் ஒருசிறிதும் நான் சகிக்க மாட்டேன். இதுவே என் நவையிலா இச்சை; தவமிலேன் எனினும் உனதிச்சையால் இவற்றை அருளாய்!

---

## உகூ. இரக்கம்! இரக்கம்!

"எனையாண்ட கருணையா ரமுதே! என்னுயிர்க் குயிரே! சிற்றம்பலக் கனியே, திருச்செவி சாய்ப்பா யாக!

அன்பர் அறிவில் ஓங்குந் தலைவனே! என் அண்மையர், துணைவர், உற்றார், உறவினர் முகத்தில் இளைப்பைக் கண்டபோதெல்லாம் கலங்கினேன்; அவர் பசியாலும் பிணியாலும் வெம்பி வெதும்பக் கண்டு விதிர்விதிர்த்தேன். நண்பர்கள் அவரவர் குறைகளை என்னிடங் கூறும்போதெல்லாம் உள்ள முடைந்தேன். செல்வர், வறியர், ஆண் பெண் அனை வரும் இவ்வுலகில் பிணியால் வருந்துவது கண்டு தளர்ந்தேன். மக்கள் இறந்ததைக் கேட்டுக் குலைந் தேன். அழுகுரல் கேட்டுப் பகீரென நடுங்கினேன். என் தாய் தந்தை, நேயர், துணைவர் பிரிவை நினைத்து நெஞ்சுடைந்தேன். நல்லோ ருடற்பிரிவு கேட்டு நடுங்கினேன். கொலைஞரைக் கண்டு கொள்ளிபோற் கொதித்தேன். பிணப் பறை கேட்டுப் பெரிதுங் கலங் கினேன். உலகரசாளுவோர் ஒருவரை ஒருவர் வாள் கொண்டொறுப்பதை வழுத்தினுந் தளர்வேன். நண் பர் வீட்டு நடப்புகட் குடைந்தேன். பசித்தவர் பட் டினி என்றுற் பரிந்தேன். பல்லி பகர்வது பிறர் துயரோ வெனக் கலங்குவேன்; புட்களும் வருந்திக் கூவும்போது அஞ்சினேன்; நச்சுயிர்களைக் கண்டு நடுங்கினேன். இமையும் புயமும் துடிக்கின் பிறர் துயர் காட்டத் துடித்தவோ என்று கலங்குவேன்.

மங்கையர் வலிக்கத் தப்பி மறைந்தேன். மையலாற் பிறர்படுந் துயரில் மயங்கினேன். சுகவுண வஞ்சினேன். அன்பர் விருந்திற் கழைத்தபோது ஒளிப்பு வார்த்தை உரைத்து அயலொளிந்தேன். இன்புறு முணவு துன்புறுமென்று வெறுவயிற்றோ டிருந்தேன்! பெற்றதாய், கேயர், உற்றவர் வாட்டம் கண்டு அஞ்சினேன்; சோம்பலிற் பதைத்தேன்; துயில் கண் டஞ்சினேன்; "சிவ சிவ, தூக்கந் தொலைப்பா" யென்றேன். கனவிற் கலங்கினேன். கல்வி பயிலுங்கால் சிறுவரை அடிக்கின் வருந்தினேன்."

[புராணிகர் சுந்தரம் பிள்ளை பாடஞ் சொல்லிக் கொடுக்கையில் சிறுவரை அடிப்பதுண்டு. வள்ளலார் இப்பாட்டெழுதி யனுப்பி அவரை அத்தவற்றினின்றுந் தப்புவித்தார்:]

"படிப்பதுநன் றெனத்தெரிந்த பாங்குடையாய்,
மன்றுள்வெளிப் பரமன் அன்பே
தடிப்பதுநன் றெனத்தெரிந்த சதிருடையாய்,
அறநவின்ற தவத்தாய், வீணில்
துடிப்பதிலாத் தூயமனச் சுந்தரப்பேர்
உடையாயென் தோழ கேள்நீ
அடிப்பதுமச் சிறுவர்களை அடிப்பதுநன்
றலவென்மேல் ஆணை யாணை!"]

---

## ௩௦. கலங்கினேன்!

கோபம், காமம் கொடிய மோகம், தாமதம், உலோபம், மதம், மற்சரம், ஆங்காரம் இவை வருமோ எனத் தளர்ந்து ஆமைபோல் அடங்கினேன்; கருத்து வேருகிக் கோயில் புகுந்தால் வருத்தமே அடைந்தேன்; புன் புலாலுடம்பின் புணர்ப்பை ஏங்கினேன்; புலாலுண்போரைக் கண்டு எலும்பிளைத்தேன். வாதம் புரிந்துழி மதி கலங்கினேன்; பொருளைக் கண்டு இருளென நடுங்கினேன்.

பொருளிலே உலக மிருப்பதா தலினல்
புரிந்துநா மொருவர்பாற் பலகால்
மருவினுற் பொருளின் இச்சையாற் பலகால்
மருவுகின் றனெனக் கருதி
வெருவுவ ரெனநான் அஞ்சியெவ் விடத்தும்
மேவிலேன் எந்தைநீ அறிவாய்;
ஒருவுமப் பொருளை நினைத்தபோ தெல்லாம்
உவட்டினேன்; இதுவுநீ யறிவாய்.

தடித்த உள்ளத்தோடு நகைப்பதைத் தாங்கேன்; அயலார் பகைகளுக் கஞ்சிப் பதுங்கினேன்.

சகப்புற வாழ்வைப் பார்த்திடிற் கேட்கிற்
சஞ்சல முறுமெனப் பயந்தே
நகர்ப்புறத் திருக்குந் தோட்டங்க டோறும்
நண்ணியும் பிறவிடத் தலைந்தும்,
பகற்பொழு தெல்லா நாடோறுங் கழித்தேன்
பகலன்றி யிரவுமப் படியே
மிகப்பல விடத்துந் திரிந்தன னடியேன்
விளம்பலேன்? நீயறிந் ததுவே!

சண்டைக் கூக்குரல் கேட்டுக் கலங்கினேன். நண்பர் அணிவித்த சரிகைத் துகிலைப் பயந்தேன். கைவீசி நடப்பதற் கஞ்சினேன். கைகளைக் கட்டியே நடந்தேன். உடம்பை வெள்ளை யாடையால் மூடினேன். பிறர் கோலமும் நடையும் நான் ஊன்றிப் பார்த்ததேயில்லை. நகர மடவார் நயந்துங் கலந்திலேன். எளியரை வலியர் அடிப்பதை யேங்கினேன். களியரைக் கண்டு கடலள வஞ்சினேன். களவெனக் கேட்டுக் கனலென நொந்தேன். உரத்துப் பேசின் உள்ள நடுங்கினேன். ஐயோ வென்று வெதும்புவோர்க் கிரங்கினேன். கண்ணீர் கண்டு கண்ணீர் உகுத்தேன்.

தேட்டிலே மிகுந்த சென்னையி லிருந்தாற்
சிறுகுறு மென்றுளம் பயந்தே,
நாட்டிலே, சிறிய வூர்ப்புறங் களிலே,
நண்ணினேன்; ஊர்ப்புற மடுத்த
காட்டிலே பருக்கைக் கல்லிலே புன்செய்
களத்திலே திரிந்துற்ற இளைப்பை
யேட்டிலே யெழுத முடியுமோ? இவைகள்
எந்தைநீ யறிந்தது தானே!

துன்பங்கண்டு துன்பாற் கரைந்தேன். கன்றுகள் கதறக் கருத்திற் கலங்கினேன். அதிர் நடை கண்டு நெஞ்சம் அதிர்ந்தேன். தீ மொழி கேட்டுத் தீ யென நொந்தேன். வாடிய பயிர்கண்டு வாடித் தவித்தேன். ஐயம் புகுந்தும் அரும்பசியால் தவிப்போரைக் கண்டு மெலிந்தேன். கடையரை வெருவினேன். கெடு நிலையாளர் கேட்டை அஞ்சினேன். கால் மேற் கால்

போட்டுக் கட்டிலிலிருக்கவும் அஞ்சினேன். பாட்டயல் கேட்கப் பாடவுங் கூசினேன். கொலை புலை நெறியைக் குறுக்கென் றஞ்சினேன். எல்லாம் நீ அறிவாய், என்னுட் கனிந்த களைகணே! என் சுதந்தரம் எள்ளளவில்லேன்; அறிவுறு நாள் முதல் உன்னை மறந்திலேன். பொய்புல காசை சிறிது மில்லேன். சிறு பருவத்தே நின்சார்புற்றேன்; பிறிதெலாம் விடுத்தேன். ஞானத் திருச்சபையிலே சத்திகள் சத்தர்கள் தழைக்கச் செங்கோல் நடாத்தும் தனி முதலே! பித்தியனுடையேன் எனினும் நின் பிள்ளை யன்றோ? நான் வாடுதல் அழகோ! இனிப்பிறவேன், இறவேன்; என்னை விட்டகலேல்!

---

## ௩௧. விண்ணப்பம் ஏற்றருள்!

"கருணைவடிவான சிவமே பொருளெனக் கண்டு அறிவித்தவாறே அருணெறி யுள்ளேன். கொடு மனப் பிழைகளை நின்பால் விண்ணப்பித்தேன்; வேறு செய விலேன். உயிரும் இரக்கமும் ஒன்றே; இரக்கம் என் னுயிர். காதலாலாடேன்; கருணையா லாடுவேன். தந்தையர் நோவத் தனயர் நடப்பரோ? எந்தையுன் பணிப்பை யான் எதிர்த்ததும் உண்டோ! வெம்பி வம்பு விளைத்த துண்டோ? கள்ளுங் கவறும் காமமும் உண்டோ? புலைகொலையென்றும் புரிந்ததுண்டோ? என்னை நீ பயிற்றப் பணிந்து படித்தனன். மனத்தில் வஞ்சம் மறைத்ததுண்டோ? நின் மனம் வெறுப்ப நிந்தித்தேனு? அன்னையே அப்பா என்னுயிர்த் துணை யென உன்னையே நினைத்து உட்குழைகின்றேன். திருவாசகப் பொருள், திருமந்திரப் பொருள், என் னுளே நீ யுணர்த்திய பொருள் இவற்றையே எண்ணி யிருக்கின்றேன். நின் காதல் கடலினும் பெரிது! பரமனே! நின்னையே பார்ப்பறப் பார்த்திருக்கின் றேன். பிறர் மேல் இரக்கத்தால் பரிதவிக்கின்றேன். அச்சம் மயக்கம் ஆணவம் மாயை தவிர்த்துன் மெய் யருள் தந்தெனைக் காவாய்! ஐயந்தீர்த்து உய்ய வை! இன்றேல் உயிரை விடுவேன்; என் விண்ணப்பம் ஏற் றருள் புரிவாய்!!"

இதுவே வள்ளற் பெருமான் உள்ளக் கிடக்கை. இதுவே அவர் வாழ்வின் அருளோவியம்! என்ன இரக்கம், உயிர்க்கருணை, தூய நினைப்பு!

## ௩௨. அன்புசெய் நெஞ்சே!

பிறவி ஞானியான அடிகளின் மனம் எப்போதும் இறைவனுடன் இரண்டறக் கலந்து பேரின்ப வானிற் சஞ்சரித்துக்கொண்டே யிருந்தது. மனம் சற்று உலகவாசனையை முகரத் தொடங்கின் அவர் அதற்குப் பலமான சாட்டை கொடுப்பார். ஞானத்திற்கு விசார மார்க்கமே சிறந்தது. வள்ளலார் உள்ளே இடைவிடாது அறிவு சொல்லி நெஞ்சைத் தம் வயப்படுத்தி வென்றார்; ஆண்டவனிடமும் முறையிட்டார். விண்ணப்பக் கலி வெண்பா, நெஞ்சறி வுறுத்தல் இரண்டும் இதற்குச் சான்றாம். இவை வைராக்கியக் கனற் பிழம்புகள்!

"காட்சியாய்க் காண்பானாய்க் காணப்படு பொருளாய், சூட்சியாய், சூட்சியால் தோய்வரிதாய், போக்கு வரவில்லாப் பூரணமாய் நிற்கும் பிரமன், சிறு பெண் பிள்ளை விளையாட்டுள் அண்டமெலாம் தோயாது கூட்டி, வித்தின்றி விளைவித்து அருளளிக்கும் சித்தன்; நீட்டாது நெஞ்சு நிலைத்தவர்க்குத் தன்னுண்மை காட்டாது காட்டி நிற்குங் கள்வன்; தம்மை ஒளிக்கின்றோர் தம்முள் ஒளிந்து, உள்ளவெலாங் கன்னமிடக் கைவந்த கள்வன்; நான்நாணத் தானென்று நிற்கும் சதுரன்; உள்ளூறி யுள்ளத் துணர்வூறி யவ்வுணர்வின் அள்ளூறி யன்பிற் கலந்தவன்; அன்பாய் நம்மை வளர்க்கும் அப்பன்; எள்ளித் திரிந்தாலும் இந்தாவென் றின்னமுதம் அள்ளிக்

கொடுக்கும் அப்பன்; வாடியழுதால் நாடி யெடுத் தணைக்கும் நற்றாய்; வஞ்ச மெண்ணினும் நெஞ்சில் வையாது ஆபத்தில் அருளுதவும் நேசன்; உள்ளங் குளிர வுயிர் குளிர மெய்குளிரக் கொள்ளுங் கருணைக் குறிப்பழகன்; பித்தா எனினும் பிறப்பறுப்பான்— அத்தகைய பரம் பொருளை அன்பு செய், நெஞ்சே! இன்றேல் நீ கல்லே! வன்னெறியிற் செல்லாதே; மாயத்தில் வீழாதே; காமப் பேய்பின் நாய்போ லலை யாதே; மாதர் மையலில் மயங்காதே! பொன்னாசை யொழி; வீண் மயக்கொழி! மண்ணாளும் மன்னர் மண்ணாலழிந்தனர்; மண்ணாசை யொழி! கோபக் கடலிற் குதியாதே! நீயா ரென்றறி! ஆவதும் அழி வதும் நின்னால். அன்பே வடிவாய், அருளே உயிராய், பேரின்பமே உணர்வா யிருக்கும் நல்லோர் கூட்டம் நாடு! பாழ் வாழ்வு நீங்கிப் பதி வாழ்வில் வாழ்!" என்று நெஞ்சறிவுறுத்துவார் வள்ளலார்.

—

## ௯௯. என் பிழைகள்

சிலகால் எம்பிரானுர் தம்மையே யிகழ்வார்: "தேவ தேவனே! உள்ளபடி ஒளியாமல் உரைக்கின்றேன்; எள்ளடியேன் வன்சொல்லன்; இன்சொலறியேன்; செக்குற்ற எள்ளெனவே சிந்தை நைந்தேன்; முக்குற்றந் தன்னை முனிந்ததில்லை. சாதகம் அறியேன். பாதகமென்ருல் எனக்குப் பாற் சோறு; கோளுரையென்ருற் கொண்டாட்டம்; நல்ல நூல் வாசிக்கவென்ருல் வாய்நோகும்.

சிந்தையொன்று வாக்கொன்று
செய்கையொன்றுப் போகவிட்டே
யெந்தைநினை யேத்தா திருந்ததுண்டு—புந்தியிந்த
சொல்லைக்கல் லென்றுநல்லோர் சொன்னபுத்தி கேளாமல்
எல்லைக்கல் லொத்தே யிருந்ததுண்டு-ஒள்ளியரால்
எள்ளூண்ட மாயா இயல்புறுபுன் கல்வியெலாம்
கள்ளுண்ட பித்தனைப்போற் கற்றதுண்டு.
வெஞ்சலஞ் செய் மாயா விகாரத்தி னுல்வரும் வீண்
சஞ்சலமெல் லாமெனது சம்பந்தம்.
இல்லை யடைந்தே யிரப்பவருக் கெப்போதும்
இல்லையென்ப தென்வாக் கியல்புகாண்-தொல்லுலகை
ஆண்டாலு மன்றி அயலார்புன் கீரைமணிப்
பூண்டாலு மென்கண் பொறுக்காது!

என் பிழைகள் எத்தனையோ சொல்ல முடியாது! எல்லாம் நீயே பொறுக்கத் தகும். என் சொற் கடங்காத இந்த ஏழை மனத்தால் இளைக்கின்றேன். நீயே எனக்கு ஆதரவு.

ஆற்றி லொருகாலும் அடங்காச் சமுசாரச்
சேற்றிலொரு காலும்வைத்துத் தேய்கின்றேன் மோகமதிற்
போய்ப்படு மோர் பஞ்சப் பொறிகளால் வெம்பாம்பின்
வாய்ப்படுமோர் தேரையைப்போல் வாடுகின்றேன்—மாய்ப்
மீன்போலு மாதர் விழியால் வலைப்பட்ட [பவரு
மான்போலுஞ் சோர்ந்து மடங்குகின்றேன்
இப்பாரி லுன்மேலன் பில்லெனினும் அன்பனென
ஒப்பாரி யேனு முடையேன் காண்!

உன் பாதம் பற்றினேன். என்னைக் கைவிடேல்!" என்று உலகின் குறைகளை யெல்லாந் தம்மேலுறுத்தி முறையிடுவார்.

பொன்னின் றெளிரும் புரிசடையோய் நின்னையன்றிப்
பின்னெனன் றறியேன் பிழைநோக்கி—யென்னை
அடித்தாலு நீயே அணைத்தாலு நீயே
பிடித்தேனுன் பொற்பாதப் பேறு.

என்று சிவனைப் பற்றுவார்.

அந்தோ துயரிற் சுழன்றடு மேழை யவல நெஞ்சஞ்
சிந்தோத நீரிற் சுழியோ! இளையவர் செங்கை தொட்ட
பந்தோ? சிறுவர்தம் பம்பரமோ? கோட்டும் பஞ்சு கோலோ?
வந்தோ டுழலுந் துரும்போ வென் சொல்வ தெம் மாமணியே!

என்று முறையிடுவார்.

---

## ௯௪. மஹாதேவ மாலை

பரம்பொருளின் உண்மைநிலையைத் தம்முள்ளே உணர்ந்து கண்டு கலந்து இன்புறும் அவருடைய உயர்ந்த பக்குவ நிலையை மஹாதேவ மாலையிற் காணலாம். மஹாதேவ மாலை தமிழ் வேதம்; ஒப்பில்லாத உபநிடத மணி. உபநிடதத்தைப் படித்து, மஹாதேவ மாலையையும் படித்தால் பழத்திற்குப் பின் பஞ்சாமிருதம் உண்பதுபோல உள்ளும் புறமும் இனிக்கும். எம்பிரான் அருளிய பாக்களில் மஹாதேவ மாலையே வாடாத பிரம்மஞானக் கற்பக மாலையாக நிலவுகின்றது. அஃது அநுபவத்தால் அறியத் தக்கது. அதற்குச் சொல்லும் எழுத்தும் உரைவிரிக்கொணது. அதன் முதற்பாட்டிலேயே அவ்வரும் பெரு மாலையின் அழகுமணங் கமழ்கின்றது.

உலக நிலை முழுதாகி, ஆங்காங் குள்ள
உயிராகி உயிர்க்குயிராம் ஒளிய தாகிக்
கலக நிலை அறியாத காட்சி யாகிக்
கதியாகி மெய்ஞ்ஞானக் கண்ண தாகி,
யிலகுசிதா காசமதாய்ப் பரமா காச
இயல்பாகி யிணையொன்று மில்லா தாகி,
அலகிலறி வானந்த மாகிச் சச்சி
தானந்த மயமாகி அமர்ந்த தேவே!

உலகெலாந் தனி நிறைந்த வுண்மை; யோகியர் அனுபவத்தில் உவப்பு; கலக்கமுறு உபசாந்த நிலை; அருள் ஞானக் காட்சி; இதய மலர் வீற்றிருக்கும் இன்பத் தேவு; வித்து, முளை, விளைவு, விளைவிக்கும் பொருள் எல்லாம் அவன்; அவன் வேதாந்த நிலை;

சித்தாந்த வுண்மை ; நாதாந்த வெளி ; முத்தாந்த நடு ; அனைத்திற்கும் முதல் ; சமயநெறி யறியாத மௌன வியோமத்தில் வயங்குவோன் ; தூலம், சூக்குமம், பரம், தற்போத நிவர்த்தி ; ஆனந்த போதமாகி ஆனந்தாதீதத் தமர்ந்தோன். அவன் மதங்கடந்த வாய்மை ; அவனே தாய், தந்தை, தனயன், தான், நான், சகலம், கேவலம், சுத்தம், சராசரம் ; அண்டம், பிண்டம், பண்டம், பொன், மணி, போகம், புறம், அகம், புனிதம், மண், மலை, கடல், மதி, இரவி, முன், பின், நடு, முடி, கருணை முகில் ; அரிதினுமரிது, பெரிதினும் பெரிது ; பேதம் அபேதம் ; உரு அரு உருவரு ; குரு ; ஆண் பெண் ; சிற்குணம், சிற்சுகம், குணரகிதம், வாசகம், வாச்சியம், வாசக வாச்சியங் கடந்த மௌனம் ; பந்த பாச முறுப் பதி ; நாசமிலா வெளி, ஒளி, நாதாந்த முடிவில் நடமிடுந் தேவன் ; பராபரன், பரம்பரன், அயன், அரி, அரன், மகேசன், சதாசிவன், நான், நானே நானுகும் பதம், தானே தானும் பதம் ; தான் நான் காட்டா அந்தரம். சகச ஞான வாணி, மந்திரம், பதம், வர்ணம், கலை, தத்துவம் ; சுடருட் சுடர், சுகமயம், ஞானக் கொழுந்து, மெய்யறிவின்பமயம், எங்கும் பூரண நிறைவு, வான், வானுலவு காற்று, நெருப்பு, நீர், புவி, தாவரம், சங்கமம், ஊன், உயிர், உள்ளொளி, உள்ளுணர்வு, உணர்வு கலந்த தீஞ்சுவை யின்பம், கண், கண்மணி, கண் கலந்த கதிர், பண், இசை, பயன், அற்புத மோனப் புத்தகம், ஞான போதம், போதாந்த பூரணம், தத்துவம், தத்துவாதீதம், யோகம், யோகப் பயன், யோகத்தி னெங்குந் தூயபோகம், ஞான யாகம்,

யாகத் திறை, யாக விளைவு, அன்பர் போகம், மோக மழிக்கும் மோனம், கண், காட்சி, காண்போன், துரிய முடிச் சோதி ; யோகர் மனக்குகை வாழுங் குகன், அருளருவி வழியும் ஆனந்தத் தனிமலை, உளங் கலந்து தித்திக்குஞ் செழுந்தேன் ;

தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீசத்
தடம்பொழிற்பூ மணம் வீசத் தென்றல் வீச
வெண்ணமுதப் பளிக்குநிலா முற்றத் தேயின்
இசைவீசத் தண்பனிநீ ரெடுத்து வீசப்
பெண்ணமுத மனையவர்வின் ணமுத மூட்டப்
பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட் டோங்கக்
கண்ணமுத முடம்புயிர்மற் றனைத்து மின்பங்
கலந்துகொளத் தருங்கருணைக் கடவுட் டேவே!

சிவம் பழுத்த அனுபவம், சிதாகாசத்தில் பரம் பழுத்த நடத்தரசு, கருணைப் பழம் பழுத்த கற்பகம், மறை முடிவினின்று கேளாமற் கேட்கின்ற கேள்வி, தற்போதத் தொழிவினிடை நிறைந்து பொங்கும் சிவானந்தப் பெருக்கு ;

பொங்குபல சமயமெனும் நதிக ளெல்லாம்
புகுந்து கலந் திடநிறைவாய்ப் பொங்கியோங்கும்
கங்குகரை காணாத கடலே, யெங்குங்
கண்ணுகக் காண்கின்ற கதியே, அன்பர்
தங்கநிழல் பரப்பிமயற் சோடை யெல்லாந்
தணிக்கின்ற தருவே, பூந்தடமே ஞானச்
செங்குமுத மலரவரு மதியே, யெல்லாஞ்
செய்யவல்ல கடவுளே தேவ தேவே!

பற்றறியா முத்தர்தமை வாழைப்பழம் போல விழுங்குகின்ற பரம ஞானத் திருவருளாளர் உட்

கலந்த சின்மயம்; கட்டகன்ற மெய்யறிவோர் மாயை விட்டகன்று, கரும மலபோத மொழிந்து, சுட்டகன்று நிற்க, அவரைச் சூழ்ந்து கலக்குந் துரியத் தேவு; உபநிடதங்க ளெல்லாம் 'உபசாந்த நிலைக்கப்பாலுள்ள நின்னைக் காணேம்' என்று வழுத்தா நின்ற தன்மயச் சின்மய சகசத் தேவு. பரவிந்து, பரநாத நிலை கடந்து, வெளி மூன்றுந் தெரிந்தும் நின் சின்மயஞ் சிறிதுந் தேர்ந்திலோ மென்று ஆகமங்கள் போற்றத் தனி நின்ற பரம் பொருளே! தானாகித் தானல்ல தொன்றுமில்லாத் தன்மையே!

மத்தேறி அலைதயிர்போல் வஞ்ச வாழ்க்கை
மயலேறி விருப்பேறி மதத்தி னேடு
பித்தேறி யுழல்கின்ற மனத்தா லந்தோ
பேயேறி நலிகின்ற பேதை யானேன்;
வித்தேறி விளைவேறி மகிழ்கின் றார்போல்
மேலேறி அன்பரெல்லாம் விளங்கு கின்றார்
ஒத்தேறி உயிர்க் குயிராய் நிறைந்த எங்கள்
உடையானே யிதுதகுமோ உணர்கி லேனே.

அருள் வெளியில் ஆனந்த வடிவெடுத்தாடும் பெரு வாழ்வே! மருள் வலையிலகப்பட்டு, இருட்டிற் கோலிழந்த குருட்டுமன் போல் தவிக்கின்றேன்; சகடக்கால் போல் மனம் எண்ணாத தெண்ணி யுருள் கின்றது; கல்லினுள் தவளை தனக்கும் உணவூட்டும் உனது கருணைநிலை யறியேன். பெற்றவளைக் காணாத பிள்ளை போலப் பேதுறுகின்றேன்; குரங்கின் கை மாலை யெனக் குலைகின்றேன்; கொம்பற்ற இளங் கொடி போல் தளர்கின்றேன்.

அருளுடைய பரம் பொருளே மன்றிலாடும்
ஆனந்தப் பெருவாழ்வே அன்புளோர்தந்
தெருளுடைய உளமுழுதுங் கோயில் கொண்ட
சிவமேமெய் யறிவுருவாந் தெய்வ மேயிம்
மருளுடைய மனப் பேதை நாயி னேன்செய்
வன்பிழையைச் சிறிதேனு மதித்தியாயில்
இருளுடைய பவக்கடல்விட் டேறேன் ; என்னை
யேற்றுவதற் கென்னுகவென் னின்பத் தேவே !

---

## ௩௫. பள்ளியறையில் திருவாசகம்

இவ்வாறு அடங்காச் சிவானந்த வெறியேறி, பாச பந்தங்களை உடைத்தெறியக் குமுறும் உள்ளம் மணத்தனைக் கடங்குமோ?

பலகால் வேண்டினர் தாயாரும் உடன்பிறந்தாரும்; "ஞானசம்பந்தர் திருமணக் கோலம் போல நினது திருமண அழகைக் காண வேண்டு"மென அவா மிஞ்சி ஒரு சிவயோகியாரைக் கொண்டு வற்புறுத்தினர். மனம் வேறுபட்ட அடிகளார் பெரியோர் வற்புறுத்தலுக்கு வாயுரை யளித்தார். உடனே தமக்கை உண்ணாமுலை யம்மையார் திருமகள் தனக்கோடியம்மாளை அடிகளாரின் வாழ்க்கைத் துணையாக வரித்தனர். வள்ளலாரோ தம் மணவாளனான ஞான நடத்தரசின் காதல் வெறிபிடித்து ஊனுறவுகளை மறந்து, சதாகால சகஜ நிஷ்டரானார். உலகியற் காதல் கனவிலுமற்ற உண்மைக் காட்சியாளரான வள்ளலார் மனை யென்றும், மக்களென்றும், மாடென்றும், உணவென்றும், உடை யென்றும் என்றும் அலையாது, உள்ளின்பந் திளைத்திருந்தார். இந்நிலை அறிவரோ இல்லறத்தார்? ஒரு நாள் இரவில் பற்றற்ற இம் மணமகனையும், தாங்கள் விரும்பி மணஞ் செய்வித்த மணமகளையும் பள்ளியறைத் தனிமையில் ஒன்று கூட்டினர். எப்படியேனும் இல்லறத்தில் அவரைப் பிணிக்கவேண்டுமெனப் பலர் முயன்றனர். அடிகளார் என்ன செய்தார்? பெண்மயிலை ஏறிட்டுப் பார்த்தாரா? இல்லை. தமது அகத்திற் கோயில்

கொண்ட மணவாளனை யெண்ணி யுருகினர்; உருகு தற்குத் திருவாசகத்தை ஓதி அவ்விரவு முழுதும் மெய் மறந்திருந்தார். இராம கிருஷ்ண பரமஹம்ஸருக்கு சாரதா தேவி போன்று அமைந்த தனக்கோடி யம்மையாரும் தம் மணாளர் பிறர்போல்வாரல் லர், ஐந்தை யடக்கி அருள் வழி நிற்கும் ஞான வீர ரெனக் கண்டு அவருடைய தூயநெறிக்குப் பழுது வராது நடந்துகொண்டார். ஞானம் முற்றிப் போயிற்று; இனிச் சித்தம் இக்கரை திரும்பாதென வீட்டிலுள்ளோரும் தமது முயற்சியில் அயர்ச்சி கொண்டனர்.

---

## ௬௫. பெண்களுக்கு யோகம்

ஆனால், எம்பெருமான் இல்லறத்தையும் பெண்களையும் வெறுப்பவரோ எனின், இல்லை. அருட்பாக்களில்,

" புண்ணைக் கட்டிக்கொண் டேயதன் மேலொரு
புடைவை கட்டிப் புதுமைகள் காட்டிடும்
பெண்ணைக் கட்டிக்கொள் வாரிவர் கொள்ளிவாய்ப்
பேயைக் கட்டிக்கொண் டாலும் பிழைப்பர்காண்;
மண்ணைக் கட்டிக்கொண் டேயழ கின்றவிம்
மடையப் பிள்ளைகள் வாழ்வினை நோக்குங்கால்
கண்ணைக் கட்டிக்கொண் டூர்வழி போங்கிழக்
கழுதை வாழ்விற் கடையென லாதுமே!

என்பன போன்ற செய்யுட்கள் பல, பெண்களை வெறுப்பன போலத் தோன்றும். அப்படியல்ல; அனைத்திலும் அருட்சோதி யாடலைக் கண்டுவக்கும் அருட்பெருமான் பெண்மையை யெள்ளவில்லை; காமக் குரோதாதிகளையே கண்டித்தார்; உலகில் மோகத்தால் மாந்தர் படும் வாதனைகளைத் தம் மேலேற்றிப் பிறர்க்காகத் தம்மையே இழிவு செய்து பாடினர்.

" பன்முகஞ்சேர் மனமெனுமோர் பரியாசப் பயலே
பதையாதே சிதையாதே பார்த்துமிட மெல்லாம்
கொன்முகங்கொண் டடிக்கடி போய்க் குதியாதேயெனது
குறிப்பின்வழி நின்றிடுநின் குறிப்பு நடவாது;

என்முனமோர் புன்முனைமே லிருந்தபனித் துளிநீ
  யிம்மேனுமுன் அடக்கிடுவேன் என்னையறி யாயோ,
பின்முனென நினையேல்காண் சிற்சபையில் நடிக்கும்
  பெரியதனித் தலைவனுக்குப் பெரியபிள்ளை யானே!

வள்ளலார் பெண்மையைப் பற்றி உயர்ந்த சமத்துவக் கருத்துடையார். ஆணுக்குள் பெண்ணும் பெண்ணுக்குள் ஆணும் இருக்கும் உண்மையை அவர் வலியுறுத்துகிறார்.

“பெண்களுக்கு யோகம் முதலிய சாதனங்கள் அவசியம் கற்பிக்கப்படல் வேண்டும். மேலும், பேத மற்று, அபேதமாய்ப் படிப்பு முதலியவற்றையும் சொல்லிக் கொடுத்தல் வேண்டும். தத்துவம் முதலியவற்றின் சொரூப ரூபாதிகளைத் தெரிவித்துச் சாளமாக்கினால், பின் தடையின்றி நம்முடைய துரிய ஆசிரம காலத்தில் ஒத்திருப்பார்கள்” என்று உபதேசிக்கிறார். ஆண் பெண் சேர்ந்து வாழும் நியமங்களை அவர் தெளிவாக முறைவகுக்கிறார். வாழ்வாங்கு வாழும் இல்லற வாழ்வு முறையைத் தெள்ளத் தெளிந்த உரை நடையில் வள்ளலார் பளிங்கு போலக் காட்டி, ஆண் பெண் வாழ்வை அருட்சோதி வாழ்வாக்க முயன்றுள்ளார். வறட்டுச் சந்நியாசம் அவருக்குப் பிடித்தமன்று; ‘சந்நியாசம் கடுமனத்தருக்கே’ என்கிறார். அவர் கூறும் மொழிகளெல்லாம் அருள் பழுத்தொழுகி மாந்தர்மீது இரக்கங் கொண்டு உதவும் அறிவு மொழிகளே யன்றிப் பிறிதில்லை. தமக்கு இல்லறம் நடாத்த நேரமில்லை. ஆன்மாக்களின் மீது கருணைகொண்டு

அருட்பா பொழியவும், அருட்பணி புரியவுமே ஒவ்வொரு மூச்சையும் செலவிட்டதனல் வேறு சிந்தனைக்கு இடமில்லை. ஆனாலும் நம் வள்ளற் பெருமானும் ஒரு பெரிய குடும்பத்தை அடக்கி யாண்டே வந்தார்; அக்குடும்ப வரலாற்றைக் குடும்ப கோஷத்திற் காண்க!

---

## ௧௭. குடும்ப கோஷம்

ஆணவம், மாயை, காமியம் என்னும் அரக்கி களை மணந்து மடமை மனம் புத்தி சித்தம் அகங்கா ரம் முக்குணங்கள் என்னும் பொல்லா மக்களைப் பெற்று, குடிக்கூலி வீடான இவ்வுடலில் வாத பித்த கபங்களுடன் ஜீவன் படும் சம்சாரத் துயரங்களைக் "குடும்ப கோஷம்" மிகத் தெளிவா யெடுத்துரைக் கிறது :—

"பகலும் இரவும் பாவிகள் அலைத்தனர்; கிணறு வெட்டப் பூதந் தோன்றியதென்னும் சொல்லை யொத் தது. மூன்று மாதரும் முழுப்பாய்ச் சுருட்டிகள். குடும்பத்துடனே குடித்தனஞ் செய்யக் குடிக்கூலிக் குக் கொண்ட மனையில் கண்ட காட்சிகள் கன விநோதங்கள்; இராமாயணத்தும் பாரதத்து மில்லை; இழிவினும் இழிவது, எண்சாண் உள்ளது; மலமுஞ் சலமும் மாறா வொழுக்கது; சுற்றிலும் ஒன்பது பொத்தல் உடையது. இம்மனைத் தலைவராய் எழுந்த மூவர் தறுகண் கடையர்; தயவே யில்லார்; பிண்ட மென்னும் பெருங் குடிக்கூலி அன்றைக் கன்றே நின்று வாங்குவர்."

இக்குடும்ப வாழ்வில் வள்ளலாரின் சில தினசரிக் குறிப்புக்கள் காணப்படுகின்றன. வேதாந்தம், சித் தாந்தம், இதிகாச புராணங்கள், இலக்கியம், சமய நூல்கள், வாய்ப் போர், விவகாரங்கள், மத வழக்கு கள், வம்புகள், வீண் கதைகள் ஆகிய இவை அவ ரைச் சூழ்ந்து நிற்கும்; அவ்வவற்றிற்குச் சமயோசித

மாய்ச் சமாதானஞ் சொல்லி இயன்றமட்டில் ஈடு தருவார்; மீதி நேரம் தமது நித்திய கருமத்திற் செல வாகும். என்னை?

பின்னர் மனையின் பின்புறத் தேகிக்
கலக்கு மலத்தைக் கடிதே கழித்துக்
கல்லில் அழுக்கைக் கழற்றுதல் போன்று
பல்லின் அழுக்கைப் பஸ்பின் மாற்றிச்
சோமனைப் போலவெண் சோமனைத் துவைத்து
நன்னீ ராடி நறுமலர் கொய்து
தேவருக் கேற்ற திரவியங் கூட்டி
வெண்ணீ றதனை விளங்கப் பூசிப்
புகழ்ருத் ராக்கப் பூனை யென்ன
உற்ற சேபவடம் உருட்டி யுருட்டிக்
தாண்டகம் போன்று துறித்த யோகம்
செய்த பின்னர் சிறிது நேரம்
அருத்தியிற் பூசனை அமர்ந்தங் காற்றி
ஊன்பிண் டத்திற் குறுபிண்ட மீந்து
குடிக்கூ லிக்கடன் குறையறத் தீர்த்துப்
பகல்வே டத்திற் பலவை விரட்டி
நித்திரைப் பாத்தை நேர்ந்து கூடவும்
பொழுதுஞ் சரியாய்ப் போகின் றதுவே"

உட்குடும்பத்தை முற்றும் அடக்கி முறைப்படுத் தித் தம் ஞான மணவாளனிடம் ஒப்புவித்து, மனித சாதியையும் இருட் குடும்பத்தினின்று அருட் குடும் பத்திற்கு ஆளாக்கவே வள்ளலார் வாழ்வின் ஒவ் வொரு மூச்சும் வேள்வியாக்கப்பெற்றது. மேலும், தம்மையே ஞான நடத்தரசிற் குரிய காதற் கிழத்தி

யாகப் பாவித்து அவர் செய்த அன்பு, நம்மாழ்வார் அன்பைப் போன்றது.

அறியாத பருவத்தே யென்னைவலிந் தழைத்தே
ஆடல்செயுந் திருவடிக்கே பாடல்செயப் பணித்தார்.
செறியாத மனச்சிறியேன் செய்தபிழை யெல்லாந்
திருவிளையாட் டெனக்கொண்டே திருமாலை யணிந்தார்.
பிறியாமல் என்னுயிரிற் கலந்துகலந் தினிக்கும்
பெருந்தலைவர் நடராசர் எனைப்புணர்ந்தார்; அருளாம்
அறிவாளர் புறப்புணர்ச்சி யெனையழியா தோங்க
அருளியதின் டகப்புணர்ச்சி யளவுரைக்க லாமே.

என்று தம் மணவாளன் அனுபவத்தைக் கூறிச் சுத்த மனதென்னுந் தோழியுடன் இன்புறும் ஆனந் தான்மா உலகியற் குடும்பம் பற்றி வாழவும் விரும்புமோ!

---

## கஅ. மனப் பேய்களுக்குச் சவுக்கடி

மனத்தைப் பிடித்த ஆசையாணவப் பேய்களுக்கு வள்ளலார் சரியான சவுக்கடி கொடுக்கிறார். அவரது நெஞ்சறிவுறுத்தலையும், விண்ணப்பங்களையும், முறையீடுகளையும் ஊன்றிப் படித்தவர் மனம் இருளொழியும்; அருளை நோக்கும். மாந்தர்தம் பிழைகளைத் தமவாகப் பாவித்து வள்ளலார் சரியான சம்மட்டிப் பூசை கொடுக்கிறார். தமது திருவருட் பேற்றினல் உலகில் மனப்பேய் புரியும் அட்டூழியங்களைத் தாக்கியடிக்கிறார் :—

“ பன்முகஞ்சேர் மனமெனுமோர் பரியாசப் பயலே
பதையாதே சிதையாதே பார்க்குமிட மெல்லாம்
கோன்முகங்கோண் டடிக்கடி போய்க் குதியாதேயெனது
குறிப்பின்வழி நின்றிடுநின் குறிப்பு நடவாது,
என்முனமோர் புன்முனைமே லிருந்தபனித் துளிநீ
யிம்மெனுமுன் அடக்கிடுவேன் என்னையறி யாயோ
பின்முனென நினையேல்காண் சிற்சபையில் நடிக்கும்
பெரியதனித் தலைவனுக்குப் பெரியபிள்ளை யானே!

மயங்கு புத்தியென்னும் உலக வழக்காளிப் பயலே! மனதில் அடங்கு! இல்லையேல் உன்னை மடித்திடுவேன்; கலை யறியாச் சித்தமெனுங் கனமோசப் பயலே! கால்தலை நிலையறியாது அலையாதே! அசைவற உள்ளே நில்! அகங்கார மென்னும் பொல்லா வடவாதிப்பயலே! நின் செபம் பலியாது; மாயையெனும் படுதிருட்டுச் சிறுக்கியே! உன் மாயக்கூத்து

களை மூட்டைகட்டிச் சுமந்துகொண்டு காட்டுவழி ஓடு இல்லையேல் உன்னைப் பின்முன் பாராது மாய்த்திடுவேன்; கன்மமெனுங் கலகப் பயலே! நன்மை தீமை கலந்த விகற்பங் காட்டும் நின் நடத்தை செல்லாது; ஆணவ இருட்டறை காக்கும் குருட்டு முடப்பயலே! உன் சுற்றத்துடன் செல்! தூக்கமெனுங் கடைப் பயலே, உன் சுற்றமொடும் செல்! இருந்தால் தலை தப்பாது. பயமெனும் கொடும்பாவிப் பயலே, கடலில் விழுந்தொழி! கோபமெனும் புலைப்பயலே, காம வலைப்பயலே, மோகக் கடைப்பயலே, குறும்பு மதப் பயலே, மாற்சரியப் பயலே! இருந்தால் அழிவாய், உடனே செல்! "மரணமெனும் பெருந்திருட்டு மாபாவிப் பயலே, வையகமும் வானகமும் மற்றகமும் கடந்து பசையற நீ ஒழிந்திடுக!"

---

## ௩௪. பித்துலகீரே !

இவ்வாறு வள்ளலார் "ஏக்கந் தவிர்ந்தேன் ; ஆக்க மடைந்தேன் ; சிற்சபை யப்பனுக்குச் செல்வப் பிள்ளையானேன் !" என்று உலகின் இருட்பேய்களை ஓட்டி யடிப்பார் ஒருகால். மற்றொருகால்,

மழவுக்கும் ஒருபிடிசோ றளிப்பதன்றி
யிருபிடியூண் வழங்கி லிங்கே
உழவுக்கு முதல்குறையு மெனவளர்த்தங்
கவத்தையேலா மோகோ ! பேயின்
விழவுக்கும், புலா லுண்ணும் விருந்துக்கு
மருந்துக்கு மெலிந்து மாண்டார்
இழவுக்கு மிடர்க்கோடுங்கோ விறைவருக்குங்
கொடுத்திழப்ப ரென்னே யென்னே !

என்றவாறு இழிநடை பயிலும் உலகிற்கு ஏசுநாதர் போல எம்பெருமானும் சரியான சாட்டை கொடுத்துள்ளார்.

"பித்துலகீரே ! கட்டோடே, கனத்தோடே, பட்டோடே மணியோடே வாழ்கின்றோ மென்று செருக்குரைப்பீர் ; பசியோடு வந்தார் முகம் பாரீர் ; காமாந்தகாரத்திற் கண்மூடித் திரிகின்றீர் ; அற்ப மகிழ்ச்சி பெற்றீர் ; பின் படு தீமையில் முன் படுகின்றீர் ; துன்மார்க்க நடையிடைத் தூங்குகின்றீர் ; பண்ணாத தீமைகள் பண்ணுகின்றீர் ;

பொய்விளக்கப் புகுகின்றீர் போதுகழிக் கின்றீர்
புலைகொலைகள் புகுகின்றீர் கலகலவென் கின்றீர்
கைவிளக்குப் பிடித்தொருபாழ்ங் கிணற்றில்விழ கின்றீர்
கலியரெனக் கலிக்கின்றீர் கருத்திருந்துங் கருதீர்

ஐவிளக்கு மூப்புமர ணாதிகளை நினைத்தால்
    அடிவயிற்றை முறுக்காதோ கொடியமுயற் றுலகீர்
மெய்விளக்க எனதுதந்தை வருகின்ற தருணம்
    மேவியதீன் டடைவீரேல் ஆவிபெறு வீரே!

என்று உலகை இருளினின்று ஒளிக்கும், சாவினின்று அமர வாழ்விற்கும், பொய்யினின்று உண்மைக்கும் அழைக்கும் அழுத்தமான ஆணித்தரமான ஆர்வ மொழிகளன்றோ அருட்சோதியார் வாக்கில் விளையாடின! அவ்வாறே பெண்களைப் பற்றி அவர் பேசிய உரை யெல்லாம் காமத்தை அடியோடு அருவருத்து ஒழிக்கவே யன்றோ? பெண்மையின் தெய்வத் தன்மை அறியாது கேவலம் புலன் விழைவையே நாடுந் தொழில் அருட்பா படிப்பவர் அடிச் சுவட்டையும் அஞ்சியோடும். இருளையோட்டி, அருள்வழி சேரவே வள்ளலார் உலகை அழைத்தார்.

---

## ௨0. தில்லையப்பா !

சவலைப் பருவத்திலேயே தம் உள்ளத்தை யீர்த்து "நீ என் மைந்தன்" என்று அறிவுறுத்திய தில்லை யப்பனின் உள்ளழைப்பு வந்தது. தமது 24-ஆம் ஆண்டில் அடிகள் பொன்னம்பலத்தைக் காணப் புறப்பட்டார். நோயுற்றிருந்த தம் இளைய சகோ தரர் பரசுராம பிள்ளையையும் சிதம்பர தரிசனம் செய் விக்க உடனழைத்துச் சென்றார். மதுரை சிதம்பர சுவாமிகள், வீராசாமி நாயகர், சுந்தரம் பிள்ளை முத லிய அன்பரும் அடிகளுடன் சென்றனர். வள்ளலார் புலவர் வாழும் புதுவையில், தருமலிங்க செட்டியார் போன்ற சித்தாந்தச் செல்வர்கட்குச் சில ஐயங்களைத் தீர்த்துப் பிறகு தில்லை சேர்ந்தார்.

அப்பனைக் கண்டார் அருட் பிள்ளை; செப்பருங் காதலால் விம்மினார்; வேசற்றார்: எல்லையில்லாத் தில்லைக் கூத்தன் உள்ள மன்றில் நடமிடக் கண்டார். இடையறாது அன்பினெழுந்த அருண் மலர்மாலை யைத் தமது திருவாக்கால் தொடுத்துத் தொடுத்து அருட்பெருஞ் சோதி யப்பனுக்கு உள்ளங்குளிரச் சூட்டினார். "பொன்னின் மாமணிப் பொது நடம் புரிகின்ற புண்ணியா! பத்தர் மனம் தேன் வாழை யெனத் தித்திக்கும் இன்பனே! உன்னடி பிடித்தேன்; இனி விடமாட்டேன்; உன்னைப் பிரிந்து துன்பப்பட மாட்டேன்; கண்ணனையோய்! கரும்பின் இனிய கருணையமுதே! துரும்பின் மிகச் சிறியேனின் பெரிய பிழை பொறுத்தருளிய அன்பை யென்சொல் கேன்! என் மனங் குடிகொண்ட குருவே! அன்னே, அப்பா, ஐயா, அரசே, அன்பே, அறிவே, அமுதே,

அழியாப் பொன்னே, மணியே, பொருளே, அருளே, கருணை நிதியே, அருளுடைகனே, அடியார் இதயாம் புயனே, சுடர் மாமணியே, சுகநாயகனே அபயம்! அபயம்! இனிச் சிறு பொழுதும் தாழ்த்திடல் வேண்டா—தாங்க மாட்டேன்! அநித்திய உலகினைப் பார்க்கவு மாட்டேன்! உனை யன்றி வேறு பேறு வேண்டேன்! என் அருட்பெருஞ் சோதி யப்பனே! உனை யன்றி உன்னேன் உணரேன் உரையேன்! கனியிற் சுவைபோல் என் மனத்தில் இனிக்கும் இனிப்பே! உன் பொன்னடிக்காட்பட்டேன். உனது ஜோதி கண்டல்லால் அருந்தவு மாட்டேன். காசு, பணம், கன்னியராசை, காணியாட்சியைக் கருதிலேன்! உனது திருவருள் நேசமே விரும்பினேன். என் உடலுயிர் நினது அடைக்கலம்; இனி நிகழ்வதெல்லாம் நின் செயல், என் செயலன்று. அகத்தோனே, புறத்தோனே, அணுவோனே, மகத்தானே, சகத்தானே, இகத்தானே, பரத்தானே, எம்மானே, மருந்தானே, விருந்தானே, சுத்த சிவசன்மார்க்கந் துலங்க என்னை யீன்றோனே, சரணம்! சரணம்! அருளரசே, அருட் குருவே, அருட் பெருஞ் சோதியே, தில்லையப்பா, சரணம்! சரணம்!

அணிவளர் திருச்சிற் றம்பலத் தாடும்
ஆனந்த போகமே, அமுதே,
மணிவள ரொளியே ஒளியினுள் ஒளியே
மன்னுமென் ஆருயிர்த் துணையே
துணிவுறு சித்தாந் தப்பெரும் பொருளே,
தூயவே தாந்தத்தின் பயனே,
பணிவுறு முளத்தே யினித்திட வெனக்கே
பழுத்தபே ரானந்தப் பழமே!

அன்பிலே பழுத்த தனிப்பழ மென்கோ !
அறிவிலே அறிவறி வென்கோ !
இன்பிலே நிறைந்த சிவபத மென்கோ !
என்னுயிர்த் துணைப்பதி யென்கோ
வன்பிலா மனத்தே வயங்கொளி யென்கோ
மன்னுமம் பலத்தா ரென்கோ !
என்புரி யழியாப் பொன்புரி யாக்கி
யென்னையாண் டருளிய நினையே.

அருட்பெருஞ் சோதி அமுதமே அமுதம்
அளித்தெனை வளர்த்திட அருளாந்
தெருட்பெருந் தாய்தன் கையிலே கொடுத்த
தெய்வமே சத்திய சிவமே
இருட்பெரு நிலத்தைக் கடத்தியென் றனைமேல்
எற்றிய இன்பமே யெல்லாப்
பொருட்பெரு நெறியுங் காட்டிய குருவே
பொதுநடம் புரிகின்ற பொருளே !

---

## சக. சுந்தர சுவாமிகள்

இவ்வாறு வள்ளலார் கரையற்ற அருட்கடல் மடைதிறந்தது போலத் தமது உள்ளக் காதல் மடை திறந்து, அருட்பா வெள்ளம் பாய்ச்சித் தில்லையில் வடக்குச் சித்திர வீதியில் அமர்ந்திருந்தார். இவர் பெருமையறிந்த சுந்தர சுவாமிகள் என்பார் ஒருநாள் இவரைக் காணவந்தார். வள்ளற் பெருமானின் மாசறு காட்சியும் தேசுறு வடிவும், பேசரும் புலமையும், பேரருள் வாக்கும், அளவறு மன்பும், தெளிவுறு மொழியும், ஒளியுறு கண்ணும், களியுறு சிந்தையும், பழகப் பழகப் பாலினுந் தேனினும் பழத்தினுங் கண்டினும் உளத் தன்பினிக்கும் இனிய தூய வுறவும் சுந்தர சுவாமிகளைக் கவர்ந்தன. அன்பும், வணக்கமும் மிக்கு வள்ளலாருடன் சுவாமிகள் மன்றுளானைச் சென்று வணங்குவார். எஞ்சிய நேரமெல்லாம் ஞான விசாரத்திலேயே கழிப்பார். வள்ளலார் முன்னிலையில் ஒரு காந்த சக்தி உலாவுவதைக் கண்டு அன்னார் எதிரிருந்து பேசாது, பக்கத்தில் ஒதுங்கி யமர்ந்து பேசி வந்தார். அதைப்பற்றி அன்பர்கள் வினவவே, "எதிரிருந்து பேசுவோர் ஆற்றலை யிழுத்துக் கொள்ளும் ஆற்றலுடையார் அவர்" என்று உரைத்தார். தவமும், தூய்மையும், அருளும் ஆத்மானுபவமும் நிறைந்து சிற்சக்திக் காந்தமாக விளங்கும் பெரியோர் மின்சார மலை போன்றவர்கள். பெரிய காந்தம் சிறிய காந்தத்தை யிழுப்பதுபோல் அவர்களுடைய சத்திக்கதிர்முன் சிறு திறலாளர் நிற்கமுடியாது.

வள்ளலாரின் வாக்கமுதைப் பருகிய சுந்தர சுவாமிகள் இது ஒரு திருவருள் வடிவு, எம்மை யாட்

கொள்ள எழுந்தருளியுள்ளதெனப் போற்றினர். அன்பும் அருளும் நட்டால் இன்பப் பெருக்கிற்கு எல்லையுண்டோ! சுந்தர சுவாமிகள் இப்படி அன்புருகிச் சென்றபின், வள்ளலார் கண்ணீருகுத்து நின்றார். சீடர் என்னென வினவினர். "இப்போது அளவளாவிய சுவாமிகள் இன்னும் ஆறு மாதத்தில் மறைந்துவிடுவார்" என்றார். அவ்வாறே நடந்தது. முக்காலமுணரும் அறிவும் நம் பெருமானுக்கு அமைந்திருந்ததென்பதற்கு இது ஒரு சான்று.

---

## ௪௨. தலயாத்திரை

அன்பர் கண்ணையுங் கருத்தையும் கண்ணிபோற் பிடிக்கும் தில்லையப்பன் திருவடி தொழுது சில காலம் வள்ளலார் தல யாத்திரை செய்து ஆங்காங்குத் தம் அருட்பா மலர்களாற் கடவுட் டந்தையை வணங்கிச் சென்றார். இந்த யாத்திரையின்கண் நிகழ்ந்த வியத்தகுசெயல்கள் பல. இந்த அருள் வடிவையும், அன்பருவி போன்ற வாக்கையும் கண்ணாலும், காதாலும் பருகிய அன்பர் கொண்ட பெருங் களிப்பிற் களவில்லை. வள்ளலார் சீகாழியில் ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார்; ஒருவருக்கிருந்த தீராக் குன்மநோயைத் திருநீறீந்து தீர்த்தார். வைத் தீசுவரன் கோயிலில் மிகவும் அரிய பதிக மொன் றருளினார். திருவாரூர், திருச்செங்காட்டங்குடி, திருப்புகலூர் முதலிய பெரும்பதிகளைத் தரிசித்துத் திருவூறல் உற்சவத்திற்கு எழுந்தருளினார்.

---

## ௬௬. உருவா, அருவா?

அக்காலம் வள்ளலார் திருப்பாதிரிப்புலியூர் பிரம்மசமாஜிகளுக்கு உருவழிபாட்டின் அவசியத்தைப்பற்றி விளக்கினர். பிரம்ம சமாஜிகள் உரு வழி பாட்டை எதிர்த்து விரிவுரை நிகழ்த்தி வந்தனர். அடிகள் உருவணக்கத்தின் தகுதியை வலியுறுத்தி ஒரு சீட்டனுப்பினர். சமாஜத்தார் மறுப்பெழுதினர். அன்பர் வேண்டுகோட்படி வள்ளலார் அவர்கள் வாதத்திற்கு ஏற்ற மறுப்பைக் கூறி ஆண்டவனின் அருள் வடிவையும் உரு வழிபாட்டின் அவசியத்தையும் பற்றித் தெளிவாக விளக்கினர்.

"அருவான பிரம்மத்தை அறிவோர் அறிக; உருவாக அன்பு செய்வோர் அன்பு செய்க. நிரஞ்சன நிராகாரப் பிரமத்தை உருவில் வழிபடாது நினைத்தல் வேண்டுமென்கிறீர்கள். அத்தகைய சுத்த பிரம்மம் உரைமனத்திற்கு எட்டாத பூரணம். மனோலயமான பின்பே பிரம்மானுபவமெய்தும். மனம் சிறிது கிளம்பினும் ஆத்ம ஞானம் விளங்காது. மனம் அசத்து, சடம், அநித்யம், மாயா காரியம். பிரம்மம் சத்து, அறிவு, நித்தியம், இன்பம், சுத்தம், மாயாதீதம். பிரம்மத்தை ஆத்ம ஞானத்தாலே அறியலாம். பிரம்மம் விக்ரக ஆராதனையால் எய்தும். விக்ரகம் என்பது விசேஷ இடம்; ஆன்மா அமரும் வீடு. பக்தியோடு உபாசித்தால் பலனெய்தும். உரு வழிபாட்டால் பலர் அறிவும் அருளும் திறனும் பெற்றிருக்கின்றனர்." என்று தர்க்க இலக்கணப்படி சுவாமிகள் தெளிந்துரைக்கவே உரு வழிபாட்டின் எதிரிகள் விதண்டா வாதம் பலியாது தோற்றனர்.

---

## சச. நடராஜமூர்த்தம்

ஆன்ம ஞானம் புலர்ந்து ஆன்ம வுணர்வே வழி பாடாகும் உயர்ந்த அரு வணக்கத்திற்கு உரு வழி பாடு உறுதுணை யாகுமென்றே ஆன்றோர், அறிஞ ரெல்லாம் இந்த உருவழிபாட்டைக் கைக்கொண்ட னர். எல்லாம் அவனுரு; அணுவணுவிலும் அவனு ளான்; அணுவணுவும் அவன் வடிவே. உலக வடி வாக அவனுளான். உலகையே அருட்பணி மலரால் வணங்குதல் அவனை வணங்குதலாகும். எங்கெங்குப் பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய் அங்கங் கிருக்கும் அவனை ஆருயிர் வடிவாக அன்பு மலரால் வழிபடலாம். மூர்த்தி தலம் தீர்த்தமும் அவன் வடிவே யாதலின் அவற்றிலும் அவனைக் கண்டு அன்பு செய்யலாம். இவை யெல்லாம் ஓடியலையும் மனத்தை ஒன்றில் நிலைநிறுத்தும். மனம் நிலைத்துச் சிந்தை யொழிந்து அகந்தை யழிந்து அருளுநித்தால், உணர்வெனும் மலரால் உள்ளத்தானை இடைவிடாது என்றும் வழிபட்டு, கோயில், மூர்த்தி, மலர், மஞ்சன நீர், வழிபடும் கை எல்லாம் உள்ளாகி நிற்கலாம். சில மதங்கள் உருவை வெறுப்பன எனினும் அவை யும் ஒரு குறியைத் தொழுவனவே; பெரும்பாலும் மதங்கள் கதிர், பிறை, தீ, வளி, வெளி முதலிய எதேனும் ஒரு வடிவில் உரு வணக்கமே செய்கின் றன. அருவணக்கம் அரிது, பெரிது; உருவணக்கம் எளிது; உண்மை யன்பிற்கேற்ற பயனளிக்கத் தக் கது. சைவ சமயம் உரு, அரு, உருவரு, அருவுரு வாக இன்பக் கடவுளை வழிபட்டு எல்லாச் சமயங் களையும் தன்னுளடக்கி நிற்கிறது.

உருக்களிற் சிறந்தது நடராஜமூர்த்தி. அதில் எல்லாம் அடங்கியுள்ளன. இதை வழிபடுவோருக்கு அங்குச் சிற்கனல் உண்டு; வெளி வணக்கஞ் செய்வோர்க்கு தகராகாயமுள்ளது; ஒலி வணக்கம் செய்வோர்க்கு (அதாவது சிக்கியர் போன்று தமது சமய நூலைப்பணிவோர்க்கு) டமரக நாதமுள்ளது. தண்மை வடிவாகப் பணிவோர்க்கு கங்கை யுள்ளது. நடராஜ மூர்த்தத்தில் எல்லா வழிபாடும் அடங்கும். சிற்பர யோமத்தில் அருவா யுணர்ந்து கலக்கும் உயர்ந்த சிவாத்துவிதானுபவமும் எய்தும்; அதனல் உள்ள மன்றத்தில் நடமிடும் சோதி நடராஜனையும் காணலாம். தனக்கு அருமையான பொருள் யாவும் அவன்; காண்பது கேட்பது யாவும் அவன்; உள்ளும் புறமும் அவன் என்றுணரும் உயர்ந்த நிலையை நம் வள்ளற் பெருமான் அடைந்தார்.

---

## ௪௫. சித்த சிகாமணி

அருட்சோதி நடராஜன் சித்தசிகாமணி; அவனையே வள்ளலார் உள்ளக் கோயிலில் வைத்து வணங்கினர்:—

அகவடிவை ஒருகணத்தே அனக வடிவாக்கி,
அருளமுதம் உவந்தளித்தே அடிக்கடியென் உளத்தே
முகவடிவந் தனைக்காட்டிக் களித்துவியந் திடவே
முடிபனைத்தும் உணர்த்தியொரு முன்னிலையில் லாதே
சகவடிவிற் றனுகி நானுகி நானுந்
தானுமொரு வடிவாகித் தனித்தோங்கப் புரிந்தே
சுகவடிவந் தனையளித்த துரையேயென் உளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே.

"பதி, பரன், பரம்பரன், ஞானநிதி, ஆரணம், ஆகமம் ஆகிய அரும்பொருள், அறிவு, அனுபவம், காரணம், காரியம், காரண காரியங் கடந்த பெரும் பதி, அன்பர் உள்ளத்தமர்ந்த செல்வம், புத்தமுது, சத்தியம், இணையற்ற சிவன், அணையற்ற கடல், அறிவுக்கனல், துயர்க்கடல் கடக்கும் புணை நீயே! அம்மே, அப்பா, அரசே, சாகாக் கலையளித்த தயாநிதியே! உள்ளபடி யென்னறிவிலுள்ள பெருஞ்சுகமே, ஆதியந்தந் தோற்முத அரும்பெரும் சோதியே, அச்சந் தவிர்த்து இச்சையெலாம் அளித்த அருளே, அன்பறிவே, அருட்பொருளே, அமுதே, ஆங்கார மற்றவரை நீங்காத கனிவே!" என்று தம் அருளப்பனையெண்ணி உருகிய வள்ளலார் செய்த வழிபாட்டு நியமமென்ன? பாடிப், படித்து, பணிந்து, கேட்டு, அன்புமாலையணிந்து, மனமுருகக் கண்ணீர் சொரிந்து, அழுது தொழுது: ஆங்காரந் தணிந்து, அருள் பெருகும்

நிலே ஒருபாலிருக்க, மனதடக்கி மோனத்தில் சகஜ நிஷ்டையிலும் அவனை விடாது கலந்திருந்தார்.

படிப்படக்கிக் கேள்வியெல்லாம் பற்றறவிட் டடக்கிப்
பார்த்திடலு மடக்கியுறும் பரிசமெலா மடக்கித்
தடிப்புறுமுன் சுவையடக்கிக் கந்தமெலா மடக்கிச்
சாதிமதஞ் சமயமெனும் சழக்கையும்விட் டடக்கி,
மடிப்படக்கி நின்றலும் நில்லேனு னெனவே
வனக்துரங்கு வியப்பவென்றன் மனக்துரங்கு குதித்த
துடிப்படக்கி ஆட்கொண்ட துரையேயென் உளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே!

இதுவே உயர்ந்த வழிபாடு. அவனுக்கு முழுதும் அடைக்கலமாகி, இதயமன்றுள் நானற அவனுட் கலந்து அவன் நம்மை ஆண்டுகொள்ள விருப்பதே இன்பம். இதயமன்றுள் அவனைக் கண்டோர் எங்கும், எவற்றிலும் அவனைக் காண்பர். கல்லிலும் செம்பிலும் கண்ணுதலைக் காண்பர். இவ்வித அபர பக்தி (உரு வணக்கம்) பர பக்திக்கு வழிகாட்டும் உண்மையை நம் வள்ளற் பெருமான் வாழ்வினின்றே அறிகிறோம்.

## ௪௬. கருங்குழி

பல தலங்கள் சுற்றி அறிவு மழை பொழிந்து, வள்ளற் பெருமான் தில்லையப்பனைச் சார்ந்தார். அப்போது இவரது பிறப்பிடமான மருதூர், தன்னிடம் உதித்த அருள் மாணிக்கத்தை யழைத்து உபசரித்தது. அன்பின் வள்ளல் மருதூருக் கடுத்த கருங்குழி சேர்ந்தார். அங்குப் பரசுராம பிள்ளை சிவபத மடைந்தார். அவருக்கு இறுதிக் கடன்கள் இசைபெற முடித்துச் செல்லவிருக்கும்போது அவ்வூர்ச் செல்வர் வேங்கட ரெட்டியார் அடிகளின் அருணெறியில் ஈடுபட்டுத் தமது திருமனையிலேயே தங்கும்படி அன்புடன் வேண்டிக் கொண்டார். அப்படியே வள்ளலார் திருவுளம் பூத்தருளினர். வள்ளலார் தமது வாழ்வின் இருப்பிடமாகக் கொண்ட கருங்குழிக் குற்றது தமது 28-ஆம் ஆண்டில். அருட்சோதியப்பன் தன் மைந்தனை எப்பணிக்காக உலகிற்கு வரவழைத்தானோ அப்பணி தொடங்கும் காலம் வந்துவிட்டது. அவன் அவ்வருட் பணிக் களத்திற்கே மைந்தனைக்கொணர்ந்து விட்டான். கருங்குழியில் வள்ளற் பெருமான் நிகழ்த்திய அற்புதங்கள் பல. அதனுடன் சுற்றுமுள்ள ஊர்களிலும் அவ்வப்போது நிகழ்த்திய வியத்தகு செயல்களை ஒருங்கே கூறுவாம்.

---

## சஎ. சித்தாடல்

ஓரிரவு, ஒரு சிறு விளக்கேற்றி வைத்துவிட்டுக் கருங்குழி ரெட்டியார் வீட்டின ரெல்லாம் வேறூர் சென்றிருந்தனர். விளக்குச் சிறிது எரிந்து எண்ணெ யின்றி அமரும்போது வள்ளலார் அருகே ஒருபானை யிலிருந்த தண்ணீரை எடுத்து ஊற்றினர். தமது அருட் சுடர்க் கரத்தால் ஊற்றிய தண்ணீரை உண்டு விளக் கும் இரவு முழுதும் எரிந்தது. பெருமானர் தம்மை மறந்து அருட்பாக்கள் எழுதிக்கொண் டிருந்தார். விடிந்ததும் வீட்டன்னை வந்து விளக்கைப் பார்த்தாள். நீர் நிறைந்திருந்தது; ஆனல் விளக்கோ நெய்வார்த்தது போல எரிந்துகொண்டிருந்தது. இவர் அதிசய சித்த ரென்று அன்றுமுதல் அனைவரும் வணங்குவாராயினர்.

மற்றொருகால் பானு ரெட்டி யென்பாரின் தொழு நோயைத் திருநீறளித்துத் தீர்த்தருளினர். அவ் வாறே முத்துநாராயண ரெட்டியெனுஞ் செல்வருக் குக் கண் மறைவினைப் போக்கினர்; ரெட்டியார் தமது செல்வ முழுதையும் எம்பெருமானையே யேற் றுக்கொள்ள வேண்டினர். ஓடும் பொன்னும் ஒக்க நோக்கும் வள்ளலார் இளமையிலேயே காசு பணத் தைக் கூரையிலும் பாழுங் கிணறுகளிலும் எறிந்து வந்த நிராசைப் பெருமானன்றோ! பரமஹம்ஸர், துவா ரகநாதர் தந்த செல்வத்தை மறுத்தது போலவே மறுத்து, 'வேண்டுமானல் சீனிவாசப் பெருமாள் கோயிலுக்கு எழுதிவையுங்கள்!' என்றார். அவ்வாறே ரெட்டியார் செய்தார்.

பின்னொரு நாள் இயல்வனப்பை நுகர அன்பருடன் உலாவும்போது பெருமழை பொழிந்து அனைவர் ஆடையும் நனைந்தது; ஆனால், வள்ளலார் ஆடை மட்டும் நனையவில்லையாம்.

ஒருநாள் அன்பர் வேண்டுகோட் கிணங்கிக் கூடலூர் சென்று அருணெறியைப் பற்றி உபதேசித்தார். அவ்வூரில் தேவநாயகம் பிள்ளை என்பார் வள்ளலாரைத் தம் வீட்டிற்கு அழைத்தார். வள்ளலார் "இது தானோ உன் தகப்பன் வியோக ஸ்தானம்?" என்று கையிலிருந்த பிரம்பால் தட்டிக் கேட்டார். தேவநாயகம் திடுக்கிட்டார். "ஆ! நம் தந்தை இப்படித் 'தலையில் முக்காடிட்ட ஒருவர் பிரம்பினால் தட்டிக் கேட்பார். அவரே உன் குரு' என்று சொல்லிச் சென்றாரே! அடையாளங்கள் மிகப் பொருத்தமாயிருக்கின்றனவே!" என்று தாள் பணிந்து வள்ளற் பெருமானைத் தம் குருவாக ஏற்றுக்கொண்டார்.

இவ்வன்பர் இரசவாதத்திற் பெரும் பொருள் இழந்திருந்ததை ஐயா அறிந்து, அக்கணமே ஓர் இரும்பைச் சோக்கத் தங்கமாக மாற்றிக் காட்டி "அன்பனே, இது இச்சையற்றவனுக்கே இயலும். நீ இவ் வித்தையில் மயங்காதே!" என்று அதை மறைத்துவிட்டார்.

மற்றொருமுறை செஞ்சிமலைமீ திருக்கையில் தேவநாயகம் பிள்ளை பசியினால் தவிக்கவே, திடீரென்று, ஒரு செம்பு நீரும் இலட்டுவும் வரவழைத்தீந்து பசி தீர்த்தார்.

ஒருநாள் வள்ளலார் ஒரு வாழைத் தோட்டத்தூடு சென்றார். ஒரு கொடிய பாம்பு தலையில் தீண்

டிற்று. அன்பர் பதறிப் பாம்பைக் கொல்ல முயன்றனர். அருணெறிப் பெருமானே, "உயிரைக் கொல்லற்க! அதன் நஞ்சு நம்மை நலிக்காது; அதையே நலிக்கும்" எனவே பாம்பு சிறிது நேரத்திற் கெல்லாம் இறந்து விழுந்தது.

கூடலூரில் அடிகள் நிகழ்த்திவந்த அருட்பொழிவுகளுக்கு மஞ்சக்குப்பத்தினின்று இராதாகிருஷ்ண பிள்ளை என்னும் அன்பர் சிரத்தையுடன் வந்து இரவிலேயே ஊருக்குத் திரும்புவார். வழியில் அச்சம் ஏற்படின் உடனே ஒரு மனிதன் தீவட்டி யேந்தி ஒளி காட்டி அச்சந்தவிர்த்து மறைவதை அவர் நாடோறும் கண்டார்; ஆனல் ஆளைக் காணமுடிவதில்லை. வள்ளலாரிடம் இதைக் குறித்துச் சொன்னபோது, எல்லாம் திருவருட் செயலே என்று கூறினர். இருளில் தனி வழிச் செல்லும் அன்பர்க்கு அருளொளி காட்டி அச்சந் தீர்க்கும் கருணை வள்ளலன்றோ அருட் பிரகாசருட் புகுந்துள்ளார்! இச்சமயந்தான் முன்னே நாம் சொன்ன பிரம்ம சமாஜிகளுடன் உருவழிபாட்டு வாதம் நிகழ்ந்தது.

ஒருநாள் அப்பாசாமி ரெட்டியார் வீட்டில் நிஷ்டையிலிருக்கையில் ஒரு சித்தர் வந்தார்; அனைவரும் யாரென்று தொடரவே உடனே மறைந்துவிட்டார். வள்ளலார் "இவர் சித்தர்; காண வந்தார்; இதோ அவர் கொடுத்த இலட்டு" என்று காட்டி இந்நேரம் காசியில் இருப்பார் என்று சொன்னர்.

உண்ணக்கு வளர்ந்து துன்புற்ற ஓரன்பருக்கு ஒருநாள் திருநீறீந்து நோய் தீர்த்தார். மற்றொரு நாள்

ஒரு வாழைக்கனி தந்து வைத்துக் கட்டச் சொல்லி ஒரன்பருக்குக் கண்ணோய் தீர்த்தார்.

வேட்டவலம் ஜமீன்தார் மனைவியார் இருவர்; ஒருவருக்கு பிரம்மராக்ஷசு; மற்றொருவருக்கு மகோ தரம். ஜமீன்தார் கணக்கற்ற பணம் செலவழித்துக் குறி, கோடாங்கி, மந்திரம், தந்திரம், மணி, மருந்து— எல்லாம் பார்த்தார். போலிச் சிறுதெய்வங்களுக்கு, அந்தோ பாவம்! ஆடு கோழிகளைப் பலி யிட்டுப் பொங்கலிட்டார். இவ்வாயில்லா உயிர்களின் முறையீடு களினாலோ, ஜமீன்தார் செய்த முன் வினைப்பயனாலோ, முடிவில் அவர் அழைப்பிற் கிணங்கி அருட்பெரு மான் அவர் மாளிகைக்கு வர இசைந்தார். ஜமீன்தார், மகான் வரவை நோக்கி நகர் அலங்கரித்து, மனையலங் கரித்து வள்ளலாருக்காக இரண்டு அலங்கார நாற் காலிகள் போட்டிருந்தார்; தம் மனத்தில் நினைத்த நாற்காலியில் அமர்ந்தால் வள்ளலார் பெரியாரே யென் றெண்ணி யிருந்தார். வந்தார் எம்பெருமான். அரண் மனை வாயிலில் அடி வைத்தவுடனே, மாளிகையி லிருந்து பிரம்மராக்ஷசுகொண்ட மனைவி அலறி யடித்து 'போகிறேன், போகிறேன்' என்று திரு நீறு வாங்கி யணிந்து வணங்கினாள். பிரம்மராக்ஷசு மாயமாயப் போயிற்று. பிறகு அரண்மனைக்குட் சென்று ஜமீன்தார் நினைத்த நாற்காலியிலேயே அமர்ந் தார். மற்றோர் மனைவியின் மகோதரத்தையும் திரு நீறீந்து மூன்று வேளையில் தீர்த்தார்! இவ்வியத்தகு செயல்களைக் கண்டு ஜமீன்தார் அருட்பெருமானைச் சரண் புகுந்து அடியாராகி, அருள்வழி நின்று, ஐயா வின் உபதேசப்படி சிறு தெய்வங்களுக்கு உயிர்ப் பலியிடும் பெருங்கொலைப் பாதகத்தை அறவே நிறுத்தி

னார். தேள் பாம்பு முதலிய விஷ ஜந்துக்களைக்கூடக் கொல்லாது ஊருக்கப்பால் எடுத்துவிடும்படி உத்தர விட்டார்.

அங்கிருந்து ஐயா அவர்கள் தொழூவூர் வேலாயுத முதலியார் முதலிய சீடருடன் விருத்தாசலம் சென்று அத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவனுக்குத் தமது அருட்பாமாலையைச் சூட்டினார்.

பொற்சபைச் சித்தனின் அருட் கனியான நம் வள்ளலார் தமது சித்தியால் ஈயம் இரும்பு செம்பு முதலியவற்றை உயர்ந்த பொன் வெள்ளியாகச் செய்து காட்டி உடனே அவற்றைக் குளங்களிலும் கிணறுகளிலும் எறிந்துவிடுவார். வேம்பையர் என்ற ஒருவர் ஒருநாள் நம் சித்தர்சிங்கத்தின் இரசவாத அற்புதங்களைக் கண்டு தாமும் அவ்வாறே பொன்னாசை யால் செய்யத் துணிந்து அதற்கேற்ற பொருள்களை நுட்பமாக அறிந்து சேர்த்துத் தனியிடத்தில் தொடங் கவே, இரு கண்களும் பொட்டையாகிக் கெட்டன. பலவகையாக வைத்தியம் செய்தும் பயனில்லை ; முடி வில் தம் பிழைக்கு வருந்தி அடிகள் காலில் விழுந் தார். வள்ளற் பெருமானும் தண்ணீர் கொண்டு அவர் கண்களைத் திறந்தார் !

ஒருகால், நெடுநாளாகப் பிள்ளைப்பேறின்றி வருந்திய சிவராமையர் என்பாருக்கு ஆண்மகவு பிறக்க அருளினார் ; ஐயரும் பெருமானின் அற்புதங் களை வியந்து உத்தரவுப்படி கோட்டைப் புலவனூரில் ஒரு சத்திரம் கட்டுவித்தார்.

வடலூரில் ஐயா பிரசங்கம் நடக்கையில், ஒரு நாள், நான்கு சாம வேத சாஸ்திரிகள் சாம வேதத்தில்

கேள்வி கேட்கவேண்டுமென் றெண்ணி வந்தனர். அவர்கள் கருத்தை முன்பே யறிந்த நம்பெருமான் அவர் வருந் தருணம் சாம வேதத்தைப் பற்றிச் சரமாரி யாகப் பொழிந்து அவர்கள் கேட்க நினைத்திருந்த கேள்விகட் கெல்லாம் விடையிறுத்துக் கொண்டிருந் தார். இத் திருவருட் செல்வரின் பேரறிவுத் திறனைக் கண்ட சாஸ்திரிகளும் வாழ்த்தி வணங்கிச் சென்றனர்.

பிறகு ஓரடியார் மனைவியின் சங்கை தோஷத்தைத் திருநீறீந்து தீர்த்தார். இரசவாதப் பித்துக்கொண்ட அவ்வடியாரை, நீரும் மணலும் கலந்த ஒரு குவளை தண்ணீர் தரச் சொல்லிக் கையால் அதை மூடி யெடுக் கவே மணலெல்லாம் பொன்னுயிருந்தது.

மற்றொருகால் திரு ஆதிரைத் தரிசனத்திற்காகத தில்லை செல்லும்போது ஒரு குன்ம நோயாளரை அக் கணமே குணப்படுத்தினர்.

மழை வறண்டு வடலூரைச்சுற்றியுள்ள குடிகள் வருந்தவே, தமது திருவருள் வல்லபத்தால் நான்கு செவி மழை பொழிவித்தார்.

புதுப்பேட்டையில் இரண்டு உவர்நீர்க் கிணறு களை நன்னீர்க் கிணறுகளாக்கி யருளினர். இன்றும் அவை பால்போன்ற நீரளிக்கின்றன.

அவ்வூரில் ஒரு வீடு பற்றிக் கொழுந்து விட்டெரி யும்போது தம் ஆடையால் வீசி யணைத்து அனைவரை யும் காத்தருளினர்.

ஓரிரவு, கச்சேரி சிரஸ்ததார் இராமச்சந்திரமுதலி யாருடன் மாட்டுவண்டியில் மஞ்சக்குப்பம் சென்று

கொண்டிருந்தபோது, கள்வர் மறித்து முதலியாரின் வைர மோதிரத்தைத் தர அதட்டினர். ஐயா "அவசரமோ?" என்றார். கள்வர் ஐயாவையும் அடிக்கத் தடியோங்கினர் ஆ! ஓங்கிய கைகள் அப்படியே நின்றுவிட்டன! கண்களும் மூடுண்டன! உடனே கள்வர் தங்கள் அறியாமைக்கு வருந்தி விழுந்து வணங்கி இரக்கங் கேட்கவே, 'பிச்' என்றார் ஐயர். அவர்கள் மீண்டும் கண் பெற்றுக் கை பெற்றுச் சென்றனர்.

குறிஞ்சிப்பாடி அன்பர் ஒருவர் காலை ஒரு புதர் முன் உட்காரவேபுற்றரவொன்று தீண்டியது. உடனே 'இராமலிங்கம்மேலாணை' என்றார். அரவு வாயைத் திறந்தவாறே அசைவற்றது. அதன் கடியும் அவரை எதுவும் செய்யவில்லை. ஐயா அதனைத் தம் ஞான விழியால் அறிந்து, ஓர் உயிர் பட்டினி கிடக்கிறதே என்று இரங்கி, அவ்வாணையை விடுதலை செய்ய அன்பரைப் பணிக்கவே, அவர் அங்ஙனம் செய்யப் பாம்பு புற்றினுட் சென்றது.

ஒருநாள் வள்ளலார் வடலூரில் தருமசாலையில் அன்பர்களுடன் இருந்தவாறே, கூடலூரில் தம் அன்பர் தேவநாயகம் பிள்ளையின் புதல்வரான ஐயாசாமி பிள்ளைக்கு இருந்த ஒரு தீராப் பெருநோயைத் தாமே தோன்றித் தீர்த்தார்.

ஒருநாள் ஆறுமுக முதலியார் என்பார் ஒரு குளிகை பெறவிரும்பினர். இஃதறிந்த வள்ளலார் அவர் கரத்தில் இரு சிறு குளிகை வைத்தலும், தாங்க முடியாது கீழே விட்டுவிட்டார். "குளிகை தாங்க

வலிமை போதாது உமக்கு. உண்மைநெறி அறியும்!" என்று உரைத்தருளினார்.

மற்றொரு நாள் குருக்களொருவர் குளிகைவேண்டவே இருப்புப் பெட்டகத்தின் மீது வைத்து எடுத்துக் கொள்ளச் சொன்னார். குருக்கள் எடுக்க முயலவும் கை பிடித்துக் கொண்டது. அது முதல் அவர் குளிகைப் பித்தை விடுத்தார்.

தம் அருமை யன்பர் தொழுவூர் வேலாயுத முதலியாருக்கு உடம்புமுழுதும் பரவித் தடித்த சிரங்குகளைத் திருநீறீந்து அக்கணமே குணப்படுத்தினார்.

ஒரு நாள் தம்மைக் காண மேட்டுக்குப்பம் வரும் ஓரன்பர் வழி தடுமாறி அலையவே, முன்னே தோன்றி நேர்வழி காட்டி மறைந்தார்.

தம் வழிப்படி பசுக்களை அன்புடன் காத்து வந்த திருவொற்றியூர் இராஜகோபால பிள்ளை யென்பாரை ஒருநாள் மாடு முட்டி வருத்தவே, ஐயா கனவில் தோன்றி " அஞ்சற்க! நாளை இருவர் வந்து உன்னைக் குணப்படுத்துவர்" என்று, கூறி மறைந்தார். அவ்வாறே மறுநாள் இருவர் வந்து குணப்படுத்தினர்.

கொங்கண தேயத்தன்பர் இருவருக்கு ஐயா, வெண் குட்டமும் கருங் குட்டமும் தீர்த்தருளினார்.



## ௪௮. ஐயாவின் பணிவு

இவை, கண்டோர் குறித்து வைத்த சித்துக்கள். காணாது இயற்றிய சித்துக்களோ கணக்கில. அடிகள் கருங்குழியில் தங்கிய 16 ஆண்டுகளும் சுற்றிலுமுள்ள ஊர்களுக்குச் சென்று அருள் மழை பொழிவதும், அன்பர்க் கிரங்கி அற்புத வல்லபத்தால் பிணி, துயர், அச்சம், இடர்களைக் களைவதுமாக இருந்துவந்தார். இத்தகைய சித்துக்கள் ஆயிரஞ் செய்தாரேனும் நம்பிரான் எள்ளளவும் அவற்றைத் தமவெனச் சொல்லார். "எல்லாம் திருவருட் சேயல்; இவற்றை வெளியிடாதேயும்!" என்றுரைப்பார். வள்ளற் பெருமானின் ஒள்ளிய தாழ்மையும் அவர் காட்டிய ஒரு சித்தென்றே சொல்ல வேண்டும். எல்லாம் அருளாண்டவன் செயல். எல்லாம் வல்ல சித்தன் தமதுடலிற் கோயில் கொண்டால் எதுதான் இயலாது? தாமாக முனைந்து ஒருவருக்கு உபதேசங் கூட ஐயா செய்வதில்லை. திருச்சிற்றம்பல ஞானியார் என்றொருவர் ஒரு நாள் ஐயாவிடம் அருளுபதேசம் வேண்டினர். 'தாங்கள் துறவி; அடியேன் தங்களுக்கு உபதேசஞ் செய்தல் ஒவ்வாதென்றார்.' ஞானியார் பிடிவாதமாக வணங்கினர். உடனே

> நின்னிலைமை என்னருளால் நீயுணர்ந்து நின்றடங்கில்
> இந்நிலையே அந்நிலையை யெய்துதிகாண்-முன்னிலையில்
> நிற்குநவி லட்டாதே யென்றுரைத்தான் ஏகம்வாழ்
> சற்குருவென் சாமிநா தன்.

என்றொரு வெண்பா வரைந்து கொடுத்தனுப்பினர்.

சிலருக்குத் திருநீறுகூட அண்டையில் இருப்பவர் கையால் தரச் சொல்லுவார். தம்மை என்றும்

பெருந் துறவி யென்றும் சித்தரென்றும் நம் பெருமான் கூறிக் கொள்வதில்லை. தம்மை 'சாமி, அருட் பிரகாசர்' என்று அன்பர் வணங்குதலையும் அவர் விரும்பியதில்லை. அன்பர் வள்ளலாரை "ஐயா" என்றே அழைப்பர். தம் அன்பர் எங்கும் வத்துரை யிசைக்க, அடிகளார் அவர்களை நோக்கியுரைத்த தாழ்த் துரையாவது:—

சன்மார்க்க சங்கத்தீர் சிற்றடியேன் உமது
தாள்வணங்கிச் சாற்றுகின்றேன் தயவினொடுங் கேளீர்!
என்மார்க்கத் தெனைநுமக்துள் ஒருவனெனக் கொள்வீர்,
எல்லாஞ்செய் வல்லநம திறைவனையே தொழுவீர்,
புன்மார்க்கத் தவர்போல வேறுசில புகன்றே
புந்திமயக் கடையாதீர்; பூரணமெய்ச் சுகமாய்த்
தன்மார்க்க மாய்விளங்கும் சுத்தசிவ மொன்றே
தன்னுணை யென்னுணை சார்ந்தறிமி னீண்டே!

———

## ௧௩௰. அற்புதச் சித்து

அருட்கருணைப் பெருந்தந்தை தமக்களித்த அருள் வல்லபத்தில் ஆயிரத்தில் ஒரு பங்கு கூட வள்ளலார் உலகிற்குக் காட்டவில்லை. சூரியனுக்குக் கதிர் இயல்புபோல வள்ளலாருக்கு அருள் வாக்கும் அருட்சித்தும் இயல்பா யிருந்தன. ஆனால், அருட்பாவி னும் அற்புதமான சித்து எது? அவர் உலகிற்குக் காட்டியுள்ள ஆன்ம நேய ஒருமைப் பாட்டுரிமை யினும் அரிய சித்து எது? இவ்விரண்டு சித்துக்களே உலகெலாம் உய்தற்குப் போதியனவாகும். உலகிற் குத் தமது வாழ்வாலும், உண்மை நிறை மொழிக ளாலும் நல்வழி காட்டுவதே தீர்க்கதரிசிகளின் முதன் மையான கடமை. மற்றைச் சித்தாடலெல்லாம் ஆண்ட வன் அருட் பெருமை விளங்குதற்கு அவ்வப்போது அரிதாக மகான்களால் "நான் செய்கிறேன்" என்ற ஆணவமின்றி இயல்பாக இயங்கும். ஏசுநாதர் செத் தோரை யெழுப்பினர்; குஷ்டரோகியின் நோயைத் தீர்த்தார்; பேய்களை ஓட்டினர். நம் வள்ளலாரும் அதனினும் அற்புதச் சித்துகளை வெகு சாதாரண மாகச் செய்தார். ஒரு ஜான், மத்தாய், லூக்கா, பார்தலோமியோ, ஒரு விவேகானந்தர், அக்காலத்தில் இருந்திருந்தால், வள்ளலார் பெயரால் ஒரு அற்புத மான பைபிள் செய்திருப்பர். உலகெங்கும் அவர் அருளாட்சி நிலவியிருக்கும். ஆனல் வள்ளலார் சிற் சபையப்பனுக்கு அருட்பணியாகவே அனைத்தும் செய்தாரே யொழிய எதிலும் சிறிதும் தற்பெருமை வேண்டவில்லை. வள்ளலார் தமது அற்புதச் சித்தை எப்படிப் பெற்றாரென்பது அவர் வாக்கினின்றே அறியத் தக்கது :—

கடல் கடந்தேன் கரை கடந்தேன் கண்டுகொண்டேன்
[கோயில்
கதவுதிறந் திடப்பெற்றேன் காட்சி யெலாங் கண்டேன் ;
அடர் கடந்த திருவமுதுண் டருளொளியால் அனைத்தும்
அறிந்துதெளிந் தறிவுருவாய் அழியாமை யடைந்தேன் ;
உடல் குளிர்ந்தேன் உயிர் குளிர்ந்தேன் ;
உள்ளமெல்லாந் தழைத்தேன் ;
உள்ளபடி உள்ள பொருள் உள்ளவனாய் நிறைந்தேன் !
இடர் தவிர்க்குஞ் சித்தியெலாம் என்வசமோங் கினவே
இத்தனையும் பொதுநடஞ்செய் யிறைவனருட் செயலே !

இதுதான் சித்தின் இரகசியம் !

“ கடையேன் புரிந்த குற்றமெல்லாம் கருதாது என்னுட் கலந்து ஞானவமுதளித்து, அருட்சித்திப் பூவையைப் புணர்த்தி அருட்கொடை கொடுத்தாய் ; நினக்குச் கைமாறென்ன கொடுப்பேன் !” என்று உருகும் அருள் வாக்குகளை நோக்கின் வள்ளலார் தம் உடல், உயிர், உள்ளம், கண், கருத்து, எழுத்து, சொல், செயல் அனைத்திலும் திருவருளை உணர்ந்து அதன் செயலே தம்செயலாகி நின்றமை புலப்படும். இனி, வள்ளலாருக்கு எல்லாம் செய்யவல்ல சித்து ஈந்ததெது என்று ஆராய்வாம் ; எனெனில் அதுவே அவர் பெருஞ்செயல்களின் ஆவியும் உடலுமாகும்.

— —

## ௩௦. அருட்பா வெளியானது

வள்ளற் பெருமானின்றிச் சென்னை யன்பர் வருந்தினர்; வருந்தி வருந்தி யழைத்தனர்; தம் அவதாரப்பணி, ஈண்டேயுள்ள தென்றறிந்த எம்பிரான், கருங்குழியிலேயே தமது வாழ்வுக் கற்பகத்தை நட்டார். ஆண்டே அருட்பாலூற்று கடலாகப் பொங்கி யெழுந்தது. இக்காலத்தில்தான் மூன்று, நான்கு, ஐந்தாவது திருமுறைகள் பாடப் பெற்றன; கருங்குழிக்கு வருமுன்னரே இரண்டாந் திருமுறை பாடப் பெற்றது. வள்ளலார் அவ்வப்போது தில்லை சென்று தம் அருள்தந்தைக்கு நாளுக்கு நாள் அழகும் மணமும் மிகுந்த அருள்மாலைகளை ஏராளமாகச் சூட்டிவந்தார். இப்பாக்களின் அருமையும் அருட் பெருமையும், அன்பர் மனதை உருக்கின; அவற்றைத் தொகுத்து அச்சிட வேண்டுமென்னும் அவாவை வெளியிட்டனர். அடக்கமே உருவெடுத்த எம்பிரான் முதலில் சம்மதிக்கவில்லை. தம் பாடல்களை அச்சிட்டுப் பெருமை பெறவேண்டுமென்ற நினைப்பு ஒருசிறிதும் அப் படிகம்போன்ற உள்ளத்திலில்லை. புதுவை வேலு முதலியார், சிவானந்தபுரம் செல்வராய முதலியார், இருக்கம் இரத்தின முதலியார் முதலியோர், இருமொழிப்புலவர் தொழுவூர் வேலாயுத முதலியாரைக் கொண்டு திருமுறைகளாக வகுத்து வெளியிட்டனர். உலகெலாம் உணர்ந்தோதி, உருகி, வாழ்வில் அமைத்து இன்பத் திருவருள் பெறுதற்குரிய இத்திருவாக்குகளைக் கண்டோரும் கேட்டோரும் கடவுட் காதல் மூண்டெழுந்து வள்ளற் பெருமானையும், அவர் வாக்கினின்று பாடிய உள்ளப் பெருமானையும் வாழ்த்தி

வணங்கலாயினர். இப்போதும் வள்ளலார் தமது பணிவையே காட்டினர். புத்தகத்தில் திருவருட் பிரகாச வள்ளலார் என்று தம்மைச் சிறப்பித்த அன்பர் வேலாயுத முதலியாரை "என்காணும், திருவருட் பிரகாச வள்ளலாரேன்று உம்மை யார் போடச் சோன்னது?" என அதட்டினர். முதலியார் அருளாசான் முன் திகைத்தார். பிறகு "திருவருட் பிரகாச வள்ளல் (பதி, சிவன்) + யார்? என்னும் சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளை" என்று பிரித்துக் காட்டி வள்ளலாரே சமாதானஞ் சொன்னர். தம்மைச் சுவாமிகள் என்றழைப்பதற்குக் கூடச் சம்மதிக்கமாட்டார் எம்பிரான் என்பது அவர்தங் கடிதங்களினின்று விளங்கும். அடக்கமே வடிவான வள்ளலார் உடல், எலும்பு, உயிர், உளம், உணர்வு, வாக்கு, நாக்கு, செவி, கண், கண்மணி, ஒளி, தன்னறிவு, இயல்பு—அனைத்திலும் கலந்து தித்தித்துக் கற்பனை கடந்தோங்கும் சுத்த சிவ சன்மார்க்க பதியான சோதி நடராஜனுக்கே தம்மை யூணக்கி முற்றும் தற்போத மிழந்து அருட்போதந் திளைத்தார்.



## ௧௬. சோதனை

அருட்பாவைத் திரிசிரபுரம் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை போன்றோர் வியந்து வள்ளற் பெருமானை நேரே கண்டு வணங்கி ஆட்பட்டனர். ஆனால், சில பழந் தமிழ்ப் புலவர்களுக்கு அதை அருட்பா வென்றழைப்பது பிடிக்கவில்லை. நால்வர் ஓதிய தமிழே திருவருட்பாவென்று பெரிய சபை கூடிக் கிளர்ச்சி செய்து "போலி யருட்பா மறுப்பு" என்றொருநூல் வெளியிட்டனர். அதற்குத் தொழுவூர் வேலாயுத முதலியார் போன்றோர் ஆணித்தரமான மறுப்புகள் வெளியிட்டனர். அக்காலத்தில் கிளர்ச்சிகள் வலுத்துத் தம்மைச் சுற்றித் தர்க்கவாதச் சிலம்பங்களும், கண்டன வாள் வீச்சுக்களும், முட்டுக் கடாக்களும் இகழ்ச்சிப் பறைகளும் பலமாயிருக்கும் போது எம்பெருமானார் என்ன செய்தார்? இதுவும் அவனருட் கூத்தெனெ நகைத்துத் தம் இன்கனி மொழியால் "தம்மை யுணர்ந்தோர் பாட்டெலாம் அருட்பா; மற்றைப் பாடல் மருட்பா. ஏழு திருமுறைகளை வகுத்த நம்பியாண்டார் நம்பி அவற்றிற்கு அருட்பா என்று பெயரிடவில்லை; சமயாசாரியார் அருளியதைத் தேவாரம், திருவாசகம், தமிழ்வேதம், திருநெறித் தமிழ், திருப்பாட்டு என்றும், ஒன்பது நாயன்மார் இயற்றியதைத் திருவிசைப்பாவென்றும், அருண் மொழிப் புலவர் வாக்கைப் பெரிய புராணம், திருத் தொண்டர் புராணம் என்றும் வழங்கல் மரபு" என்று சாந்தமாகக் கூறித் தம்முள் அமைதி யெய்தியிருந்தார். அடக்கம் அமரருள் உய்க்கும். அருட்பா ஜீவநதி போல அன்பர் உள்ளத்தில் இன்பவெள்ளம்

பெருக்கி யோடுகிறது. அதை யெதிர்த்தோர் வாய் அடங்கித் துயில்கின்றது. இவையெல்லாம் காலத்தின் சோதனை. அதனால் வள்ளலாரின் அடக்கமும் பெருமையும் சிறந்து விளங்கின. தம்மை வன்மொழியால் தாக்கிய மாந்தர்க்கும் இனிமையே கருதி நம் வள்ளற் பெருமான் மீண்டும் மீண்டும் தமது அருணெறியைக்கூறலாயினர் :

நீர் பிறரோ ? யானுமக்கு நேயவுற வலனோ ?
நெடுமொழியே யுரைப்பனன்றிக் கொடுமொழிசொல் [வேனோ ?
சார்புறவே யருளமுதந் தந்தெனையே மேலேற்றித்
தனித்தபெருஞ் சுகமளித்த தனித்தபெரும் பதிதான்
சீர்பெறவே திருப்பொதுவிற் றிருமேனி தரித்துச்
சித்தாடல் புரிகின்ற திருநாள்கள் அடுத்த ;
ஓர்புறவே யிதுநல்ல தருணமிங்கே வம்மின்
உலகியலீர் உன்னியவா றுற்றிடுவீர் விரைந்தே !

என்று மீண்டும் மீண்டும் வள்ளற்குயில் தனது தேன் மொழியால் உலகை அழைத்தது.

## ௫௨. ஜீவகாருண்யம்

தந்தை தமக்குப் பணித்த அருணெறியை இனி உலகறிய விளக்கும் காலம் வந்துவிட்டது. உயிர்களிடம் வள்ளற்பெருமானுக்குப் புத்தரைப்போலப் பேரிரக்கம் பிறந்தது. எல்லா உயிர்களையும் தம்முயிரெனக் கருதினர். இப்போது தமது உயிரிரக்க (ஜீவகாருண்ய) ஒழுக்கத்தை நூலாக வெளியிட்டார். அதன்கண் உயிர்களின் பசியாற்றல் பேரறமென அருமையாகக் கூறியுள்ளார்:—

"புண்ணியமென்பது ஜீவகாருண்யம் ஒன்றே; பாவமென்பது ஜீவகாருண்ய மின்மையே. ஜீவகாருண்யத்தாலேயே கடவுளின் இயற்கை விளக்கமான அருளை யடைய முடியும். ஜீவர்களெல்லாம் சர்வ சக்தியுள்ள கடவுளால் படைக்கப்பட்ட ஓர் உரிமையுள்ள சகோதரரே யாவர். உயிரிரக்கமுள்ளவர்கள் சுகம் பெறுவர்; அஃதின்றி அறிவும் அன்பும் அருள் விளக்கமுந் தோன்ரு. கடவுள் அருளைப் பெறுதற்கு உயிரிரக்கமே முதன்மையான சாதனம். ஊழ்வகையாலும், அஜாக்கிரதையாலும், பசி, தாகம், பிணி, இச்சை, எளிமை, பயம், கொலை என்பவைகளாலும் வரும் அபாயங்களை நிவர்த்திசெய்து கொள்ளமாட்டாமல் வருந்தும் ஜீவர்களுக்குஅவற்றை நிவிர்த்திசெய்விக்கத்தக்க சுதந்தரமுள்ள ஜீவர்கள் ஜீவகாருண்யத்தால் நிவிர்த்தி செய்விக்கவேண்டும். பசி நீக்கலும், கொலை நீக்கலும் விசேஷமான உயிரிரக்கம். கொலையுணவு கொடுமை. மரம், புல், நெல், முதலியவற்றின் வித்து, காய், கனி, தழை முதலியவை உண்ணல் உயிரிரக்கத்திற்கு விரோதமில்லை. அவை பரிசமான ஓரறிவுடை

யன. அவற்றின் முதல்களை விடுத்து, வித்து காய்கனி களையே உண்கிறோம். தாவரங்களுக்கு மனம் முதலிய அந்தக்கரணவிருத்தி யில்லை. அவற்றை நாமே வித்தூன்றி விளைவிக்கலாம். ஆதலின் தாவர உணவு கொண்டு பசி வருந்துவோருக்கு அருத்தவேண்டும். பசிக்கொடுமை அனைவரும் அறிந்ததே. எல்லா ஜீவர்களிடமும் கடவுள் விளக்கம் பொதுவாக விளங்குவதை யறிந்து சன்மார்க்கத்திற்கு ஒத்த சத்துவ ஆகாரத்தால் பொதுநோக்குடன் பசி தவிர்க்கவேண்டும். உணவளித்தலை எக்காலத்தும் உரிய தொண்டாகக் கொள்ளவேண்டும். பிறர் பசியாற்றல் எல்லை யற்ற புண்ணியப் பயனுடைத்து. ஆன்ம உருக்கம் உண்டாக அந்த ஆன்மாவி னுள்ளிருக்கும் கடவுள் விளக்கமாகிய அருள் வெளிப்பட்டு விளங்கும். அத்திருவருள் விளக்கத்தால் கடவுள் இன்பம் அனுபவமாகி ஜீவர்கள் பூரணமாகும். ஜீவகாருண்யம் ஆன்ம வுரிமை யென்றறிக !

மருவாணைப் பெண்ணாக்கி ஒருகணத்திற்
    கண்விழித்து வயங்கும்அப்பெண்
உருவாணை யுருவாக்கி யிறந்தவரை
    யெழுப்புகின்ற வுறுவனேனும்
கருவாணை யுறவிரங்கா துயிருடம்பைக்
    கடிந்துண்ணுங் கருத்த னேலெங்
குருவாணை யெமதுசிவக் கொழுந்தாணை
    ஞானியெனக் கூறேணுதே !

என்றும்

வட்டிமேல் வட்டிகொள் மார்க்கத்தில் நின்றீர்
வட்டியை வளர்க்கின்ற மார்க்கத்தை அறியீர்
பெட்டிமேல் பெட்டிவைத் தாள்கின்றீர் வயிற்றுப்
பெட்டியை நிரப்பிக்கொண் டோட்டியுள் ளிருந்தீர்!
பட்டினி கிடப்பதைப் பார்க்கவு நேரீர்
பழங்கஞ்சி யாயினும் வழங்கவு நினையீர்
எட்டிபோல் வாழ்கின்றீர் கொட்டிபோற் கிளைத்தீர்!
எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே!

என்றும், உயிரிரக்கமற்றவர்க்கு நம் அருணெறிப் பெருமான் சூடு கொடுக்கின்றார்.

---

## ௫௬. தருமசாலை

தமது ஜீவகாருண்யக் கொள்கையைச் செயலிற் காட்ட தரும சாலை யொன்றமைக்க அடிகள் திரு வுளம் பூண்டார். அன்பர்கள் திருவுளக் குறிப்பை யேற்று ஓரிடம் குறிப்பிடச் சொன்னார்கள். திருவருள் நோக்கத்தால் பரவெளி போன்று எவ்வகையான உலக விவகாரமும் அற்ற சுத்த வெட்ட வெளியைக் காட்டி ஈண்டே தருமசாலை அமைந்து வளருதல் பொருந்தும் என்றார். அவ்வூராரே ஐயா அவர்கள் தருமசாலைக்கு எண்பது காணி நிலத்தைப் பட்டா செய்து கொடுத்தனர். அதுவே வடலூர் வெளி. தில்லை, திருவதிகை, திருமுதுகுன்றம், திருப்பாதிரிப் புலியூர் முதலிய பெரும்பதிகளுக்கிடையே தென் பெண்ணை, கெடிலம், வெள்ளாறு, மணிமுத்தா நதி யாகிய ஆறுகள் நாற்புறமும் மாலை சூட்ட, நடுவே அம்பலவாணன் ஆடரங்குபோல் நிராமயமாய் விரிந்த வெட்ட வெளியாகிய வடலூர், பார்வதிபுரம் உத்தரஞான சிதம்பரம், ஞானசபை, சித்திபுரம் என்று அருமையாக அழைக்கப்படும். தமது 44-ஆம் ஆண்டு (பிரபவ-ஹு வைகாசிமீ 11 வியாழன்) வள்ள லார் சித்திபுரத்தில் தமது அற்புதமான அருட்பணி யைத் தொடங்கி, தருமசாலையைக் கட்டி முடித்து, ஆயிரக்கணக்கான பேர்களுக்கு நாடோறும் எக் குறையுமின்றி எவ்வேறுபாடுமின்றி உணவளித்து வந்தார். முதல் மூன்று நாள் 10000 பேருக்கு உண

வளிக்கப்பட்டது. பாலினும் இனிய ஒரு நல்லூற்றுக் கேணியும், ஐயருக்கு அடிமைப்பட்ட ஒரு மாமும் தருமசாலையை அடுத்துள்ளன. இங்கும் பல வியத்தகு செயல்கள் நிகழ்ந்தன. யாருக்கும் அங்கு முகங் கண்டு பசியாற்றும் அன்புத்தொண்டு இன்றும் சிறப்பாக நடந்துவருகிறது.

ஓர் இரவு, உணவெல்லாம் அளவாகத் தயாராகி, அனைவரும் உண்ணப்போகின்றனர். அச்சமயம் திடீரென நூறுபேர் வந்துவிட்டனர். என்ன செய்வதென அங்கிருந்தவருக்குத் தோன்றவில்லை. இருந்த உணவோ போதாது; புதிதாகச் சமைத்தற்கும் அவ்விரவில் முடியாத காரியமாயிருந்தது. ஐயா அவர்களோ, 'இலை போடுங்கள்!' என்று கூறித் தமது திருக்கையால் பரிமாறவே எல்லாருக்கும் அவ்வுணவு போதியதாயிருந்தது. அவர் கை கற்பகக் கையன்றோ? அருளும் அன்புமாகிய சங்கநிதி பதும நிதியன்றோ அப்பூங்கரங்கள்!

மற்றொரு பகல் உணவுப் பொருள்கள் அறச் சாலையில் இல்லை. அன்பர் முறையிட்டனர். சற்றுத் திருவருட் கலப்பிலிருந்து, 'எல்லாம் நாளைவரும்' என்றார் வள்ளலார். மறுநாளே திருத்துறையூரினின்று மூன்று வண்டி நிரம்ப அரிசியும் மற்ற உணவுப் பொருள்களும் வந்தன. 'சுவாமிகள் எங்கள் கனவில் தோன்றிக் கட்டளையிட்டவாறு கொணர்ந்தோம்' என்று கொணர்ந்த அன்பர் கூறித் திருவருட் பிரசாதம் பெற்று வணங்கிச் சென்றனர்.

---

## ருச. ஞான சபை

இப்படிப் பேருயிரிரக்கம் பூண்டு, அருயிர்கட்குப் பசியாற்றுந் தொண்டு புரிந்து தரும சாலையில் எழுந்தருளிய வள்ளலார் தமது சமரச வேதம் பரவுமாறு சமரச தரும பாடசாலை யொன்று (பொதுமறைக் கழகம்) அருகேயமைத்து அங்கு, சுத்த சத்திய சமரச சன்மார்க்க வேதமான அருட்பாவை அன்பர் ஓதியுணர்ந்து அதன்வழி நிற்கச் செய்தார். அதற்கு அணித்தாக மற்றொரு நாற்பது காணி நிலத்தில் எல்லாரும் சமரசமாகக் கலந்து வணக்கம் செய்யத் தக்க அற்புத ஞான சபை யொன்று நிறுவினர். இச் செயல் திருவருள் நோக்கத்தால் திருவருள் வல்லபத் தாலேயே நிகழ்ந்தது. தாமரை வடிவில் எண்கோண மாக மிக அழகாயமைந்த அவ்வறிவு மன்றத்தின் அமைப்பை எழுதிக் கொடுக்கவே, அன்பர் ஐயாவின் அருள் வல்லபங்கொண்டு கட்டி முடித்தனர்.

இவ்வறநிலயக் கொடிமரத்திற்கு மரம் வாங்கச் சென்னை சென்றவர் ‘ விலை யதிகம் சொல்லுகிறார்கள் ’ என்று திரும்பி வந்தார். ‘ நீர் முதலில் போம் நான் வருகிறேன் ’ எனப் பணித்து, அடிகள் அவருக்கு முன்னேயே சென்னை சென்று மரத்தொட்டியில் வேண்டிய மரம், சகாயமாக வாங்கித்தந்து அவருக்கு முன்பே வடலூரில் தோன்றினர். இச்சமயம் வடலூரிலிருந்தவர்களும் ஐயர் தம்முடனிருப்பதைக் கண்டனர். இப்படி ஒரே காலத்தில் பல இடங்

களில் இருப்பது நம் பெருமான் காட்டிய இயற் சித்துக்களி லொன்று.

மற்றொரு நாள் ஞான சபை மேல்விதானங் கட்டும்போது சாரம் முறிந்து மூவர் கீழே விழுந்தும் சிறிதும் காயப்படவில்லை. அறிவு மன்றம் முடிந்தது. அன்பர் தஞ்சை அலங்கார வேலைக்காரரைக் கொண்டு ஓர் அழகிய திருப்பந்தலமைத்தனர். அதில் வேலை செய்தவர்கள் புலாலருந்துவோர் ஆதலின் இம்மன்றம் திருவுளச் சம்மதமில்லை யென்று ஐயா கூறினர். உடனே ஒரு பெரு மழை; இடி; பந்தல் சாம்பலாயிற்று. ஆனால் வேறொரு சேதமும் இல்லை.

அனைத்தினுஞ் சிறந்த சுடரே அச்சபையில் வணங்கப்படுகிறது. அச்சபைக்கு எழு சிற்சக்தி விளக்கமான (Seven planes of consciousness) எழு திரைகள் இட்டு, எழு மணி விளக்கங்கள் மிளிர்கின்றன. அடி நிலை, ஆதார வெளி, நடு நிலை, இதயாம்பர வெளி, முடி நிலை, சிற்சபா ரகசியாங்கித வெளி, உபயாம்பர மென்னும் செம்பொன்னம்பலம் ஆகிய எழும் வள்ளலாரின் அருள் நோக்கின்படி அமைந்தன. அங்குக் கற்பூர சோதி வழிபாடே நடக்கிறது! எல்லாம் அறிவு, அன்பு, தூய்மை, வாய்மை, அருள் விளக்கமே! தூய அருளிதயம்போன்ற ஒரு பெரிய நிலைக் கண்ணாடி வரவழைத்துத் தமது சித்திவளாகத் திருமாளிகையில் ஒரு திருவிளக்கின்முன் வைத்து ஒரு மண்டலம் வழிபாடு செய்து அவ்விரண்டையும் வள்ளலார் தைப்பூசத்தன்று ஞான சபையில் ஸ்தாபிக்

கச் செய்தார். அன்று அருட்சோதி விளக்கங் காட்டினார். இவை யெல்லாம் அமைத்து, நம் குருமணி நாதன் மேட்டுக்குப்பத்தில் சித்திவளாகமெனும் சிற்றில்லில் எப்போதும் இன்ப நிஷ்டையில் இருந்து வந்தார்.

இடையிடையே அன்பர்கள் சித்தி விளக்கங்கள் பலவும் கண்டுவந்தனர். ஒருநாள் அன்பர் தம் தலைவருடன் ஆனித் திருவிழாக் காட்சிக்குச் சிதம்பரம் செல்ல நெடுநேரம் காத்துக்கொண் டிருந்தனர். ஐயா வரும் வழியைக் காணோம். சிலர் பொறுமை யற்றுப் புறப்பட்டு விட்டனர். பிறகு தருமசாலை யில் ஓரிடத்தில் திரை தொங்கவிட்டு அதனுட் சென்று காணும்படி மீதி யன்பர்க்கு ஐயா பணித்தார்! ஆ! சிற்றம்பலக் காட்சி அங்குப் பொன்னொளிர்ந்தது. அன்பர் வியந்து போற்றிப் பணிந்தனர்.

---

## ருரு. அருட்பெருஞ் சோதி!

சித்திவளாகத் திருமாளிகையில் இடைவிடாத சிவஞானனுபவத்தில் சகஜ சுகானுபவ நிஷ்டையி லமரும் காலத்திலேதான் வள்ளலாரின் வாக்கு, செயல், நோக்கு, சித்தி அனைத்தையும் உள்ளிருந்து ஆற்றிய அருட்பெருஞ் சோதி காட்சியாகி அவருள் ளும் புறமும் சோதி வடிவானது. இதன் இன்பச் சிலிர்ப்பில் எழுந்த ஆவேச ஆற்றே அருட்பெருஞ் சோதி அகவல். அதுவே வள்ளலாரின் இரகசியம், சக்தி, சித்தி விளக்கம் எல்லாம். அதுவே அருட்பா விற்கு உயிர். இவ்வருட்சோதி யகவலே தைப்பூசத் தன்று ஞான சபையில் திருக்கண்ணாடியும் மணி விளக்கும் பிரதிஷ்டை செய்யும்போது ஆயிரக்கணக் கான அன்பர்கள் ஆர்வமுடன் பாடியது. இன்றும் உருக்கமுடன் அது பாடப்பட்டு வருகின்றது. ஆனல் இதன் பொருளை மனங் கடந்த விஞ்ஞானனுபவம் பெற்ற பூரண யோகிகளே அறிவர். சாதாரணமான ஹட, ராஜ, ஞான, பக்தி, கர்மயோக விதானங் களுக்கு இதன் உன்னதப் பெருமை எட்டாது. வள் ளலார் வருந் தருணப் பாட்டுகளிற் கூறிப்போந்த உண்மை பலித்தது. மனமாயைக் குழியில், இருளி டரில் நடைப்பிணங்களாகத் திரியும் மாந்தரை அருட் பெருஞ் சோதி வெள்ளம் பாய்ச்சி, அமர வாழ்வில் உய்க்கும் வள்ளலாரின் காரியத்தை இப்போது அனுப் பிசகாது அருளாண்டவன் உலகில் நிறைவேற்றி வரு

கின்றான். அவருரைத்த உயர்ந்த உண்மைகளை யறிய அக்காலம் அபக்குவமா யிருந்தது. வள்ளற் பெருமான் பணிவுடன் உருக்கமாக அருளுகிறார் :—

ஏதுமறி யாச்சிறிய பயல்களினுஞ் சிறியேன்
    இப்பெரிய வார்த்தைதனக் கியானுரேன் னிறைவன்
ஓதுகநீ யென்றபடி ஓதுகின்றேன் ; மனமே,
    உள்ளபடி சத்தியமீ துணர்ந்திடுக ; நமது
தீதுமுழு துந்தவிர்த்தே சித்தியெலா மளிக்கத்
    திருவருளாம் பெருஞ்சோதி யப்பன்வருந் தருணம்
ஈதிதுவே யென்றுலகம் அறியவிரைந் துரைப்பாய்
    எல்லாருங் களிப்படைந்துள் ளிசைந்தேத்தி யிடவே.

என்று பலவாக அள்ளித் தெளித்த வருந் தருணப் பாடல் ஒவ்வொன்றும் உண்மை மணி! அந்த உண்மை நிறைவேறி வருகிறது ; உலகறிய விளங்கும்!

அருட்பெருஞ் சோதி அகவல் முழுதும் கடவுட் சோதியினின்று தெறித்த அனுபவச் சுடர்கள். அதில் எல்லா வேத ரகசியமும் அடங்கியுள்ளது. அதற்கு உரை யெழுதொணாது. அவரவர் அனுபவித்தே, உள் ளுறைந்தே அதன் பொருளறிய வேண்டும்.

'வானரசு உன்னில் இலங்குகிறது' என்று ஏசுநாதர் அருளினார். அந்த வானரசும் வள்ளலார் ஓதிய அருளாட்சியும் ஒன்றே. அந்த அருளாட்சியே எல்லா மதங்களும் எதிர்பார்க்கும் பரிபூரண யோக சாம்ராஜ்யம். அதை உள்ளே அனுபவித்தவரே புறத்தே காண வல்லவர். அது தத்துவாதீதம் ; சச்சிதானந்தப் பரவெளி யெனும் பொன்னம்பலத்தில் சம

யங் கடந்து, காரணங் கற்பனை கடந்து, துரியங் கடந்த சுக பரிபூரணமாய், இயற்கை யுண்மையாய், சாகாக் கலாநிலயமாய், சக்தி மயமாய், எல்லாம் வல்லதாய் இலகும் பரஞ்சுடர். அதுவே எல்லாம் வல்ல யோக சித்திகளுக்கும் இருப்பு. மனமாயை இருள் நீக்கி அருளொளி நிரப்புவ ததுவே. ஐம்பூதங் களையும் ஆண்டு அதனதன் தன்மையா யிருப்ப ததுவே. வானிடைக் காற்றும், காற்றிடை நெருப் பும், நெருப்பிடை நீரும், நீரிடைப் புவியும், புவிமேற் படைப்பும், வித்திடை விளைவும் வகுத்தததுவே. ஒற் றுமை வேற்றுமை உரிமைகளனைத்தும், உருவினில் அருவும், அருவினில் உருவும், அருவிலருவும், கரணம், இடம், கலை, வண்ணம், வடிவு, சிறுமை, பெருமை, மென்மை, திண்மை, அடி, நடு, முடி, அகம், புறம், சராசரம் ஆகிய எல்லாமும் அருட்பெருஞ்சோதி விளக்கமே. பெண்ணில் ஆணும், ஆணினுட் பெண் ணும், தனித்தனி வடிவிலும் ஆண் பெண்ணியல் அனைத்தும் வகுத்தது அருட்பெருஞ்சோதி. எப்படி எவ்வுயிர் எண்ணுமோ அப்படி யளிக்கும் அருட் பெருஞ் சோதியே தோற்றமாம் மாயைத் தொடர் பறுத்து, அருளாற்றலை யளிக்கும்; ஆணவமழித்தே அனுக்கிரகம் புரியும்; எவ்வகை யுயிர்களும் இன்புற நிற்கும்; மாய வாழ்வில் செத்தார்போல் வாழும் மாந்தரை நித்திய ஆன்ம உணர்வில் எழுப்பி இறவா நிலை தரும். அது அதுவே. தானே தான். தானே எல் லாம். அது பரம் பரம்பரம், பரஞ் சிதம்பரம்; அவ னேடவளாய் அதுவாய் அலதாய் நிலமிசை நண்ணிய

சிவம்; அருளமுதம்; கருணை யுள்ளத்தில் விளங்கிடும் மெய் விளக்கு. அதன் அருளுறின் எல்லாம் ஆகும். அருணெறி ஒன்றே அறநெறி யென்று அஃது இயம்பு கின்றது. அருளறிவு, அருட்சுடர், அருட்சுகம், அருட்பேறு, அருள்வல்லபம், அருணிலை, அருள்வடி வம் எல்லாம் அருளி, உள்ளகத் தமர்ந்து உயிரிற் கலந்து சுத்த சன்மார்க்க சுக நிலையில் சத்திய சோதி வாழ்வளிக்கும் சாகாக் கலையதுவே. சிவ ரகசியம், பிரம ரகசியம், துரிய ரகசியம், சத்தியல், சித்தியல் ஆகிய எல்லாம் அது. கேட்டவை கேட்பித்து, காண் பவை காட்டிச், செய்பவை செய்வித்து, உண்பவை ஊட்டி, சாகாக் கலையின் திறமெலாம் பயிற்றி, எல்லா நிலைகளுக்கும் ஏற்றிய குருமணி அதுவே. அருளமு தூட்டி, அச்சங் கலக்கந் தவிர்த்து, சித்தி சக்தி யளித்து, சத்தி நிபாதந்தனை யளித்து, தன்னிகரில்லாத் தலைவனைக் காட்டிடுந் தாய் அதுவே! துன்பெலாந் தவிர்த்து, அன்பு நிரப்பி, எல்லா நன்மையு மளித்து, அறிவிலாப் பருவத்து அறிவெனக் களித்து, அகத்தி னும் புறத்தினும் அமர்ந்து இவ்வுலகில் ஒளி காட்டி, இணையிலாக் களிப்புற்றிடத் தன் பொருளனைத்தையும், தன்னரசாட்சியில் என் பொருளாக்கிய என் தனித் தந்தை அருட்பெருஞ் சோதி. தன் வடிவு, தன்னாட்சி, தன் சித்து, தன் தத்துவம் எனதாக்கித் தன் கையிற் பிடித்த தனி யருட்சோதியை என் கையிற் கொடுத் துத் தன் சக்தி வடிவும் யானும் ஒன்றெனக் காட்டி, தன்னுரு என்னுரு, தன்னுரை என்னுரை என்ற தந்தை அது. அதுவே ஈறிலாப் பதங்கள் யாவையுந்

கடந்த இன்பம். அச்சமுந் தளர்வும் நீக்கி, 'துறை இது, வழிமுறை இது' என்று விளக்கித் துணிவீந்த துணையதுவே. எனக்கு உயிரினுஞ் சிறந்த அருட் டுணையான நட்பு அதுவே. குணங்குறி யில்லா தென்னைக் கலந்த நட்பு அதுவே. அதுவே மனக்குறை நீக்கி என்றும் எனக்கு உறவானது. அது சத்து, உண்மை, துரியங்கடந்த பெரிய வான் பொருள்; என்று முள்ளது; எங்கும் நிறைந்தது; பல சக்தி சக்தர்களாய் விளங்குவது. உயிர், உடல், காண்பன, காட்சி, செய்வன, செய்வினை, அறிவன, அறிபவை, பலவாகும் இயற்கை விளக்கம் (சித்து) அதுவே, அவத்தைகளெல்லாங் கடந்த, அறிவுக் கறிவும் அதுவே. இயற்கை யின்பம் (ஆனந்தம்) அதுவே. கரும்பும், கனியும், பாலும், தேனும் கைக்க இனிக்கும் கருதரிய அமுது அதுவே. அது என்றும் உள்ளது; என்னுயிர் உடல் உள்ளமெல்லாம் இனிக்க என்னுள் உள்ளது. அது ஞானத் தேன்; சக்தித் தேன்; நிறை சிவ அமுது; சச்சிதானந்தத் தனிமுத லமுது; உலகெலாங் கொள்ளினும் உலப்பிலா அமுதம்; நினைத்தவை நினைத்தாங் கெய்தும் மணி. ஐந்து, எட்டு, ஆறு, நான்கென மொழியும் வேதாகம விரிவடங்கிய மந்திரம் அதுவே. இறந்தவரை எழுப்பும் வல்லபம் அதற்கே யுண்டு; நரை திரை மூப்பிலாது, என்றும் இளமையோடிருக்க ஞானமாம் மருந்தாவது அதுவே. எடுத்தெடுத் துதவினும் என்றுங் குறையாது வளர்ந்து, நான் மறக்கினும் என்னை நீங்காது, எண்ணியதெல்லா மீயும் பைம்பொன் அதுவே. அது எல்லா நிதியும்

வளரும் கற்பனை கடந்த கருணைமா நிதி, நற்குண நிதி, சற்குண நிதி; உரைமனங் கடந்து துரிய மேல் வெளியில் துலங்கும் சோதி மாமலை; அருளானந்தக் கடல்; தீஞ்சுவை யூற்று; கோடை வாய்க் குளிர் நிழல்; மேடை வாய் மென்கால்; செவ்விள நீர், கட்டி மாம் பழம், கனியெலாங் கூட்டிக் கலந்த தீஞ்சுவை; உவர்ப்புறு தினிக்கும் உயர்மலைத் தேன்! சுக மணமலர், யாழிசை, எழிசை, வேதகீதம், என் கண், களிப்பு, தவம், பொருள், பலன், வாழ்வு, குலம், புலம், வரம், தரம், திறம், சிரம், என் தனி அன்பு எல்லாம் அதுவே. மனங் கனிய, மதி நிறைந்தொளிர, என்னுளத்தெழுந்து என்னுட் பழுத்த புத்தமுதுணவு; தன்னையே எனக்கீந்த அன்பு; எனக்குப் பொன்னுடப்பு பொருந்திட என்னுளே யெழுந்து என்னுளங் கலந்த அன்பு. ஆணவ இருளற என்னுள் ஏற்றிய விளக்கு. என் செய்தவம் பலித்த திருவளர் நிறை மதி.

பாலெனத் தண்கதிர் பரப்பியெந் நான்றும்
மேல்வெளி விளங்க விளங்கிய மதியே!
நலந்தா வுயிருடல் நல்லறி வெனக்கே
மலர்ந்திடக் கருணை மழைபொழி மழையே!
ஆதியு நடுவும் அந்தமுங் கடந்த
சோதியா யென்னுட் சூழ்ந்தமெய்ச் சுடரே!
உள்ளொளி யோங்கிட வுயிரொளி விளங்கிட
வெள்ளொளி காட்டிய மெய்யருட் கனலே!
சபையென துளமெனத் தானமர்ந் தெனக்கே
அபய மளித்ததோ ரருட்பெருஞ் சோதி!
சாகாக் கல்வியின் தரமெலா முணர்த்திச்

சாகா வரத்தையுந் தந்துமேன் மேலும்
அன்பையும் விளைவித் தருட்பே ரொளியால்
இன்பையு நிறைவித் தென்னையு நின்னையும்
ஒருரு வாக்கியான் உன்னிய படியெலாம்
சீருறச் செய்துயிர்த் திறம்பெற அழியா
அருளமு தளித்தனை யருணிலை யேற்றினை
அருளறி வளித்தனை யருட்பெருஞ் சோதி !
சித்திக ளனைத்தையுந் தெளிவித் தெனக்கே
சத்திய நிலைதனைத் தயவினிற் றந்தனை
போற்றிநின் பேரருள் ! போற்றிநின் பெருஞ்சீர் !
ஆற்றலி னோங்கிய அருட்பெருஞ் சோதி !
அருட்பெருஞ் சோதி அருட்பெருஞ் சோதி !
அருட்பெருஞ் சோதி அருட்பெருஞ் சோதி !

இதுவே சுருக்கமாக அருட்பெருஞ் சோதியின் உரு, திரு, விரிவெல்லாம். உரையால் உரைக்கத்தக்கது இவ்வளவே. மனிதனுக்கும் விலங்கிற்கும் எவ்வளவு வேற்றுமை யுள்ளதோ அவ்வளவு இந்த அருட்பெருஞ் சோதி யாளனுக்கும் சாதாரணமான மனிதனுக்கும் உள்ளது.

---

## ௫௧. வள்ளலார் தோற்றம்

இச்சோதிநிலை பெற்ற சுடர் மேனிப் பெருமான் பின்பு முயன்றதென்னை? பெருஞ் செயல் முயன்றார்— உலகெல்லாம் சாதி - மத - நிற - நாடு - குல வேற்றுமையின்றி அருட்சோதி வெளியிற் சேரும் பெருமுயற்சி செய்தார். அக்காலம் அவரை அறிந்து கொள்ளவில்லை. இருப்பினும் தமது தூய வாழ்வாலும், சோதி மொழியாலும் தாம் வந்த காரியத்தையும் அருட்சோதி பெறும் பயன்களையும் பல வகையில் மக்களுக்கு அவர் அறிவுறுத்தியே சென்றார்.

இப்போது இந்த அருள் வெள்ளம் நித்யானந்த நித்திரையிற் கலக்கும் காலம் வந்துவிட்டது. தம் உருமறையுங் காலத்தில் அவர் வாழ்வின் குறிப்புகள் சில நமக்குக் கிடைத்தன. அவற்றை ஈண்டுக் கூறுவாம் :—

வள்ளலார் சாதாரண உயரமுள்ளவர். நிமிர்ந்த மெலிந்த உடல்; எலும்புகள் தெரியும்; ஆயினும் வீரியபலம் மிக்கவர். தெளிந்த மாநிற மேனி; நீண்ட மெல்லிய மூக்கு, சிற்கனல் பொறியும் விழிகள்; முகத்தில் சிறிது விசனக்குறி காணும். அது தமது அருட்சோதி யனுபவத்தை உலகறிந்து, அருளாட்சிபெறும் பக்குவம் மாந்தர்க்கு இன்னும் வரவில்லையே என்பதற் கடையாளம். கடைசிக் காலம் முடி வளர்த்துக் கொண்டிருந்தார். இவர் சத்துவ குணத்திற் கறிகுறி

யான இரண்டு தூய வெள்ளை யாடைகளை அரையிலும் மேலும் அணிந்திருப்பார்; துவராடை அணிவதில்லை; கடும் நிராகார தபசி; துயில் நீத்தவர். இவர் இளைப் பாறி எவருங் கண்டதில்லை; இரண்டு மூன்று நாளைக் கொருதரமே அளவாகச் சில கவளங்கள் உண்பாராம்; இரண்டு மூன்று மாத காலம் வரை சிறிது பானகமே உண்டு உபவாச மிருப்பார்; நெய் முழுக்குச் செய் யும் நாட்களில் மௌனம் வகிப்பார். அன்று எத் தொழிலும் செய்யார். மனம் வருந்த நினைத்தலும் ஆகாதென்பது அவர் கருத்து. காலை வெயில் மேலே படாது போர்த்திருப்பார். காலை வெயில் புறப்படு முன்பே வெளிக் கடன்களை முடித்துத் திரும்புவார். உயிர்கள் நசுக்குறுமென்று காலிலே கட்டை போடாது மெத்தெனத் தோலாற் செய்த செருப்பு களையே அணிந்திருந்தார்; சிறிதாக வாயில் உரோமம் படாதவாறு தம் மீசையைக் கத்தரித்து வைத்திருந் தார். எவ்வுயிரையும் தம்முயிர்போலெண்ணிப் பசி யாற்றலும், கொலை நீக்கலும் செய்தார். அவர் திடீ ரெனச் சில காலம் மறைந்து பிறகு திடீரெனத் தோன்றுதலும் உண்டு. கை கால், தலை வேறு வேறா கக் கிடந்து பிறகு எழுந்ததையும் சில அன்பர் கண் டிருக்கின்றனர்.

அவர் பிரணவ தேக மடைந்ததால், பலகால் முயன்றும் ஒளிப்படமெடுக்க முடியவில்லை. அவர் உரு அதில் விழவில்லை. பிறகு பண்ணுருட்டி யன்பர் ஒருவர் அடிகள் திருவுருவை யெழுதியளித்தார். 'பொன்னன மேனி மண்ணுயிற்றே!' என்று அதைக்

கிழே போட்டார். நபி நாயகத்தைப் போலவே தம் உருவை வைத்து வணங்கக் கூடாதென வள்ளலார் விரும்பினர். அவர் தமக்கென எப்பெருமையும் விரும் பாத அடக்கம் பூண்டார்; கொல்லாமையை நீக்க முயன்ருர். இவர் காந்த விழியிற் பட்டவர்கள் கொலை வழி விலகி அருணெறி பூண்டனர். தாயுமானவருக் கும் இவருக்கும் பல விதத்தில் கொள்கை யொற்றுமை யுண்டு.

---

## ௫௭. அருட்சமயம்

அடிகள் சத்திய ஞான சபையில் அடிக்கடி அருட் சொன்மாரி பொழிந்து ஆயிரக்கணக்கான அன்பர்க்கு அருளுதயமாகச் செய்வார்; இடையிடையே 'உங்களைக் கைவிடேன்' என்பார். வள்ளலார் சொற்பொழிவின் பொருளான அருணெறியை ஈண்டுச் சுருக்கிக் கூறுவோம். சாதி சமயச் சழக்குகளுக்கெட்டாத சோதி நெறியான சுத்த சமரச சன்மார்க்கத்தை இவர் வழிகாட்டி யுறுத்தி வந்தார். இவர் சன்மார்க்க சமயத்தைக் கீழ்வரும் இரண்டு செய்யுட்களும் தெற்றென விளக்குகின்றன :—

எவ்வுயிரும் பொதுவெனக்கண் டிரங்கியுப
    கரிக்கின்றார் யாவர் அந்தச்
செவ்வியர்தஞ் செயலனைத்துந் திருவருளின்
    செயலெனவே தெரிந்தே னிங்கே
கவ்வையிலாத் திருநெறியத் திருவாளர்
    தமக்கேவல் களிப்பாற் செய்ய
ஒவ்வியதென் கருத்தவர்சீ ரோதிடவென்
    வாய்மிகவு மூர்வ தாலோ !

எத்துணையும் பேதமுறா தெவ்வுயிருந்
    தம்முயிர்போ லெண்ணி யுள்ளே
ஒத்துரிமை யுடையவரா யுவக்கின்றார்
    யாவரவர் உளந்தான் சுத்த

சித்துருவா யெம்பெருமான் நடம்புரியும்
இடமெனநான் தெரிந்தேன் ; அந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடவென்
சிந்தைமிக விழைந்த தாலோ !

என்றவாறு அருள், அன்பு, உயிரிரக்கம், சமரசம் இவையே வள்ளலார் மதத்தின் சுருதி மொழிகள்.



## ருஅ. ஒளிக் கடவுள்

பெருகியபே ரருளுடையார் அம்பலத்தே நடிக்கும்
பெருந்தகையென் கணவர்திருப் பேர்புகலேன் கின்றய்
அருகர்புத்த ராதியென்பேன் அயனென்பேன், நாரா
யணனென்பேன், நானென்பேன், ஆதிசிவ னென்பேன்,
பருகுசதா சிவமென்பேன் சத்திசிவ னென்பேன்
பரமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரம மென்பேன்
துருவுசுத்த பிரமமென்பேன் துரியநிறை வென்பேன்
சுத்தசிவ மென்பனிவை சித்துவிளை யாட்டே.

வள்ளலாரின் சமரசக் கடவுள் இவ்வாறு எம் மதத்திற்கும் சம்மதமானவர். எவ்விடத்தும் எவ் வுயிர்க்கும் இரண்டற்ற அருட்சிவமே அவர் கடவுள். அவ்வருட்கடவுளை உருவருவாக விளங்கும் ஒளியாக அவர் கண்டோதினர். கண் காண்பவற்று ளெல்லாம் சிறந்தது ஒளியேயன்றோ? அச்செழுஞ் சுடரையே சுத்த சமத்துவ சிவவெளிக் கடையாளமான நிலைக் கண்ணாடிமுன் வைத்துக் கருதும்படி வள்ளலார் தமது அருணெறிச் சங்கத்தைப் பணித்தார். அருட் சோதி புருவ நடுவே தோன்றும். புருவ நடுவே தியானத்தை ஊன்றினல் இவ்வொளி விளங்கும்.

ஒளியொன்றே அண்டபகி ரண்டமெலாம் விளங்கி
ஓங்குகின்ற தன்றியண்ட பகிரண்டங் களிலும்
வெளிநின்ற சராசரத்தும் அகத்தினெடு புறத்தும்
விளங்துமகப் புறத்திலெடும் புறப்புறத்தும் நிறைந்தே.

உளநின்ற இருணீக்கி யிலங்குகின்ற தன்மை
உலகறியும் நீயறியா தன்றுகண்டாய் தோழி
தனிநின்ற ஒளிமயமே வேறிலையெல் லாமும்
தானெனவே தாகமங்கள் சாற்றுதல் சத்தியமே.

இதுவே வேதாந்த வொளி, சித்தாந்த விளக்கு, யோகாந்தம், நாதாந்தம், போதாந்தம், கலாந்தங் கடந்த துரியமுடி யனுபவ சுத்த சித்தாந்தத் தனிப் பெருஞ் சுகநிலை. ஆறந்த நிலைகளின் அனுபவ நிறைவு அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணையே.

காட்சியே காண்பதுவே ஞேயமேயுட்
கண்ணுடையார் கண்ணிறைந்த களிப்பே யோங்கு
மாட்சியே உண்மையறி வின்ப மென்ன
வயங்குகின்ற வாழ்வே மாமௌனக் காணி
யாட்சியே, யாட்சிசெய்யும் அரசே, சுத்த
அறிவேமெய் யன்பேதேள் ளமுதே, நல்ல
சூட்சியே, சூட்சியெலாங் கடந்து நின்ற
துரியமே, துரியமுடிச் சோதித் தேவே!

இந்தச் சோதித் தேவை உள் அனுபவமே காட்டும்.

இப்பொருள் கோதகன்ற யோகர் மனக் குகையில் வாழும் மோகனக் கோமளம்; வாதகன்ற ஞானியர் மதியிலூறும் வானமுதம்; ஆனந்த மாமழை. இந்த இயற்கை யுண்மைக்கடவுளின் இன்ப நிலை யனுபவம் சுய முயற்சியால் எய்தாது. திருவருட் கருணையாலே யெய்தும். அருளறிவிப்பதே அறிவு; மனிதர் அறிவறிவிப்பது இருள். திருவருட் சுதந்தரத்தினலேயே நித்தியானந்த நிலை யெய்தும். அதற்கு நமது

தேக சுதந்தரம், போக சுதந்தரம், ஜீவ சுதந்தரம், எல்லாம் அவனுக்கே (திருவருட்சிவன்) ஊளுக்க வேண்டும்.

---

## ருகூ. சன்மார்க்க சங்கம்

திருவருளடைவே சன்மார்க்கக் குறிப்பு. அதற்கே வள்ளலார் உரையாலும் செயலாலும் உழைத்தார். இறைவன் தனிப்பெருங் கருணையன். கருணையே அவனை அடையும் வழி. கருணை விளக்கத்திற்கே சத்திய ஞானசபை ஏற்பட்டது. இது சாதி சமயம் நாடு மொழி நிறம் முதலிய வேறுபாடெதுவுமின்றி எல்லாருக்கும் சுத்த சமரச சன்மார்க்கமான சோதிக்கடவுளை நாடி அருணெறியைப் போதிப்பதற்கேற்பட்டது.

1867-வது ஆண்டு சமரச சன்மார்க்க சங்கம் ஏற்பட்டு ஆறு ஆண்டுகள் தீவிர வேலை செய்தது. அதன் வேகம் இப்போது நாடெங்கும் அதிகரிக்கிறது. பிணி, மூப்பு, சாக்காடற்று நித்திய தேகம் பெறவும் தம் அன்பரான இச் சங்கத்தினருக்கு வள்ளலார் வழிகாட்டினர். ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமையே (Spiritual Communism) வள்ளலாரின் சுருதி வாக்கியம். சுத்தான்மா ஒவ்வோரிதயத்திலும் ஒளிரும். அதில் ஒன்றி அனைவரும் ஒரே அருட்குலமாக இறைவனைத் தலைக்கொண்டு வாழ்தலே ஆன்மநேய வாழ்வாம். சாகாக்கலையே ஆன்மநேயர் கல்வி. அருட்பாவே இவர்கள் ஓதுந் திருமுறை. வள்ளலார் தம் அன்பர்க்கு வாரிச் சொரிந்த அருட்சோதி மழையினின்று சில மின்றுளிகளை ஈண்டுத் தருவாம்.

---

## ௯௦. சாகா நிலை

அடிகள் குறித்த சாகா நிலை யென்பது பிறப் பிறப்பற்ற சுத்தான்ம நிலை. தெய்வ சேதனத்தில் (சிற்சக்தி) அல்லது அருளுணர்வில் வாழ்வதே சாகா நிலை. அத்தூய நிலை யடைந்தால், உடலும் பொன் னொளிரும். "மாசற்ற கொள்கை மனத்திலடைந்தக் கால் ஈசனைக் காட்டும் உடம்பு." தெய்வத் திருவரு ளுக்கு மருட்போதம் தற்போதம் சார்போதமான ஆணவ வாழ்வை ஊறுக்கவேண்டும். இறைவன் நம்மைக் கருவியாகக் கொண்டு தன்னிச்சையை நடத் தவே, நாம் அவனுடன் அடங்கி இணை பிரியாத அருட் கலப்பில் இருத்தல்வேண்டும். எல்லாம் அவன் மயம், அவன் செயல், அவனருள் வடிவம்; அவன் சாதி மதங் கடந்த பொதுநடத் தந்தை. எல்லா உயிர் களும் அவன் திருமேனி என்னும் சமரச நோக்கம் இன்றியமையாதது.

இறந்தவரை யெடுத்திடும்போ தரற்றுகின்றீர் உலகீர்
 இறவாத பெருவரநீர் ஏன்அடைய மாட்டீர்?
மறந்திருந்தீர் பிணிமூப்பிற் சம்மதமோ நுமக்கு?
 மறந்துமிதை நினைக்கினல்லோர் மனநடுங்குங் கண்டீர்
சிறந்திடுசன் மார்க்கமொன்றே பிணிமூப்பு மரணஞ்
 சேராமற் றவிர்த்திடுங்காண் தெரிந்துவம்மி னிங்கே
பிறந்தபிறப் பிதிற்றனே நித்தியமெய் வாழ்வு
 பெற்றிடலாம் பேரின்ப முற்றிடலாம் விரைந்தே.

---

## ௯௧. ஆண்டவனிடமே நாட்டம்

ஆன்ம விசாரத்தால் பச்சைத் திரையாகிய இராகாதிகளை விலக்குங்கள்! ஆண்டவனை வழுத்தி இறைஞ்சி நினைத்தலால் பிறக்கும் அன்புக்கனல் ஆணவத்திரை யகற்றி அருளொளி துலக்கும். மலை காடுகளில் தவஞ் செய்வதினும் இது நலம். விசாரம் என்பது துக்க நிவர்த்தி. வேதாகம புராண இதிகாசம் எதிலும் இலட்சியம் வைக்கவேண்டா! சைவம் வைணவம் வேதாந்தம் சித்தாந்தம் முதலிய மதத்தும் நாட்டம் வேண்டா! ஆண்டவனிடமே நாட்ட மூன்றிச் செயலனைத்தும் அருளொளியாற் காண்க! கருணையுஞ் சிவமுமே பொருளெனக் காணும் காட்சியும் பெறுக! வேறு சிறு நெறி வேண்டா. ஒருமை யிருந்தால் அருள் வரும். என்னைப்போல நீங்களும் ஒருமையுடன் இருங்கள்! சமய வாதிகளை நம்பவேண்டா!

தெய்வத்தைத் தெரிந்துகொள்ளாது இவ்வுலகத்தார் என்னைத் தெய்வமெனச் சுற்றுகின்றார்கள்! ஐயோ நம் சகோதரர்கள் தெய்வத்தைத் தெரிந்து கொள்ளாததனாலல்லவா நம்மைச் சுற்றுகிறார்கள் என்று நான் உள்ளும் புறமும் பரிதாபப்பட்டுக் கொண்டே யிருந்தேன், இருக்கின்றேன், இருப்பேன். அனுபவித்தாலல்லாது தெய்வத்திடம் பிரிய மிருக்காது. பிரபஞ்ச போகத்தின்கண் அலட்சியம் தோன்றினால் நிராசை யுண்டாகும். நாம் அடையவேண்

டியது ஆன்மலாபமான சிவானுபவமே. சுவர்க்க நரக விசாரம் வேண்டா. "அருட்பெருஞ் சோதி தனிப்பெருங் கருணை!" யெனும் மந்திரம் ஆண்டவன் அளித்தது. அதை அருணெறி பற்றிச் சாதனம் செய்க!

---

## ௬௨. சன்மார்க்கக் கோடி

நமது சன்மார்க்கக் கொடியின் பொருளென்ன? நமது நாபிமுதல் புருவமத்தி ஈறாக ஒரு நாடி யிருக்கின்றது. அந்த நாடி நுனியில் புருவ மத்தியில் ஓர் சவ்வு தொங்குகின்றது. அதன் அடிப்புறம் வெண்மை, மேற்புறம் மஞ்சள். அச்சவ்வின் கீழ் ஓர் நரம்பு ஏறுவதும், இறங்குவதும் அனுபவத்தால் விளங்கும். இவ்வடையாளமே நமது கொடி. அகமாகிய ஆன்மப் பிரகாசமே ஞானசபை. அந்தப் பிரகாசத்துக்குள் இருக்கும் பிரகாசம் கடவுள். அந்த உள்ளொளியின் அசைவே நடனம்; இதுவே ஞானுகாச நடனம்! அசைவுற்றதே நடராஜரென்றும் ஆனந்த நடனமென்றும் சொல்லுகின்றது. அருளே அவனே யடையும் நெறி. இவ்வருள் எல்லா உயிர்களிடமும் அன்பு வைப்பதால் எய்தும். பிற உயிர் துன்புறாது நடத்தலே ஜீவகாருண்யம்.

---

## ௩௬. உடலைப் பேணும் முறை

நம்மை நஷ்டஞ் செய்யும் ஆகாரம், மைதுனம், நித்திரை, பயம் இவற்றில் கவனமாயிருத்தல் வேண்டும். இம்மானிட உடலே முத்திக்கேற்றதனால் இவற்றின்பால் கவனமாயிருக்க வேண்டும். இந்நியமத்தைப் போற்றுக:

சூரியோதயத்திற்கு 5 நாழிகைக்கு முன் நித்திரை நீங்கி எழுந்து, நீறு பூசிச் சிறிது தியானித்தல். பின்பு சற்றே மௌனமாக வெளியிலுலவி மலங் கழித்தல். மலங் கழிக்கும்போது வலக் கையால் இடப் பக்கம் அடி வயிற்றைப் பிடித்தல். சலங் கழிக்கையில் இடக் கையால் வலப் பக்கம் அடி வயிற்றைப் பிடித்திருத்தல். மலம் தடைப்பட்டால் இடப் பக்கம் சற்றே படுத்துப் பிராணவாயுவை வலத்தே வரும்படி செய்க!

பிறகு செவி, கண், மூக்கு, வாய், தொப்புளி லுள்ள அழுக்குகளை வெந்நீரால் துடைத்தல்; அதன் பின் வேலங்குச்சி, ஆலம்விழுது, இவை கொண்டு பல் விளக்குதல்; பின் கரிசலாங்கண்ணித் தூள் கொண்டு உள்ளே சிறிது சாரம் போகும்படி பல்லில் தேய்த்து வாய் அலம்பின பின், பொற்றலைக் கையாந் தகரையிலை அல்லது கரிசலாங்கண்ணியிலை ஒரு பங்கு, தூதுளையிலை, முசுமுசுக்கையிலை கால் பங்கு, சீரகம் கால் பங்கு இவற்றைச் சூரணித்து—அதில் ஒரு வரா

கன் எடை நன்னீர் சேர்த்து, அதனுடன் ஒரு சேர் பசுவின் பால் கலந்து, நீர் வற்றக் காய்ச்சி நாட்டுச் சர்க்கரை கலந்து சாப்பிட வேண்டும். காலை வேறு உணவு கூடாது. வில்வம், கடுக்காய், அறுகம்வேர்—இவையும் உண்ணலாம்.

இளம் வெந்நீரில் குளித்துச் சிவ சிந்தனையுடன் சிறிதிருந்து, பசி கண்டால் உணவு தரல்வேண்டும். முன் புசித்தது செரித்த பின்பே அற்றது போற்றித் தராசுமுனைபோல அளவறிந்து உண்ணவேண்டும். உணவில் உப்பு குறைவாகவே சேர்த்தல் வேண்டும், பச்சரிசி, பசும்பால், பசுநெய், முருங்கை, கத்தரி, புடல், கொத்தவரைக்காய், பேயன் வாழை, புளியாரை, முள்ளி, தூதுளை, பொன்னாங்காணி, கீரை, மிளகு, ஓமம், வெந்தயம், துவரம்பருப்பு முதலியவை உணவுப் பொருளாகக் கொள்ளலாம். பெருங்காயம், வெங்காயம், வெள்ளைப்பூண்டு இவற்றைத் தள்ளுக! உப்பு புளி மிளகாய் முதலியவை மிகச் சிறிதளவே சேர்க்க வேண்டும். மதியம் உண்டபின் இளஞ் சூடுள்ள வெந்நீரைத் தாகத்திற்குக் குடித்தல் வேண்டும். உணவு பாதி, உறக்கம் அரைக்கால், மைதுனம் வீசம், பயம் பூச்சியம் ஆகப் பெறுதல் வேண்டும்.

பகல் உண்டவுடன் உறக்கம் வராது சற்று இளைப்பாறுக! பிறகு மதியந் தொடங்கி 25 நாழிகை மட்டும் மெல்ல சாத்வீக விவகாரத்திருத்தல், மெல்லெனப் பேசல், 5 நாழிகை ஓரிடத்திருந்து கடவுளை நினைத்தல், சாயங்காலம் அசையாதிருந்து தியானித்

தல்; இரவில் பகல் உணவிற்கும் பாதி அளவே உண்ணல்.

இரவில் மனதை அடக்கித் தியானித்தல், இடப் புறம் படுத்தல்; ஒரு நாழிகை மனத்தைத் தேக சம்பந் தத்தில் வையாது, பின் அறிவு விகற்பியாமல், சூடு தோன்றுமல், இடதுபுறச் சாய்வாக புத்திரனைக் குறித்த காலத்தன்றி மற்றக் காலத்தில் சுக்கிலம் வெளியேறுமல் (பிராண வாயுவை உள்ளேயும் வாங் காது வெளியேயும் விடாது நடுவில் உலாவச் செய் வதே இதற்கு உபாயம்) ஒரு முறை தேக சம்பந்தம் செய்து உடனே தேக சுத்தியுடன் சிவத்தியானத் திருக்கவேண்டும். 4 தினத்திற் கொருதரம் செய்தல் அதமம், 8 தினத்திற்கு ஒரு முறை மத்திமம், 15 தினத்திற்கு ஒரு தரம் உத்தமம். அதன் மேற்படில் சுக்கிலம் ஆபாசப்பட்டுத் தானே கழியும். துன் மார்க்கப் பழக்கம் செய்யக்கூடாது. இரவில் சொப் பனம் வராது மெதுவாகவே நித்திரை செய்து விழித் துக் கொள்ளவேண்டும்.

அச்சம் கூடாது. எப்போதும் மகிழ்வுடன் இருக்கவேண்டும். கடுஞ்சொல், உரத்துப் பேசல், ஓடி நடத்தல், வழக்கிடல், சண்டை இவை கூடாது. சிவ சிந்தனையுடனேயே எந்த வேலையும் செய்ய வேண்டும். புருவ மத்தியில் நமது ஆன்ம ஞானமென்ற கற்பூரத் தில் கடவுள் அருள்விளக்கு எரிவதாகப் பாவித்துப் பழகிக் கடவுளிடம் உண்மையன்பும் உயிரிரக்கமும் கொண்டு ஓங்கார பஞ்சாட்சரி அல்லது சிவ பஞ்சாட்

சரத்தை உச்சரிக்கவேண்டும். சிவ என்பது அநாதி யாய் மலமில்லாத சர்வ வல்லமையுள்ளபொருள்.

இது தவிர, ஆறு மாதத்திற் கொருமுறை வெள் ளைக் காக்காட்டான் முதலியவற்றால் விரேசனம் வாங்கிக்கொள்ளல், பருக்காரை முதலியவற்றால் நாலு மாதத்திற்கு ஒருதரம் வமனம் செய்தல், முள்ளி முதலியவற்றால் வருஷத்திற்கு ஒருதரம் நசியஞ் செய் தல், நாலு நாளைக்கு ஒருதரம் அத்தி முதலியவற்றால் செய்தமையைக் கண்ணுக்கு அஞ்சனந் தீட்டல், நாலு நாள் அல்லது வாரம் ஒரு முறை முலைப்பால் பொன் னாங்காணி கூட்டித் தைலம் இட்டுக்கொள்ளல் முதலி யன குறிக்கத்தக்கன.

உடம்புவரு வகையறியீர் உயிர்வகையை யறியீர்;
உடல்பழக்க வுண்டுநிதம் உறங்குதற்கே யறிவீர்;
மடம்புதுபேய் மனத்தாலே மயங்குகின்றீர்; மனத்தை
வசப்படுத்தீர்; வசப்படுத்தும் வழிதுறைகற் றறியீர்;
இடம்பெறுபோய் வாழ்க்கையிலே யின்பதுன்பமடுத்தே
யெண்ணியெண்ணி யிளைக்கின்றீர் ஏழையுல கீரே!
நடம்புரியென் தனித்தந்தை வருகின்ற தருணம்
நண்ணியது நண்ணுமினோ புண்ணியஞ்சார் வீரே!

## ௩௪. தீர்க்க தரிசனம்

இவ்வாறாக உடற்பாதுகாப்புமுதல் உயர்ந்த அருட்கலப்புமட்டும் உள்ள ஒவ்வோர் அணுவையும் அளந்து அருட்பாவாகக் கொட்டித் தம் ஆர்வத்தை வற்றாக் கடல்மடையாகத் திறந்தார் வள்ளலார். அக்காலத்தில் அன்பர் சிலர் தவிர ஏனையோர் அதனை அறியவில்லை. வள்ளலார் ஒரு நூற்றாண்டிற்குப் பின்னே நடக்கவேண்டியதை முன்பே சொன்னார். இவர் சமரசம் பலருக்கு அருவருப்பா யிருந்தது. பழைய வாசனையின் தடிப்பும் ஆணவ மலமும் இந்த நறுமணப் பூந்தென்றலை நுகரவொட்டாது தடுத்தன.

ஆயினும், பெருந்திரளான கூட்டம் எப்போதும் அவரைச் சூழ்ந்திருக்கும். அற்புதச் சித்தர், அருட்பொழிவாளர், கனி தமிழ்வள்ளல், கசிந்துருகன்பர், அருணெறிப் பெருமான், உயிரிரக்கமே உயிரெனவுடையார் என்று மாந்தர் குழுமினரே யன்றி ஆன்மநேய ஒருமைப்பாடு, சுத்த சமரச சன்மார்க்கம், அருட்பெருஞ்சோதி முதலிய பதங்கள் அவர்களுக்குப் புதியனவாகவே யிருந்தன. ஆனால், எல்லாம் அறிந்த வள்ளலார், தெய்வ சற்குருமணி தமது எண்ணத்தை நிறைவேற்றுவா னென்பதை முற்றும் உணர்ந்தார்.

"என் சொற்களை நீவிர் செவி மடுத்திலீர். மகாத்மாக்கள் அந்நிய நாட்டினின்று வந்து அவை

களை ஏற்றுப் போற்றுவர். இனிப் பத்து ஆண்டிற்குள் கலி புருஷன் செல்வாக்கு அடங்கிவிடும். புலாற் பழக்கம் நாளாவட்டத்தில் நின்றுவிடும். சாதிகுல சமய வேறுபாடுகள் ஒழிந்து, இந்தியாவில் சகோதர தர்மம் (சர்வ சமரச சன்மார்க்கம்) நிலைபெறும். அகிலமாம் அன்பே உண்மைக் கடவுள். அதுவே உலகில் பூரண சமாதானமும் சமரசமும் நிலைநிறுத்த வல்லது. தம்முள் இலகும் கடவுட் சக்தியாம் அருட் சோதியை மனிதர் அன்பால் அறிந்ததும், இயற்கைச் சக்தியை மாற்றவல்ல அற்புத வல்லமை பெறுவர். இச் சமரச சன்மார்க்க சங்கத்தில் அங்கம் வகிக்க நீங்கள் அருகரல்லீர். இச் சங்கத்தின் உண்மை அங்கத்தினர் வடக்கே வெகு தூரத்தினின்று வருகிறார்கள்.

நீங்கள் நான் சொல்வதைக் கேட்பதில்லை. என் போதனைகளின் கருத்துப்படி நடக்கவுமில்லை. நான் சொல்வதைக் கொள்வதில்லையென்று திட்டப் படுத்திக் கொண்டிருக்கிறீர்கள் போலும்! என்றுலும் காலம் நெருங்கிவிட்டது. ருஷ்யா, அமெரிக்காவினின்றும் வடக்கிருந்தும் இதர நாடுகளினின்றும் அறிவாளிகள் இந்தியாவிற்கு வந்து இதே அகில சகோதர ஒற்றுமை, ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமையைப் பிரசங்கிப்பார்கள். நான் இப்போது வீணில் சொல்லும் உண்மைகளை அப்போது தெரிந்து மதித்து நடப்பீர்கள். வடக்கே வெகு தூரத்தில் வசிக்கும் அம்பல சகோதரர் இந்தியாவில் அநேக அற்புதங்களை நிகழ்த்தி நமது தேசத்திற்கு அளவற்ற நன்மை

செய்வதைச் சீக்கிரம் காண்பீர்கள்" என்று வள்ளற் குயில் இறுதி நாட்களில் பாடியது.

இந்தத் தீர்க்கதரிசனத்தின்படியே 1875-ல் இந்தியாவில் சகோதரத்வத்தின் பெயரால் ருஷ்ய நாட்டுப் பிளாவட்ஸ்கி அம்மையும், அமெரிக்க நாட்டு ஆல்காட்டும் பிரம்மஞான சபை ஏற்படுத்தினர். இம்மகானின் வரலாற்றையும், தீர்க்கதரிசனத்தையும் அறிந்த பிளாவட்ஸ்கி அம்மையார் 1882-ல் (Hints on Esoteric Theosophy யில்) எழுதியதன் சாரமாவது:—

"தியாசாபிகல் சபை ஆரம்பிக்க எங்களுக்குக் கட்டளையிட்ட மஹாத்மாக்களுள் யோகி இராமலிங்கம் நிச்சயமாகவே சம்பந்தப்பட்டிருக்கிறார் என ஊகிக்க வல்லது. 1873-ம் ஆண்டு பாரிசுக்குப் போக உத்தரவு கிடைத்தது. ஜூனில் அமெரிக்கா ஐக்கிய நாட்டுக்குப் போகக் கட்டளை பிறக்கவே, ஜூலையில் சென்றேன். இச்சமயமே இராமலிங்கம் இனி வரும் சம்பவங்களைச் சொல்லிக்கொண்டிருந்தார். 1875-ம் வருஷம் நவம்பர் மாதம் பிரம்மஞான சபை ஏற்பட்டது. 1878-ம் வருஷத்திற்குப் பின்பே இந்திய நண்பருக்குத் தெரிவித்து, 1879-ம் வருஷம் பிப்ரவரியில் பம்பாய்க்குக் காரியாலயம் மாறியது. பிறகு அடையாற்றிற்கு வந்தது." ஆனால், வள்ளலார் குறித்த ஆன்ம நேயம் தமிழ் நாட்டில் இன்னும் மௌனமாக யோக சக்தியால் வளர்ந்துகொண்டிருக்கிறது.

---

## ௩௫. திருவுரு மறைதல்

வள்ளற் பெருமான் ஐம்பது ஆண்டுகளும் ஐந்து திங்களும் தமிழுலகில் அருட் சோதியாக விளங்கினர்; அடிக்கடி தாம் மறையப் போவதாகச் சொல்லிவந்தார்; இறுதிக்காலத்தில் அன்பர்க்கு அரிய நெறியும் ஆறுதலும் புகட்டிவந்தார். ஆன்ம நேயத்தைப்பற்றி விரிவுரை பொழிந்தார்; கடைசி மூன்று மாதம், 1874-ல் மோனம் வகித்தார்; 1874 ஜனவரி முடிவில் பேசத் தொடங்கி அரிய உபதேசங்கள் செய்தார்; பிறகு சித்திவளாகத்தில் தமது சிறு குடிலில் உள்முகப் பட்டு அன்பர்க்கு அருளும் அன்பும் ஆசியும் ஈந்து,

> சேத்தாரை யெல்லாந் திரும்ப எழுப்புதலிங்
> கேத்தால் முடியுமெனி லெம்மவரே—சித்தாம்
> அருட்பெருஞ் சோதி யதனுன் முடியுந்
> தெருட்பெருஞ் சத்திய மீதே!

என்று அறிவித்தார்; சித்தீசுரர் இரண்டரைக் கடிகை யில் புறப்படுவாரென்று அருளினர்; காலம் தமது உண்மையை அறிய இன்னும் கனியவில்லை யென்று அறிந்தார்.

> பிச்சுலக மேச்சப் பிதற்றுகின்ற பேதையனேன்
> இச்சையெலா மெய்த விசைத்தருளிச் செய்தனையே;
> அச்சமெலாந் தீர்ந்தே னருளமுத முண்கின்றேன்;
> நிச்சலும்பே ரானந்த நித்திரைசெய் கின்றேனே.

என்று இறுதியாய் அருளி, ஆனந்தாதீதத் திருந்து படுக்கையில் சாய்ந்து கொண்டார்; தமது உரு எவ

ருக்கும் புலப்படாதிருந்து சில காலத்திற்குப் பின் பிரணவ தேகியாய் ஞானசம்பந்த குருத்வ நிலை பெற்று உலகெங்கும் சித்துக்கள் புரியும் குறிப் புணர்த்தித் தம்மை முற்றும் அறிவாக்கி ஒளியாக்கி அருவாக்கிவிட்டார். முன்பே உத்தரவுப்படி கதவு கள் மூடப்பட்டன. அறையிற் காற்றுப்போவதற் கும் இடமில்லை. சித்தி வளாகத்தைச் சுற்றி அன்ப ரும் அதிகாரிகளும் சூழ்ந்திருந்தனர். பின்பு கதவைத் திறக்கவே 'திறந்தால் வெறுமைதான் இருக்கும்' என்று வள்ளலார் சொன்னவாறே வெறும் வெளியா யிருந்தது. அங்கே ஒரு நித்திய விளக்கு இன்று எரிகி றது. அதுவே அந்த அருட்சோதி வள்ளலை நினைப் பூட்டுகிறது. ஆனால் வள்ளலார் சக்தி உலகெங்கும் நிறைந்துள்ளது! சொல்ல வேண்டுமா? இன்று சம ரச சன்மார்க்க வேகம் எங்கும் பரவி எல்லார் மன தையும் ஈர்த்துள்ளதை யாரே அறியார்? ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமையைத் தமது அருள் வல்லபத் தால் உலகெல்லாம் கொண்டு செலுத்தும் சற்குருமணி வாழ்க!

அருட் பெருஞ் சோதி! தனிப் பெருங் கருணை!

---

## ௩௩. அருட்பா விளக்கம்

[இது அன்பர் வேண்டுகோளுக்கிணங்கி எழுதப் பெற்றது; வடலூர் சத்திய ஞான சபையிலும், தர்ம சாலையிலும் அன்பரால் படிக்கப் பெற்றது.]

அருளான்ம நேயர்காள்!

அறுபது ஆண்டுகளுக்கு முன்பு இவ்வாறு இதே சத்திய ஞான சபையில் (உண்மையறிவு விளக்கமன்றில்), நமது தமிழணங்கு பெற்ற தவப்பயனாய்வந்த அருட்சோதிக் குயில் அகவியது. அதே மன்றில் நாம் இன்று ஒன்று சேர்ந்துள்ளோம். அதே அருட்கனிவாய் மலர்ந்த மணிவாக்கு இன்று நம்மைச் சுற்றி முழங்குகிறது.

ஆனால் குயில் எங்கே? எந்த இளவேனிற் சோலையில் உலாவுகின்றது? "நிச்சலும் பேரானந்த நித்திரை செய்கின்றேனே" என்று மறைந்த அந்த அருட்குயில் இன்று இங்கும் எங்கும் இருக்கிறது. நம் அருள் வள்ளலார் திருவுருவுடன் மறைந்ததை நம்பாதாரும் உள்ளனர். அப்படியிருக்க அவர் இங்கும் எங்கும் இருக்கிறாரென்பது யாங்ஙனம்?

இக்கூற்றுப் பொய்யன்று. காற்று, புவி, ககனம், புனல், கதிர் ஆகியவற்றாலும், கூற்றாலும், பிணியாலும், கொலைக் கருவிகளாலும், மற்றெதனாலும் எஞ்ஞான்றும் அழியாத ஓர் உடலைத் திருவருட் சோதி

யப்பன் அன்றே தன் அருமைப் பிள்ளைக்கு அளித்து விட்டான். அதுவே சுத்தப் பிரணவஞான வுடல்; ஒளி யுடல்; நிழலில்லாவுடல். அவர் உடலை ஒளிப்படக் கருவியில் எடுக்க முடியாது போனதை அன்பர் அறி வர். அந்த ஞானவுடலுடன் வள்ளலார் இதோ! இன்று நம்மிடைப் போந்துளார். விழியிருப்பவர்கள் காணுங்கள்!

அன்பர்களே, உள்ளத்தைத் தொட்டுப் பாருங் கள்! உள்ளம் அன்பாகிய இளவேனிற் சோலை; அதில் அருட் குயில் அகவுகின்றது. அன்று ஒருடல் கொண்டு வள்ளலார் உலாவினர். இன்று நம் வள்ள லார் இலட்சக்கணக்கான அன்பருளத்தில் அருள் வடிவாக உலாவுகின்றார். இதோ இந்த அருட்பா; பார்த்தாலும், நினைத்தாலும், உணர்ந்தாலும், தொட் டாலும், கற்றாலும், கேட்டாலும் இத்தனைக்கும் தித்திக்கும் திருவருட் கற்பகக்கனி. இவ் வமுதக் கனிச் சுவை நிறைந்த உள்ளமெல்லாம் வள்ளற்குயில் உலவும் வசந்தசோலையே. வள்ளலார் தெய்வப் பெருமையை, ஆறுமுகனே ஒருமுகங்கொண்டு வந்த அந்த அற்புத அவதாரத் திருவை, அறிவதற்கு இவ் வருட்பா வொன்றே போதாதா?

அன்பர்காள்! இதுவே வள்ளலார்; இதுவே அவருடைய சாகாவுடம்பு. இத்திருவருள் வேதம் பிரணவசரீரமுள்ளது; இதுவே சப்த ப்ரஹ்மம்; இதுவே ஞானவுடல். இதனினும் அறிவுக்கடல் வேறு எங்கேயாவது கண்டதுண்டா? கேட்டதுண்டா?

அன்பர்களே! சீக்கியரின் வீரக்குருமணியான குருகோவிந்த சிம்ஹன், தனது உடல், பொருள், ஆவி, மக்கள் அனைத்தையும் தர்மத்திற்காகத் தியாகம் செய்து, தன்னையும் இறுதியில் அறப்பலி யீந்தான். அப்போது சீடர்கள், "குருவே தங்கட்குப் பிறகு யாரை நாங்கள் குருவெனத் தொழுவோம்?" என்று ஆவலாக வினவினர். தவப் பெருமை மிகுந்த குரு, "எங்கெங்கு நமது ஸத்திய வேத நூல் (கிரந்த சாஹெபு) முழங்குகிறதோ, எங்கெங்கு ஐந்து அன்பர் சேர்ந்து அருட்கலப்பிலிருக்கின்றனரோ, அங்கெல்லாம் நானிருக்கிறேன்." என்று அருளிச் சென்றார். கண்ணனும் கீதையில், "எங்கு இக்கீதை அன்பால் ஓதப்படுகிறதோ அங்கு யானுள்ளேன், அங்கு திரு விளங்கும்" என்றார். அதுபோலவே, அன்பர்காள்! எங்கு அருட்பா ஓதப்படுகின்றதோ, எங்கு அன்பர் அருள் வழி நிற்கின்றனரோ, அங்கெல்லாம் அருளப்பன் உள்ளான், உள்ளான். வருந்தருணப் பாடல்கள் எங்கு முழங்குகின்றனவோ, அங்கே அருளப்பன் வருவான், அருள் விளையாடுவான்.

அன்பர்களே! இந்த அற்புதமான அருட்பாவைக் கேட்டவுடனே ஓர் அருளெழுச்சியும், பேரின்பச்சிலிர்ப்பும் உண்டாகாத கல்லுமுண்டோ? இதைப் புனிதமாக இனிது ஓதுமிடங்களிலுள்ள கல்லும், புல்லும், இரும்பும், தூணுங்கூட உள்ள முருகிப் புத்துணர்வும், புதுப்பொலிவும் எய்தும். இந்த நிகரற்ற அருட்கனிவாக்கின் அற்புதம் இனி வரவரத் தெரியும்.

## அருள் வேதம்

அன்பர்காள்! உலகை வளர்ப்பது அருமறை. அருமறையென்றால் வடமொழி வேதமே யல்ல; நிறை அறிஞரின் அருள்மொழியே வேதம். அது என்றுமுள்ள கடவுளுண்மை; தம்மை யறிந்த புலவரின் தூயவுள்ளத்தில் ஓங்காரமாக எழுந்து முரலும் அருள் வீணை. உபநிடத முனிவர், சிவனடியார்கள் மாலடியார்கள், புத்தர், ஏசுநாதர், முகம்மதுநபி முதலானோர் அருள் வாக்குக்களைக் கொண்டு தனித்தனிச் சமயங்களும், கலைகளும், நடையுடைகளும், உலகில் பலவிதமாக உலவுகின்றன. இராமலிங்கப் பெருமான் தெற்கே அருட்கொடி பிடித்தகாலத்திலேயே, வடக்கே தட்சிணேசுவரம் காளிகோயிலில் வேதாந்த வுண்மைகளை யுபதேசித்து வந்த இராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உரையும், சரிதையும் இன்று உலகளாவி யுள்ளன. அவர் பெயரால் எத்தனையோ நூல்களும் நிலயங்களும், மடங்களும் தோன்றியுள்ளன. இவ்வாறு நிறையறிஞரின் அருள்மொழிக்கு உலகையே ஆக்கவல்ல தனித்திறன் உண்டு. இதுகாறும் உலகிற்போந்த புனித நூல்களையெல்லாம் தம்முள்ளடக்கி, சாதி சமய, சாத்திர கோத்திரச் சண்டைகளுக்கு எள்ளளவு மிடமின்றி, எம்மதமும் சம்மதமெனப் போற்றத்தக்க அற்புதத் திருவாக்குகளைப் பொழிந்த நமது அருட்காளமேகத்தை என்னென்று வழுத்துவோம்!

"இச்சாதிச் சமயவிகற் பங்களேல்லாந் தவிர்ந்தே
எவ்வுலதும் சன்மார்க்கப் பொதுவடைதல் வேண்டும்."

என்ற அவரது வேண்டுகோளைப் பொது நிலையில் யாவருள்ளும் நடம்புரியும் அருட்சோதியப்பனே நிறைவேற்றினன். அன்பர்களே! இவ்வருட்பா ஆண்டவன் வாக்கு; அதுவே சாகாக் கலை; உலகில் விரிந்து பரந்த சமய நூல்களிடையே, சமயங்கடந்த பொது நெறியை, அருட்பெருஞ் சோதி நெறியை, மற்ற எந்நூலுக்கும் இல்லாத அமுதச் சுவையும் ஆர்வமும், அன்பும், தெய்வானுபூதியும் கொண்டு, வள்ளலார் வாக்கினின்று நடராஜப் பெருமானே பொழிந்த இவ்வருள் வேதத்தை, ஓதாத தமிழன் இருக்கலாமா? அவ்வருள் வேதம் கல்லையும் கருணையாற் கரைக்கும், மாந்தருள்ளத்தை அருட்பொன்னுக உருக்கும். இதை ஓதி வழிபடாத இல்லம் தமிழகத்தில் இனி இருக்கலாகாது.

"நானுரைக்தும் வார்த்தையெலாம் நாயகன் சொல்
[வார்த்தையன்றி,
நானுரைக்தும் வார்த்தையன்று நாட்டீர்நான்—
[ஏனுரைப்பேன்?
நானூர் எனக்கேனவோர் ஞானவுணர் வேதுசிவம்
ஊனுடி நில்லா வழி"

என்ற அருள் வாக்கே அருட்பாவின் கடவுட்பெருமைக்கு அத்தாட்சி. அன்பர்களே! இதற்குமுன் இத்தகைய நூல் உலகிற் போந்ததில்லை; இனியும் இத்தகைய அருள்வாக்கு உதிக்குமா என்பது சந்தேகம். உதிக்குமானல் அது நம் பெருமானர் வாக்காகத் தானிருக்கவேண்டும். எத்தகைய நிலையினின்று இவ் வாக்கெழுந்தது?

"தந்தேகம் எனக்களித்தார் தம்மருளும் பொருளும்
தம்மையுமிங் கெனக்களித்தார் எம்மையினும் பிரியார்
எந்தேக மதிற்புகுந்தார் என்னுளத்தே யிருந்தார்
என்னுடலிற் கலந்தநடத் திறைவர்"

என்றபடி உடல், உயிர், மனம், உள்ளம், உணர்வு, அறிவு, இன்பம், உண்மை, அனைத்திலும் கடவுட் கலப்புடன், சச்சிதானந்த மயமாகி, யோகாந்தம், போதாந்தம், கலாந்தம், நாதாந்தம், வேதாந்தம், சித்தாந்தம் ஆகிய ஆறந்தங்களுங் கடந்த ஒரு சோதிமலையினின்றன்றோ இவ்வருட்கங்கை அமுதூர்ந்து அடங்காத அன்பின்பவெள்ளமாக நம்மைக் காக்கப் பெருகி வந்துள்ளது! முக்குண தொந்தவிகாரங்களில் நடைப்பிணமாகத்திரியும் மாந்தரைத் தெள்ளிய அருட்சோதி பாய்ச்சி உய்விக்கவன்றோ இக்கங்கை எழுந்தது! இந்த அருட்பா வொன்றைப் படித்தால் ஆயுளுக்கும் போதும்; எல்லாம் இதில் அடக்கம்.

அருட்பாக்கள் அனுபவத்தினின்று மின்னிப் பறந்த பொன்மணிகள். அருட்பா எல்லார்க்கும் பொது மறை. உங்களுக்கு வேதமும் உபநிடதமும் வேண்டுமா? மகாதேவ மாலையையும் அருட்பெருஞ் சோதியகவலையும் ஊன்றிப் படியுங்கள்! வேதங் காணுத விழுப்பொருளை இத்தமிழ்த் திருமறையில் உள்ளங்கை நெல்லிக்கனிப்போலக் காண்பீர்கள்!

"தானுகித் தானல்ல தோன்று மில்லாத்
தன்மயனுய், எவ்வேவைக்குந் தலைவனுகி,
வானுகி, வளியனலாய், நீரு மாகி :
மலர்தலைய வுலகாகி, மற்றுமாகித்

தேனாகித் தேனிறுஞ் சுவைய தாகித்
தீஞ்சுவையின் பயனாகித் தேடுகின்ற
நானாகி, என்இறையாய் நின்றோய், நின்னை
நாயடியேன் எவ்வாறு நவிற்று மாறே!"

என்ற ஒரு பாட்டே வேதாந்த சித்தாந்த சாரமாக விளங்குகிறதே!

ஏசுநாதரின் அருண் மொழிகளைப் பிழிந்தெடுத்தால் இரண்டு அமுதச் சொட்டுகள் விழும். ஒன்று உன்னுள்ளே யுள்ள வானரசை அடை; மற்றொன்று தந்தையைப் போலப் பூரணம் பெறு. அன்பர்களே! அந்த வானரசு இன்னதென்று இதுகாறும் யாரும் விளங்கிலர்; விளக்கிலர். தாம் கண்டு, அதில் உறைந்து, அதன் இன்பவூற்றை உலகமாந்தர்க் கெல்லாம் ஈந்த நம் வள்ளலார் பெருமை உரைக் கடங்குமோ? "திருச்சிற்றம்பலத்தில் ஆடும் அமுதே, ஆருயிர்த்துணையே சித்தாந்தப் பொருளே, வேதாந்தப் பயனே, என் உள்ளம் உன்னைப் பணிந்தது. அதில் ஆனந்தப் பழமாகப் பழுத்தாய். என் வடிவை மாற்றினை; என்னுள் உன் முகந் தோற்றினை; பிரிவினை நீக்கினை; உன்னையும் என்னையும் ஒன்றாக்கினை; அகவடிவை நீக்கிச் சுகவடிவந் தந்தனை" என்று அவர் தமது அனுபவத்தைப் பாடும் போது நமதுள்ளம் மாறிப் பிறக்க அவாவுகிறது. தனிப்பொது, பொற்சபை, சிற்சபை, பொதுநிலை என்ற துரிய நிலயத்தை எவ்வளவு அழகாக நம்முன் வள்ளற் பெருமான் சித்திரிக்கிறார்! எல்லார்க்கும் பொதுவில், தானென்றெழுந்த உள்ளமாகிய தகர நிலயத்தில், சுத்தநடம் புரிகின்ற சித்தசிகாமணியின் அரு

ளின்பக் கலப்பினின்றன்றோ இவ்வருட்பாவை வள்ள லார் அள்ளிப் பொழிந்துள்ளார்!

அன்பர்களே! நீதிநெறிகளை விளக்கும் பௌத்த சமண மதம் வேண்டுமா? அருட்பாவைவிட நீதி யுறுத்தும் நூல்களை வேறு கண்டிலேம். நெஞ்சறி வுறுத்தல் ஒன்றுபோதும். பச்சை மரத்தில் ஆணி பாய்ந்தாற்போல நன்னெறி யுணர்வும் உலகாயத வாழ்வின் இழிவும் மனத்தில் பளிச்செனப் பாயும். முகமது நபி நாயகம் அருளிய கடவுளுறுதியும் அடைக் கலமும் வேண்டுமா?

"என்னைவிட மாட்டாய்; நான் உன்னைவிட மாட்டேன்
இருவரு மொன்றாகி யிங்கே இருக்கின்றோம்"

என்ற வாக்குஒன்றே போதும். இராமகிருஷ்ண பரம ஹம்ஸர் சிறு கதைகள் உதாரணங்கள் வாயிலாகக் கூறிய சர்வ மத சமரசவுண்மைகள் வேண்டுமா? அருட்பாவில் ஒவ்வொரு பக்கத்திலும் இனிக்க இலிக்கக் காண்க!

இவையெல்லாம் மிகச் சாதாரண விஷயங்கள். இவையெல்லாம் கடவுளறிவின் அரிச்சுவடிகள். இவற்றிற்கு மேலுள்ள துரிய பிரம்மஞானத்தை அருட்பா அருளுகின்றது. தூல முதல் துரியப் பொருள் முடி மட்டும் எழுந்தோங்கிய அருளறிவுத் திருமலையே அருட்பா. எந்த அறிவை அருட்பா வலி வுறுத்துகின்றது? கேளுங்கள்!—

"துரிய மேற்பா வெளியிலே சுகநடம் புரியும்
பெரியதோர் அருட் சோதியைப் பெறுதலே யெவர்க்கும்
அரிய பெறுமற் றவையெலாம் எளியவே யறிமின்
உரிய இம்மொழி மறைமொழி சத்தியம் உலகீர்!

இந்நிலைக்கு உயர உறுதுணை யென்ன? அதுவே அருள். "அருள்" என்னுந் தமிழ்த் திருமொழிக்கு ஈடு வேறு மொழிகளில் இல்லை. அன்பு, சத்தி, காதல், ஆர்வம், ஒற்றுமை, உயிரிரக்கம், ஈகை முதலிய எல்லா நலங்களும் அடங்கி அவற்றினும் விரிந்த கடவுட் பொருளுடையது அருள். அருளென்பது கடவுள் வல்லமை; கடவுட் சோதியாம். தாக்கற்ற தனி முதல்வன் அந்த அருள் வடிவாகவே உலகில் ஐந் தொழிலும் செய்து அருளாடல் புரிகின்றான். ஆறு வது திருமுறையின் பொருள் இவ்வருளின் விரிவே. ஒவ்வொரு சமயத்திற்கும் மந்திரமுண்டு. சைவத் திற்குப் பஞ்சாட்சரம் போல நமது அருட் சமயத் திற்கு வள்ளலார் மொழிந்த மந்திரமென்ன? அதுவே "அருட் பெருஞ்சோதி" (Supreme Divine Light) என்னும் அஷ்டாட்சரம். உலகில் கண்ணெதிரே விளங்கும் பொருள்களில் தூயது, பெரியது, அழகி யது, இன்றியமையாதது, எல்லாந்தருவது எது? அதுவே ஒளி, சோதி, கதிரவன், சூரியன். இச் சோதிக்கும் சோதியாகி அனைத்திலும் பெரிதான ஆண்டவனின் அருட் சோதியையே வள்ளலார் உள்ளத்தில் நினைந்து நினைந்து உருகச் சொல்லிப் போந்தார்.

இந்த அருளுதயம் வள்ளலாருக்கு எப்போ துண்டாயிற்று என்று சிலர் வினவுவர். பலர் பல படக்கூறுவர். வள்ளலார் ஆண்டவனின் அருட் குழந்தையாகவே அவதரித்தவர். உலகம் பல சாதி சமயச் சச்சரவினால் இரத்தக்களமானது. கிணற்றுத் தவளைபோலத் தத்தம் மதமே பெரிதென மருண்டு சாத் திரங்களெல்லாம் தாறுமாறாக அர்த்தம் செய்யப்பட்டு, மனித வாழ்வு உண்மை நெறி பிசகி, வேற்றுமைக் கந்தலாகிப் போலி மதாசாரங்களில் தட்டழிந்து உழன்றபோது, எம்பெருமான் மனிதரை இருட்சாதி சமயப் படுகுழிகளினின்று எடுத்துச் சுத்த சமரச சன்மார்க்க நெறியில் உயர்த்தவே திருவுளக் கருணை பற்றி எழுந்தருளினர். வடநூல் வேதம் விளங்காது, மறை மறைந்து பண்டிதப் புரட்டுகளால் உருக் குலைந்து போனது. இனி அதைப் பயில்வதில் பய னில்லையென மாந்தர் அலுத்தனர். அச்சமயமே அனைவரும் தெளிவாக அறியக்கூடிய இனிய எளிய தமிழில் வள்ளற்புலவர் அருள் வேதம் விளக்கினர்.

அவதாரப் பெருமை

அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்
திருந்த வுலக ரனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத் தடைவித் திடஅவரும்
இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்
திடுதற் கென்றே யெனையிந்த
யுகத்தே யிறைவன் வருவிக்க
வுற்றேன் அருளைப் பெற்றேனே.

அருட்பா நேயர்களே! இதுவே வள்ளற் பெருமானின் அவதார ரகசியம். இவ்வருட்பணியே வள்ளலார் வாழ்க்கை. வள்ளலார் வேறு, அருட்பா வேறல்ல. அது அவர்; அவர் அது. "இகத்தே பரத்தைப் பெற்று" என்பதை ஆங்கிலத்தில் "to attain Heaven upon this Earth" என்று மொழி பெயர்த்து விட்டால், உலகெலாம் கைதட்டி "ஹாஹா, என்ன வாக்கு!" என்னும். அன்பர்களே! அருட்பாவின் ஒரு வாக்கு போதும் உலகம் உய்தற்கு. அது காட்டும் அருள் வழியே பல சமயத்தார் தேடியும் காணாதது. அந்த அருள் வடிவாகவே வள்ளற் பெருமான் அவதரித்தார்.

இராமைய பிள்ளையின் மலர்க் கரத்தில் இராமலிங்கக் குழந்தை தன் அருளப்பனைக் காந்த விழியால் நோக்கி, நடராஜ சந்நிதியிலிருந்த அன்றே அருள் விதை அவர் திருவுளத்தில் முளைக்கத் தொடங்கியது. அது திருவொற்றியூரில் செடியானது. மீண்டும் சிதம்பரத்தில் கிளை பரந்தது; கருங்குழியில் மலர்ந்தது; வடலூரில் பழுத்து உலகிற்கு அறுசுவையூட்டியது. பிள்ளைச் சிறு விண்ணப்பம், பிள்ளைப் பெரு விண்ணப்பம், இங்கித மாலை, திருவருண் முறையீடு முதலியவற்றில் வள்ளலார் வாழ்வுக் குறிப்புக்கள் பளிச்சிடுகின்றன. அவருடைய உயிரிரக்கம் 84 கோடி ஜீவராசிகளையும் அளாவியது. தம் தலையில் கடித்த பாம்பிற்கு மன்னிப்புக் கொடுத்த பெருமானை என்னென்றுரைப்பது! வாடிய பூவைப் புத்தர் கண்டு இரங்கியதை உலகம் இசை பாடுகிறது.

"வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன் பசியிறு விளைத்தேன்; கன்றுகள் கதறக் கருத்திற் கலங்கினேன்; அதிர் நடை கண்டு நெஞ்சமதிர்ந்தேன். தீ மொழி கேட்டுத் தீயென நொந்தேன். களியரைக் கண்டு கடலள வஞ்சினேன். களவெனக் கேட்டுக் கனலென நொந்தேன். உரத்துப் பேசின் உள்ளம் நடுங்கினேன். ஐயோ வென்று வெதும்புவோர்க் கிரங்கினேன். எளியரை வலியர் அடிப்பதை யேங்கினேன். புலாலுண்போரைக் கண்டு எலும்பிளைத்தேன். பிணப்பறை கேட்டுப் பெரிதும் கலங்கினேன். கொலைஞரைக் கண்டு கொள்ளிபோற் கொதித்தேன்" என்று பிள்ளைப்பெரு விண்ணப்பத்தில் வரும் அருணெறி வாழ்வின் மின் வெட்டுகளைக் காண்மின்! இத்தகைய வாழ்வும் வாக்கும் ஒன்று கூடி விளங்கும்போதுதான் மகான்களின் அற்புதம் வெளியாகின்றது.

## அருள் வாக்கு

கடவுள்வானில் மின்னும் அறிவுமீன்களிடை வள்ளலார் வாழ்வு ஒரு சோதிக் கதிரவன் போல நிலவுகிறது. அச் சோதியில் மற்ற மீன்கள் விழுங்கப்பட்டு நிற்கின்றன. வள்ளலார் தந்தையைக் கண்டார்; சாகா வரம் பெற்றார்; சிந்தை மகிழ்ந்தார். அடி முதல் நுனிமட்டும் ஒவ்வோரணுவும் எம்பெருமான் வாழ்வு அருட்சுவை யுடைத்து. ஓதாதுணர்ந்த முற்றறிவாளரான நம் அருட்பெருமான், கண்ணாடி போன்று மாசற்ற தூய தெளிந்த வுள்ளத்தில் காட்சி

யான அருளுண்மையைச் சொல்லோவியமாக அவ்வப்போது வெளியிட்டு உலகிற் கீந்தார். மணிவாசகரும், ஞானப்பாலருவாயரான ஆளுடைய பிள்ளையாரும், திருத்தணிகை முருகனும், ஒற்றியூர்த் தியாகேசனும், தந்தையான சற்குருமணி தில்லை நடராஜனும் அவர் வாக்கில் விளையாடிய இன்பத்தை எதைக் கொண்டளப்பது! ஆண்டவனிடம் பிள்ளை போலும், காதலி போலும் உறவாடிய அந்த அன்பை எதற்கு உவமிப்பது! "நீ தந்தை; நான் தனயன்; நான் தீயன்; நீ தூயன்; என்னைப் பழக்கி வைப்பது உன் பாரம். நீ என்னைப் பண்புடன் போற்று விட்டால் வழக்குண்டாகும்; நான் ஏழை; நீ வெள்ளிமலையான்; பொன்மலை வில்லன். நீ வள்ளல்; உன்னிடம் வந்தேன். ஒரு வார்த்தைகூடப் பேசாதிருப்பதேன்? எள்ளில் எண்ணெய்போல் எங்கும் நிறைந்தும் என் குறையை அறியாயோ? நீ என்னை அறியாவிட்டாலும், நான் உன்னை யன்றி வேறொருவரையும் அறியேன்" என்று நயமாகவும், துணிந்தும் கடவுளை உறுதியாகப் பற்றிய எம்பிரானுக்கு, ஆண்டவன் கைக்கனி போன்று அருளறிவையும், அருட்சித்தையும் அளித்தான்.

அஞ்சலை நீயொரு சிறிதுமேன் மகனே
    அருட்பெருஞ் சோதியை யளித்தன முனக்கே
துஞ்சிய மாந்தரை யெழுப்புக நலமே;
    சூழ்ந்தசன் மார்க்கத்திற் செலுத்துக சுகமே.
விஞ்சுற மெய்ப்பொருள் மேனிலை தனிலே
    விஞ்சைகள் பலவுள விளக்துக வென்றய்,

தந்தாமேன் றவர்க்கருள் சத்திய முதலே
தனிநட ராஜவென் சற்குரு மணியே!

"என்னைத் தரவே தன்னைத் தந்தான்" என்பதே அருட்சித்தி ரகசியம்.

"என்னுயிரும் என்னுடலும் என்பொருளும் யானே
இசைந்துகொடுத் திடவாங்கி யிட்டதன்பின் மகிழ்ந்தே
தன்னுயிருந் தன்னுடலும் தன்பொருளும் எனக்கே
தந்துகலந் தெனைப்புணர்ந்த தனித்தபெருஞ் சுடரே!"

இதுவே வள்ளற்பெருமானின் அருட்சித்தி விளக்கம்.

## திருவருட் சித்தி

இந்தத் திருவருட் சித்தி என்றும் அழியாது. அந்த அருட் சக்தி அன்று பல அற்புதங்களைப் புரிந்தது; பிறர் விழிகளுக்குப் புலப்படாது மறைந்துலவும் ஆற்றலீந்தது; உலகின் ஆசையாணவப் பேய்களை நடுக்கி யோட்டியது; தீராத நோய்களைத் தீர்த்தது; அன்பர்க்கு அருந்துணை புரிந்தது; புலை கொலைகளை நிறுத்தியது; வறண்ட கோடையில் மழை பொழிவித்தது; நீரால் விளக்கெரித்தது; சிதம்பரத்தை வடலூரில் இலக்கியது; அரவுகடி தீர்த்தது; சுருக்கமாக, ஞானசம்பந்தர் அப்பர் ஏசுநாதர் புத்தர் முதலியோர் அன்று செய்ததாகக் கூறப்படும் அற்புதங்களை இந்தக் காலத்தில் செய்து திருவருட் பெருமையை விளக்கியது. இவையனைத்திலும் அற்புதம் அருட்பா; அந்த அற்புதங்கள் அக்காலத்தோடு சரி; அருட்பாவின் அற்புதம் உலகுள்ளமட்டும் நின்று நிலவும்.

அன்பர்களே! இத்தகைய அற்புத வாக்கு மேனுட்டில் எழுந்திருந்தால், இதற்குள் உலகம் முழுதும் பரவி ஒவ்வொரு மொழியிலும் பொன்னு லும் மாணிக்கத்தாலும் பொறிக்கப் பெற்றிருக்கும். எம்மொழியினும் இனிய இளந்தமிழ் மொழியுடையீர்! அருட்பா உங்களுக்கு அருட்பெருமான் அளித்த விலையில்லா மாணிக்க மலையன்றோ? அக்காலத்தில் திருவருட் குயில் பாழ் வனாந்திரத்தில் பாடி அலுத்து மறைந்தது. இன்று அதனன்பும், ஆர்வமும், ஒவ் வொருவ ருளத்திலும் பதிந்துள்ளன. அருட்பா கேட்காத செவிடனுமுண்டோ? அன்பீர்! அருட்பா, அருள் வேதம். இதை ஒவ்வொரு வீட்டிலும் வணங் குக! ஒவ்வொருவருள்ளத்திலும் அருட்பா முழங்குக! அதன்வழி வாழ்க! அது சாமானியமான கவியின் வாக்கன்று; அல்லது, சாதாரண அறிவாளியின் வாக் கன்று. அஃது ஒப்புயர்வற்ற சுத்த சன்மார்க்க வேதம்.

சித்தக் கடல் கடந்து, அமைதிக் கரை சேர்ந்து, இதயக் கோயில் கண்டு, அருட்கதவு திறந்து, இன்ப அமுதுண்டு, அறிவொளி பெற்று, அனைத்தும் அறிந்து, அழியாமை பெற்று, உடலும் உயிரும் உள மும் பேரின்பச் சிலிர்ப்பெய்த உள்ளபடி உள்ள உண் மைப் பொருளைக் கூடி, அதுவேயாகி எல்லாச் சித்தி யும் பெற்றார் வள்ளலார். அச்சித்தியினின் றுதித்த அற்புதமே அருட்பா. அது சாகாக் கலை; மாந்தரை நித்திய உணர்வில் எழுப்பி, இறவா நிலைதரும் இன்பத் திருவருளாசான்! அந்த அருட்பா, தமிழர் நாவிலூறி, நெஞ்சிலூறி வாழ்வை வளஞ்செய்க!

## அருட் சாதனம்

இந்த அருநிதியைத் தமிழர் உலகெலாம் பரப்ப வேண்டும். கிறிஸ்தவர், புத்தர், இராமகிருஷ்ண சங்கத்தார் செய்வது போன்று இந்த அருட்சமயத்தை உலகளாவச் செய்யத் தமிழிளஞ்சிங்கங்கள் அருட்பெருஞ் சோதி முழக்கத்துட னெழுக! இந்த அருட்பாவை அப்படியே வேறு மொழிகளில் ஆக்குதல் கடினம். சுமார் 100 அருட்பாக்களையும் வள்ளலார் உபதேசங்களையும் "மகாத்மா இராமலிங்கம்" (Mahatma Ramalingam) என்னும் ஆங்கில நூலில் மொழிபெயர்த்துள்ளமை காண்க. இதன் பொருளை விரிவுரைகளாக வள்ளலார் வாழ்வுடன் சேர்த்து ஆங்கிலம், பிரெஞ்சு, ஹிந்தி, குஜராத்தி, வங்காளம் முதலிய மொழிகளில் வெளியிட்டு, இந்தியாவிலும் மேனாட்டிலும், கிழக்கு நாடுகளிலும் அருட்சமயத் தொண்டர் ஆங்காங்குச் சென்று சமரச சன்மார்க்க சங்கம் நிறுவவேண்டும்.

முதலில் 1000 அன்பர்களாவது சாதனஞ் செய்து அருளொளி பெறவேண்டும். இப்போது வள்ளலார் பெயரால் பலி தடுத்தல், புலால் மறுத்தல், சோறு போடுதல், அருட்பா ஓதுதல், ஆகியவை நடைபெறுகின்றன. இவை போதா.

எம்மதத்திற்கும் சம்மதமான பொது நிலைத் தெய்வம் இதயமன்றில் நடமாடுகிறது. அருட்பாவை மந்திரம்போன்று ஓதி, சிந்தித்து, வாழ்விலமைத்து உள்ளத்தைக் கண்ணாடி போன்று மாசறுத்தால்,

அதில் அருட்சோதி இறங்கும். ஒளி காணலாம்; ஓமொலி கேட்கலாம்; அருளாறுபாய்வதை உணரலாம். உள்ளே தியானம் கூடுமட்டும் ஒருமனப் படுதற்குச் சாதனமாக ஒரு கண்ணாடிமுன் பளிச் சென்று ஒரு விளக்கையேற்றிக் கண்ணாடியை மாசற்ற உள்ளமாகவும் விளக்கை அருட்சுடராகவும் தியானம் செய்க! அருள் வாழ்வு வாழ்க! எவ்வுயிரும் பொது வென்றெண்ணி யிரங்குக! பரந்த கருணையை உள்ளே வளர்த்து வருக!

## ஆன்மநேய ஒருமைப்பாடு

சுத்தான்மா ஒன்று; யாவருள்ளும் அது துலங்கும். யாவரும் அதைப் பெறலாம். அதன் சட்டையே பூதவிகாரம். ஒவ்வொன்றிலும் ஆன்மாவைக் கண்டு அன்பு செய்க! செய்யின், வேறு சாதி சமய சாத்திர கோத்திரச் சண்டை வேண்டுவதில்லை. இதுவே ஆன்ம நேய ஒருமைப்பாடு. இந்தச் சுத்தான்ம நிலையே சாகா நிலை. இந்த மாசற்ற ஆன்மக்கலப்பு, உடலையும் பொன்னாக்கும். உள்ளே கலந்தால் உலகிலும் கலக்கலாம். அப்போது உடலும் கடவுளைக் காட்டும். "மாசற்ற கொள்கை மனதில் அடைந்தக்கால், ஈசனைக் காட்டு முடம்பு."

அருளாட்சியாகிய ஆத்மானுபூதியை உள்ளே பெறுவதே ஸ்வராஜ்யம், தன்னாட்சி; உலகவாழ்வை ஆன்ம விரிவாக்குவதே ஸாம்ராஜ்யம்.

அகிலவாழ் வத்தனையும் ஆன்ம விரிவாக
நிகழுவதே யுண்மை நிறைவு.

இதுவே அருட்பாவின் முழுப்பயன். இந்த ஆன்ம நேய ஒருமைப்பாடே உலக ஒற்றுமைக்கு ஆணிவேர். இதுவே சுத்த சமரச சன்மார்க்க விளக்கு. நித்திய மான ஆன்மாவில் அருட் கலப்புடன் வாழ்வதே இற வாமை. இந்த நித்திய சுத்த முத்த சமத்துவ வாழ் விற்கே அருட்பா வழிகாட்டுகிறது. அன்பர்காள்! மீண்டும் மீண்டும் வள்ளற்பெருமான் இதையே வலி யுறுத்துகிருர்.

## தூயபெருமை

ஆ! அவருடைய அன்பும் அடக்கமும், தாழ்மை யும், குழந்தைபோன்ற உள்ளமும் உலகின் அற்புதங் களில் ஒன்று. இவ்வளவு அருட் பெருமை வாய்ந் தும், அருள் வாக்கிருந்தும், அருட் சித்தாடியும் வள்ளலார் உரக்கப் பேசார், கைவீசி நடவார்; கைகுவித்தே நடப்பார்; கூட்டம், ஆட்டம் பாட்டம் விரும்பார்; "சாமி" என்று தம்மை அழைப்பதையும் வெறுப்பார்; தம் உருவெழுதிவைப்பதையும் மறுத் தார். அருட்பாவை வெளியிடக்கூட முதலில் அவர் சம்மதிக்கவில்லை. 'அருட்பிரகாச வள்ளலார்' என்று அதில் தம்மை அன்பர்கள் சிறப்பித்ததைக் கூட மறுத் தார். தமது சுத்த சன்மார்க்க சங்கத்தில் தம்மை யும் ஓர் ஊழியனுகவே யுணர்ந்தார். "சன்மார்க்க சங் கத்திர்! உம்மை அடிவணங்கிக் கேட்டுக்கொள்ளு கிறேன். என்னை உங்களுள் ஒருவனுகவே கொள் விர்! எல்லாம் வல்ல இறைவனையே தொழுவீர்!' சுத்த சிவம் ஒன்றே பொருள். அதையே பணிவீர்! என் னுணை!" என்று வலியுறுத்துகிருர் வள்ளலார். என்?

உலகோர் அடிக்கடி மனிதவணக்கமே செய்து இறைவனை மறக்கிறார்கள். இறைவனருளிற் சிறிது ஒருசிலருள் இறங்கி விளையாடுகிறது; அவர்களை "அவதாரம், அவதாரம்" என்று போற்றிப் பாடி அந்த மனிதர் பெயரால் மதங்களைக் கண்டு, வேறுபாடுகள் உண்டுபண்ணிச் சண்டை போடுகிறார்கள். பொதுநிலைக் கடவுளை அருட்சாதனத்தால் அடையாமல் இருட்சாதி வேற்றுமைகளில் இடர்ப்படுகிறார்கள். இதை உலகம் உணர்க! வள்ளலார் தம்மை அவதாரம் என்று சொல்லிக் கொள்ளவில்லை. "ஐயோ, நம் சகோதரர்கள் தெய்வத்தைத் தெரிந்து கொள்ளாமையினா லன்றோ நம்மைச் சுற்றுகிறார்கள்! என்று நான் உள்ளும் புறமும் பரிதாபப்பட்டுக் கொண்டேயிருந்தேன், இருக்கின்றேன், இருப்பேன். அனுபவித்தாலல்லது தெய்வத்தினிடம் பிரியமிருக்காது. நாம் அடைய வேண்டியது ஆன்ம லாபமான சிவானுபவமே; (சிவம் என்பது எல்லோரும் வேண்டும் பேரின்பப் பொருள்). அருட் பெருஞ்சோதி தனிப் பெருங் கருணையெனும் மந்திரம் ஆண்டவன் அளித்தது. அதை அருணெறி பற்றிச் சாதனம் செய்க!" என்றார் நமது திருவருட் பிரகாசர்.

## அருட்சோதி யோகம்

அருட்சோதி யோகம் இதுவே:—அகமாகிய ஆன்மப்பிரகாசமே ஞானசபை. அந்தப் பிரகாசத்திற் குள்ளிருக்கும் பிரகாசம் கடவுள். அந்த உள்ளொளியின் அசைவு நடனம். இதுவே ஞானகாச நடனம். அருளே அதனையுடையும் நெறி. இவ்வருள் எல்லா

வுயிர்களிடமும் அன்பு வைப்பதால் எய்தும்,'' என்று இவ்வாறெல்லாம் படித்துப் படித்துத் திருவருள் உண்மைகளை வள்ளலார் அள்ளித் தெளித்து உலகெலாம் ஓர் அருட் குலமாய் வாழக்கூடிய பொது நெறியை விளக்கினார். நாள்தோறும் மனிதன் எப்படித் தூயவாழ்வு வாழவேண்டுமென்பதையும் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார்.

சுருக்கமாக, அருட்பா உலகையும் விண்ணையும் தன்னுளடக்கி, அதன்மேலும் ஓங்கி நிற்கும் ஒரு சத்ய தர்ம ஜோதி மலை. அதில் ஆயிரத்தில் ஒரு பங்கு கூட இன்னும் உலகம் அறியவில்லை. அருட்பாவிற்குச் சிலர் உரை எழுதுகின்றனர். அது உரையிலடங்காது. அதன் இனிய எளிய இன்ப நடையை ஓதியோதி, உள்ளே யுணர்ந்து வாழ்விற் பதிக்கவேண்டும். இத்தகைய அருள் விளக்கு உலகெங்கும் விளங்க இனி முயலவேண்டும். தமிழன்பீர்! வள்ளலார் காலத்தில்தான் வடக்கே பரமஹம்ஸரும் உதித்தார். அவர் உரைகளுக்கும், வள்ளலாரின் அருட்பாக்களுக்கும் உள்ள தாரதம்மியத்தை யாரும் அறியலாம். அவருக்கு அங்கு ஒரு விவேகானந்தச் சிங்கமெழுந்தது. இங்குத் தமிழர் அக்காலத்தில் வள்ளலாரை அறியவில்லை.

“ஆன்ம நேய வொருமைப் பாட்டுரிமைச் சகோதரர்களே!(Brothers of the Spiritual Communion) நாம் அருட் பெருஞ்சோதி ஆண்டவரின் ஆணைப்படி, கடையை இந்நாள்வரை விரித்தோம், கொள்வாரில்லை. ஆதலால் இனி இரண்டரை கடிகை நேரம் உங்களு

டைய ஊனக்கண்களுக்குத் தோன்ற மாட்டோம். நீங்கள் இந்தத் தீபத்தினைக் கடவுள் எனக்கொண்டு ஜீவகாருண்ய நெறியால் வழிபட்டுய்யுங்கள். பிறகு அருட் பெருஞ்சோதி ஆண்டவன் வருவான். அப்போது திருவருட் செங்கோலாட்சி நடத்துவோம். சுத்த சிவ சன்மார்க்கம் ஒன்றே இனி எல்லா உலகத்தும் வழங்கும். அது கடவுள் சம்மதம்." இதுதான் வள்ளலாரின் இறுதி மொழிகள்.

அன்பீர்! இவ்வுண்மை இன்று விளங்கி வருகிறது. உலகெங்கும் அருட் பெருமான் சமரச முழக்கம் செய்கிறான். ஆங்காங்குச் சமரசச் சங்கங்கள் தோன்றிக் கொண்டிருக்கின்றன. ஆனால் ஆன்மநேய வொருமைப் பாட்டுரிமை ஓரிடத்தில் மௌனமாக நிலவுகிறது. தமிழுலகம் அருள் நிலயமாகுங் காலம் வரும். இன்னும் சில ஆண்டுகளில் சித்தாடல் எல்லாரும் அறிய விளங்கும்; காண்பீர்கள்! அருட்பாவின் ஒவ்வொரு மொழியும் நிறைவேறும்.

தங்கமே யனையார் கூடிய ஞான
சமரச சுத்தசன் மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவும், சங்கம்
சார்ந்திடுங் கோயில்கண் டிடவும்,
துங்கமே பெருஞ்சற் சங்கநீ டுழி
துலங்கவுஞ் சங்கத்தி லடியேன்
அங்கமே குளிர்ந்து நின்றனைப் பாடி
யாடவும் இச்சைகாண் எந்தாய்!

என்று வள்ளலார் அன்று முறையிட்டார். இன்று ஒவ்வொரு தமிழனும் உலகெல்லாம் இவ்விச்சை

நிறைவேற முயல்க! அருட்கலப்புடன் அருட்பணி புரிக!

ஐயாருட் சோதியா சாட்சியென தாச்சு;
ஆரணமும் ஆகமமும் பேசுவதென் பேச்சு!
எய்யுலக வாழ்விலெனக் கென்னையினி யேச்சு
என்பிறவித் துன்பமெலாம் இன்றேடே போச்சு.

என்று கைத்தாளம் போடுமின்! உலகோரெல்லாம் ஒரே அருட்குலமாக வாழ அழைமின்!

## வள்ளலார் கண்ட உண்மை யறிவு மன்றம்

வள்ளலார் வாழ்வு அருளுண்மை விளக்கம். இன்று எங்கும் சமரசம் பேசுகின்றனர். ஆனால் உண்மைச் சமரசம் ஆன்மநேய ஒருமைப்பாட்டில் தான் இயலும். அச் சமரச வழியை உலகிற்கு முதன் முதல் காட்டியது மகாத்மா இராமலிங்கமே. அதற்கான அருட்சக்தியைக் கொண்டுவந்ததும் அவரே. அவர் காட்டிய வழியை இன்னும்உலகம் அறியவில்லை. ஏனெனில் இன்னும் வெளிவேடத்திலும், வெளி ஆர்ப்பாட்டங்களிலும், தன்னலவகந்தையிலும் உலகு திரிந்துகொண்டிருக்கிறது. உள்ளொன்றுவைத்துப் புறமொன்று பேசுவோர் கூட்டத்தில் வஞ்சம், கரவு, போர், போட்டி, பொறாமை, தன்னலப்பேய்கள் தாண்டவமாடுகின்றன. உலகின் அழிநிலையை வள்ளற்பெருமான் திருவுள்ளம் எவ்வளவு தெளிவாக அறிந்துள்ளது!

"போய்விளக்கப் புகுகின்றீர், போதுகழிக் கின்றீர்"
"வட்டிமேல் வட்டிகோள் மார்க்கத்தில் நின்றீர்"

என்ற இரண்டு பாக்களையும் பார்க்கவும். வள்ளலார் வாழ்வும், மொழியும் உலகின் நச்சியல்பிற்கு அரிய மந்திரவாதி. அருட்பாவின் உண்மைப் பொருளை உருவாக விளக்கவே வள்ளலார் சத்தியஞானசபை நாட்டினர்.

அன்பீர்! எம்பெருமான் உலக சமரசத்தைக் கடவுளுண்மை, ஆன்ம அறிவு என்ற இரண்டின்மீதும் நிலைநாட்டினர். உலகெல்லாம் ஒரு கடவுள் மன்றம். அதில் அருட் சோதிக் கலப்பில் அனைவரும் எவ்வகைப் புறவேற்றுமைகளுமின்றி, சுத்த முக்த சமத்வ வாழ்வு வாழலாம் என்பதை விளக்கவே ஞான சபை ஏற்பட்டது. ஒவ்வோரூரிலும் இம்மாதிரி ஞான சபையை நிலைநாட்டவேண்டும்.

உங்களுக்கு ஓர் உதாரணம் காட்டுகின்றேன். நம் வள்ளற்பெருமான் இங்கு "உலகெல்லாம் உலாவுவோம்" என்று மறைந்த சில ஆண்டுகளுக்குப் பின்னர், துருக்கியில் பஹாய் இயக்கம் என்னும் உலக சமரச இயக்கம் தோன்றியது. பஹாயர் நமது உண்மை யறிவு மன்றம் போன்று முதலில் ஒரு ஞான சபை கட்டுகின்றனர். அதில் எவ்விதமான குறி வழிபாடு மில்லை. அதில் ஆண்டவனை எல்லாரும் சாதி சமய வேற்றுமையின்றி வழுத்துவர். அதைச் சுற்றி வைத்தியசாலை, பள்ளிக்கூடம், நீதி மன்றம், கடைகள், அச்சுக்கூடம், அன்பர் தங்குவதற்குச் சிறு சிறு மனைகள், விசேடநாட்களைக் கொண்டாடுவதற்கு மாளிகைகள் ஆகியவற்றை எழுப்புகின்றனர். அந்த நிலயம்

ஒரு பெரிய நகரமாக விளங்குகின்றது. எல்லாரும் அதில் ஒற்றுமையாக அருட்கலப்பில் வாழுகின்றனர். அமெரிக்கா, பிரான்சு, எகிப்து, துருக்கி, அரேபியாவில் அத்தகைய நிலயங்கள் உள்ளன. அம்மாதிரி ஊருக்கு ஊர் சத்திய ஞானசபையும் அதைச் சுற்றி மக்கள் வாழ்வும் அமையவேண்டும். அத்தகைய அமைவையே ஆன்மநேய வாழ்வு என்போம். இப்பெரிய காரியத்தைத் தமிழர் நிறைவேற்ற வேண்டும். இதுவே ஒற்றுமைக்கு வழி. வள்ளலாரின் திருவுள்ளம் உலகளாவியது; உலகையே ஒரு சத்திய ஞான சபையாக்கி எல்லா மாந்தரையும் அருட்கலப்பில் வாழச் செய்வது.

இப்போது உலகம் தனியகந்தை வேறுபாட்டிலேயே அல்லற்படுகிறது. தான், தனது, தனக்கு என்னும் சுயநலவுணர்வே உலகை இயக்குகிறது; எல்லாம் இறைவன். அவனருளே உலகாடல் என்னும் அருளுணர்வில் ஒன்றுபட்டு மாந்தர் வாழவேண்டும். இன்றுள்ள சமூகக்கிளர்ச்சிகள் தூலமாகச் சில காரியங்களைச் செய்யலாமே யொழிய சர்வாத்ம சமரசம் அவற்றிற்கியலாது.

அருளறிவையும் ஆன்ம நேயத்தையும் பரப்ப வேண்டும். அருட்பா படித்தால் அதன் மந்திர சக்தி புலைத்தொழிலாளரையும் புனிதராக்கும். வள்ளலார் காட்டிய அருள் மருந்தே மருந்து. அம்மருந்தைப் பல நோய்களால் வாடும் உலகிற்கு உதவுங்கள்! கையில் அருட்பாவை யெடுங்கள்! நாவால் அப் பொன்மணி வாக்குகளை அவரவர்க்குத்தெரிந்த மொழிகளிலெல்லாம் பரப்புங்கள்! தமிழ்ச் சிங்கங்களே!

இனி உறங்கலாமா? தென்னாட்டில் எத்தனையோ மலையினும் பெரிய மகான்கள் விளங்கினர், விளங்குகின்றனர்; இருந்தும் என்ன? வடவேங்கடத்திற்கும் தென்குமரிக்குமிடையே தமிழன்னை சிறைப்பட்டிருக்கிறாள். அருட்பா போன்ற அற்புத நூலை வைத்துக் கொண்டு நாம் இனி உறங்கலாமா? பிறநாட்டார் இங்கு இறக்குமதி செய்த சரக்குகளையெல்லாம் மெச்சிப்போற்றி, நம் தாய் தந்தையர் தந்த தங்க மணிகளை மூலையிற் போடலாமா? தமிழர் சமயம் அருட் சமயம். அதன் பைபிள் அருட்பா. வாருங்கள், அதை உலகெல்லாம் பரப்புவோம்!

அருட்பெருமான் திருப்பெருமை வாழ்க!
அருள் வேதமான அருட்பா வாழ்க!
தமிழ் மறை வாழ்க!

வள்ளற் பெருமானை வாழ்த்தி இச்சொற் பொழிவை முடிப்போம்.

கலகமெலாந் தீர்ந்ததினிக் கண்டுகொண்டோம் உண்மை;
கவலையொரு திவலையில்லை; காட்டினைநல் வழியே.
உலகமெலாம் அருளாட்சி ஒளிபரவி நிலவும்;
ஊனுடலும் ஒளியுடலாம், ஞானமணி விளக்கே!
விலகரிதாம் ஆன்மவொருப் பாட்டுரிமை விளங்கும்.
விஞ்ஞான வான்பொழிலில் விளைந்தசுகக் கனியே!
இலகரிய சித்துவிளை யாடுமரு ளரசே,
இதுதருணம் எழுந்தருளிப் போது நடனம்புரியே.

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை!

---

ஓம் சுத்த சக்தி

# அன்பு நிலய வெளியீடுகள்

## சுவாமி சுத்தானந்த பாரதியார்

அவர்கள் இயற்றியவை

---

| | | | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| 1. | பைந்தமிழ்ச் சோலை | 2-ம் பதிப்பு | ... | 0 | 4 |
| 2. | அருட்சுடர் | 2-ம் பதிப்பு | ... | 0 | 12 |
| 3. | இன்பமாலை (கலிக்கா) | ,, | ... | 0 | 6 |
| 4. | தரும ஸாதனம் | | ... | 0 | 2½ |
| 5. | உடலுறுதி | 2-ம் பதிப்பு | ... | 1 | 0 |
| 6. | பொதுநெறி உரையுடன் | ,, | ... | 0 | 2 |
| 7. | திருக்குற ளின்பம் (ராப்பர்) | ,, | ... | 1 | 4 |
| | ஷை (கலிக்கா) | ,, | ... | 1 | 12 |
| 8. | இன்று மனிதனும் இனிவரும் மனிதனும் | ,, | ... | 0 | 6 |
| 9. | வரகவி தாகூர் | | ... | 0 | 3 |
| 10. | தியானமாலை | | ... | 1 | 0 |
| 11. | புதுமையும் பழமையும்(நாடகம்) | 2-ம் பதிப்பு | ... | 0 | 8 |
| 12. | திருநூல் அல்லது தூயவாழ்வு | ,, | ... | 1 | 0 |
| 13. | புத்தர் கருணை (நாடகம்) | | ... | 0 | 8 |
| 14. | தமிழுணர்ச்சி | | ... | 1 | 0 |
| 15. | யோக சித்தி | | ... | 2 | 8 |
| 16. | அரவிந்த யோக தீபிகை | 2-ம் பதிப்பு | ... | அச்சில் | |
| 17. | மஹாகவி காளிதாசன் | | ... | 1 | 4 |
| 18. | வசந்த சுந்தரி (நாடகம்) | | ... | 0 | 10 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 19. | நாடகக் கலை | 2-ம் பதிப்பு | ... | 0 | 3 |
| 20. | மஹரிஷி தாயுமானார் | ,, | ... | அச்சில் | |
| 21. | ஏழை படும் பாடு | ,, | ... | அச்சில் | |
| 22. | பக்திப் பரவசம் பாமலர்—௧ | | ... | 0 | 10 |
| 23. | குழந்தை யின்பம் பாமலர்—௨ | | ... | 0 | 3 |
| 24. | அன்பின் அற்புதம் (நாடகம்) | | ... | 0 | 10 |
| 25. | சிலம்புச் செல்வம் | | ... | 1 | 12 |
| 26 | சிவாஸ்திரம் (நாடகம்) | | ... | 0 | 8 |
| 27. | இளிச்சவாயன் | | ... | 1 | 0 |
| 28. | அன்னை | | ... | 0 | 4 |
| 29. | திருமணப் பாட்டு பாமலர்—௩ | | ... | 0 | 4 |
| 30. | பேரின்பம் பாமலர்—௪ | | ... | 0 | 4 |
| | ஹிந்தி அவசியமா ? | | ... | 0 | 4 |
| | நீதிவாக்கியம் பொது நெறி | தாள் 1-க்கு | ... | 0 | ½ |
| | ,, யோக சித்தி | ,, | ... | 0 | ½ |
| | சுவாமிஜி கலர் படம் | | ... | 0 | 2 |

குறிப்பு :—மேற்கண்ட நூல்களை அடியில் குறிப்பிட்டிருக்கும் எங்கள் விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**அன்பு நிலயம்,**

இராமச்சந்திரபுரம்,

**புதுக்கோட்டை சமஸ்தானம்**